# மழையும் புயலும்

வ.ரா

# மழையும் புயலும்

2:75

வ. ரா.






ஜார்ஜ் டவுன், சென்னை



…e, yet
…yet there
…red and odd
…d a place in

—*The Free India.*

# நடைச் சித்திரம்

ஆசிரியர் - வ. ரா.

தமிழர் வாழ்க்கையிலிருந்து தேர்ந்தெடுத்த 37-சித்திரங்களை ஆசிரியர் இந் நூலில் அளித்திருக்கிறார். தமிழ் நாட்டு யுவர்களும் யுவதிகளும் மட்டுமல்லாமல், தாத்தாக்களும் பாட்டிகளும்கூடப் படித்து அனுபவிக்கவேண்டிய புஸ்தகம்.

**250 பக்கம் :: விலை ரூ. 1-8-0**

இந் நூலைப் பற்றிய சில மதிப்புரைகள் வருமாறு:

'இந்த "நடைச் சித்திரம்" தமிழ் இலக்கியத்தில் நிரந்தரமாக உயர்ந்த ஸ்தானத்தை வகிக்கும்.......புஸ்தகத்தைக் கையில் எடுத்தால் முழுதும் படிக்காமல் கீழே வைக்க மனம் வராது.'

—தினமணி.

'ஸ்ரீ. வ. ரா. படமெழுதும் சித்திரகாரரல்லர்; பேனு முனை எழுத்துக்களால், சித்திரகாரனையும்விடச் சிறந்த படங்களை - அகக் கண்ணில் பதியவல்ல சிறந்த காட்சிகளை - எழுத வல்லவர் அவர்.........அதிக மதிப்பு வாய்ந்த இச் சிறந்த நூலுக்கு அதிக மதிப்புரை அனவசியம்.'

—பாரத தேவி.

'அவருடைய நடையின் அழகை அனுபவிக்க 37-சித்திரங்களையும் படிக்கவேண்டுமே தவிர மேற்கோள் காட்டிப் பயனில்லை.'

—ராஷ்டிரவாணி.

'These thirty-seven sketches of **Natai-c-cittiram** constitute a wide range of characters and they give delightful pictures of the several aspects of contemporary life in the country as well as in towns.'

—*The Hindu.*

'. . . . What magnificent figures does he create - figures that pulsate with life, figures of flesh and blood, figures that move round us every day, figures that reflect the many facets in Tamil life! . . . . It is no thriller, but you are loth to leave it in the middle. It is not poetry, but yet you are transported to emotional heights. It is not a book of funny yarn, yet you laugh and laugh. It is no romance, yet you feel charmed and elated. It is not didactic, and yet there runs a kind of philosophy throughout the two hundred and odd pages. It is a book, in short, which should find a place in every home and in every library.'

—*The Free India.*

# நவயுகப் புஸ்தகங்கள்

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| 1. | புதுமைப் பித்தன் கதைகள் (பரிசுப் பதிப்பு) | 2 | 12 |
| | ஷை (கலிகா ராப்பர்) | 2 | 0 |
| 2. | பெண் | 1 | 12 |
| 3. | கிரஹதாகம் பா. I | 1 | 12 |
| | ஷை பா. II | 1 | 12 |
| 4. | சுகம் எங்கே? | 1 | 12 |
| 5. | அன்னா | 1 | 12 |
| 6. | ரஜபுத்திர ஆதிக்கத்தின் அஸ்தமனம் | 1 | 12 |
| 7. | மகாராஷ்டிர ஜீவன் உதயம் | 1 | 12 |
| *8. | கம்பன் கவிதை | 1 | 8 |
| 9. | கட்டபொம்மு | 1 | 8 |
| 10. | வின்ஸ்டன் சர்ச்சில் | 1 | 8 |
| 11. | பேவிஸ்ட்ஜடாமுனி | 1 | 8 |
| 12. | நடைச் சித்திரம் | 1 | 8 |
| 13. | மழையும் புயலும் | 1 | 8 |
| 14. | மேனாட்டு ஞான மலர்கள் | 1 | 8 |
| 15. | தேவதாஸ் | 1 | 0 |
| 16. | உலகத்துச் சிறு கதைகள் | 1 | 0 |
| 17. | பாகிஸ்தான் | 1 | 0 |
| 18. | வெற்றி யாருக்கு? | 0 | 12 |
| 19. | கோயரிங் | 0 | 12 |
| 20. | மாகாண சுயாட்சி | 0 | 8 |
| 21. | தேய்ந்த கனவு | 0 | 8 |
| *22. | சீனா-ஜப்பான் | 0 | 8 |
| *23. | மைக்கேல் காலின்ஸ் | 0 | 8 |
| 24. | எல்லோரும்ஓர்குலம் | 0 | 8 |
| 25. | வார்தா திட்டம் | 0 | 8 |
| *26. | இரட்டை மனிதன் | 0 | 8 |
| 27. | பொம்மையா மனைவியா? | 0 | 8 |
| *28. | கப்சிப் தர்பார் | 0 | 8 |
| 29. | லெனின் | 0 | 8 |
| 30. | ஸப்த நதிகள் | 0 | 8 |
| 31. | மேஹர் உன்னிஸா | 0 | 8 |
| 32. | திரிபுரி காங்கிரஸ் | 0 | 6 |
| 33. | நாம்எங்கிருக்கிறோம் | 0 | 4 |
| 34. | மதனி | 0 | 4 |
| 35. | ஆறு கதைகள் | 0 | 4 |
| 36. | விவாகமானவர்களுக்கு ஒரு யோசனை | 0 | 4 |
| 37. | சைவ உணவு எது? | 0 | 4 |
| 38. | அடிமைத் தாய் | 0 | 3 |
| 39. | பக்த குசேலா | 0 | 3 |
| 40. | நாசகாரக் கும்பல் | 0 | 3 |
| 41. | வ. ரா. சரிதம் | 0 | 2 |
| 42. | மந்தரை சூழ்ச்சி | 0 | 2 |
| 43. | ஆர்க்கிமிடீஸ் | 0 | 2 |
| 44. | சுகாதாரச் சட்ட விளக்கம் | 0 | 1 |

* இக் குறியிட்ட புஸ்தகங்கள் செலவாகிவிட்டன.

நவயுகப் பிரசுராலயம் லிமிடெட்

2/28, மூக்கர் நல்லமுத்து தெரு

ஜி. டி., சென்னை.

# சமர்ப்பணம்

தேசபக்தி, தன்னல மறுப்பு, சிந்தனைத் தெளிவு
இவைகளுக்கு இலக்ஷணங்களாக விளங்கும் எனது
நண்பர்களும், இரட்டையர்களுமான

'தினமணி'

சொக்கலிங்கம்

சிவராமன்

இவர்களுக்கு இந்த நூல் காணிக்கை

'ஹிந்துஸ்தா'னில் வெளிவந்த கீழ்க்கண்ட கட்டுரைகள் ஆசிரியரின் அன்பார்ந்த அனுமதியுடன் இத்தொகுதியில் சேர்க்கப்பட்டிருக்கின்றன :

'இந்தத் தேசம்......!'
'மல்லிக் கிணறு கிளப்'
'கடல் வெளிக் கதை'
'சுதந்திரமும் நிர்வாகமும்'

# பொருளடக்கம்

முகப்புப் படம் — வ. ரா.

# வ. ரா.

## அவர் கருத்தும் கலையும்

மனிதனுடைய வளர்ச்சியை இரண்டு சக்திகள் தூண்டுகின்றன. ஒன்று உணர்ச்சி; மற்றொன்று அறிவு - யோசித்து முடிவுகட்டும் தர்க்க அறிவு. பொதுவாக, இந்த இரண்டு அடிப்படைகளின் பேரிலேதான் மனிதன் கட்டிக்கொண்டே போகிறான். கலை, உணர்ச்சியின் விரிவு; விஞ்ஞானம், கைத்தொழில், சட்டம், சமூக அமைப்பு இவை அறிவின் இயக்கம். இரண்டு சக்திகளும் வேறு, ஒன்று என்ற விவாதம் இங்கு தேவையில்லை.

இந்த இரண்டு சக்திகளும், ஜோடிக் காளை போல், ஒன்றுபட்டு முன்னேறிய நம் நாட்டிலே, இடையில் ஒரு பெரிய தேக்கம் உண்டாகிவிட்டது. ஏனோ—யார் கண்டது? ஆனால் தேக்கமான நிலை எப்பொழுதுமே நீடிப்பதில்லை. எனவே, நம் நாட்டில் புதியதோர் விழிப்பு ஏற்பட்டதும், இந்த இரண்டு சக்திகளும் சுறுசுறுப்படைந்தன. இந்தத் தேக்கத்தைக் குத்திக் கிளறுவதிலேயே கவனம் திரும்பிற்று. பாரதியார் உணர்ச்சியின் குரலானார். தம் கவிதை கட்டுரைகள் மூலமாக, நாடு ஆத்ம சுயராஜ்யத்தோடு அகில சுயராஜ்யமும் அடையவேண்டிப் பாடினார். புதுமையும் புரட்சியும் பிறக்கவேண்டுமென்று கூவினார்.

> பார்ப்பானை ஐயரென்ற காலமும் போச்சே — வெள்ளைப்
> பரங்கியைத் துரையென்ற காலமும் போச்சே!

என்று ஆரம்பித்து, பாரதியார் புது யுகத்தை வரவேற்றுப் பாடிய பொழுது, நம் வாழ்க்கையின் எல்லா அம்சங்களிலும்

ஏற்பட்டு வரும் — ஏற்பட்டு வரவேண்டிய — பெரும் மாறு தலைப் பறையடித்தார். சுதந்திரமும் சுயேச்சையும் விரும் பும் அரசியல்வாதி, சமூக விஷயத்தில் பிற்போக்காளனாக இருக்க முடியாது, இருக்கக் கூடாது. சமூக விஷயத்தில் புரட்சியை வேண்டினால், இறுதியில் பொருளாதாரப் பொது உடைமையில் இறங்கியே ஆகவேண்டும்.

இந்த மாதிரி உணர்ச்சிகளின் இயக்கத்திற்கு பாரதி யார் பிரதிநிதியானார். அவருடன் நெருங்கிப் பழகிய தோழர் வ. ரா. இந்த மாதிரி சிந்தனைகளுக்குப் பிரதிநிதி யான ஒரு முழுப் புரட்சிக்காரர். பாரதியாருக்கு உணர்ச்சி எப்படியோ, அப்படி வ. ரா.வுக்குச் சிந்தனை. இந்த சிந்தனா சக்தியைத் தூண்டி புரட்சி உண்டுபண்ணுவதே வ. ரா.வின் நோக்கம். உணர்ச்சி, கடப்பாரையைப் போல, அப்படியே முழுசு முழுசாகப் பெயர்த்துத் தள்ளும். ஆனால் கடப் பாரைக்கு அசையாத பொருள்களும் உண்டு. அவை ஒரு வேருக்கு அசைந்துவிடும். அந்த வேரைப் போன்றது அறிவு. அறிவைக் கொண்டு ஜனங்களின் தேக்கத்தைக் கலைப்பதென்றால், நம் சொல்லையும், செயலையும், மனப் போக்கையும் சிந்தனையின் கருக்குக்கு எதிரே நிறுத்த வேண்டும். ஆகையினால்தான் வ. ரா.வின் எழுத்தும் பேச் சும் இந்த வேலையிலேயே ஈடுபட்டு நிற்கின்றன. வண் ணாந்தை போல அசையாமல் கிடக்கும் அறிவைத் தூண் டாத எழுத்தையோ பேச்சையோ அவரிடம் எதிர்பார்க்க முடியாது. அவர் எழுதுவதில் எவ்வளவு வல்லவரோ, அவ் வளவு வல்லவர் பேச்சிலும். அவர் வாதங்களில் காணப்படும் புதுமையும் வலிமையும் கிளர்ச்சி உண்டாக்கும்.

ஓர் உதாரணத்தைப் பார்ப்போம். வீட்டுக் கூடத்தில் மாட்டியிருக்கும் சட்டையிலுள்ள பணம் காணமல் போனல் யார் பொறுப்பாளி ? கை-நீளக்காரன் என்று பழி சுமத்து

வோம். வ. ரா. பிரமிக்கத் தக்க வேறு இரண்டொரு உண்மைகளை வற்புறுத்துவார். பத்துப் பேர் வரக்கூடிய இடத்தில் பணம் வைப்பவனை பொறுப்புள்ளவன் என்று சொல்ல முடியுமா? இப்பால் பணம் திருட்டுப் போய்விட்டால், திருட்டுக்கு முக்கிய காரணமாயிருந்த குற்றம் இவனுடையதல்லவா? நமது நாட்டின் தற்பொழுதைய குறைவே இங்கு தெளிவாகிறது. நமது பொறுப்புக்களை மறந்து, உரிமைகளை மட்டும் கொண்டாட ஆரம்பித்ததிலிருந்து நமது வீழ்ச்சி உண்டாயிற்று. இம்மாதிரி நம்முடைய தினசரிச் செய்கைகளைச் சிந்தனையின் ஆட்சிக்கு உட்படுத்தத் துவக்கினுல் வாழ்க்கையில் ஓர் புரட்சி ஏற்பட்டுவிடும். நாம் சிந்தனையே செய்வதில்லை என்பது வ. ரா.வின் வருத்தம். இந்தத் துறையில் தூண்டி, சமூகத்திற்கு வைத்தியம் செய்யப் பிறந்தவர் வ. ரா. அறிவை நம்புவதனுல்தான் வ. ரா. 'அதிருஷ்டம்' என்றுல் சீறி விழுகிறுர்; கையைக் கட்டிக்கொண்டு, 'காலம் வரணும்' என்று திண்ணை வேதாந்தம் பேசினுல் காறி உமிழ்வார்; சடங்கு, சம்பிரதாயங்கள், வைதீகம் என்றுல் கண்ணெடுத்துப் பார்ப்பதில்லை. மதிக்கு எதிரில் விதி செல்லாது.

இந்தச் சிந்தனைகளை ஜனங்களுக்குப் புகட்டச் சிறந்த சாதனம் கலை. வாழ்க்கைக்கு வழிகாட்டியாய், வாழ்க்கையைப் பண்படுத்தும் கருவி கலை. அப்படித்தான் கலை இருக்க வேண்டியதென்பது வ. ரா.வின் வாதம். 'கலை என்பது பிரசாரம். இந்தக் கொள்கையை ஒட்டியே வ. ரா. எழுதி வந்திருக்கிறுர். ஆதியில் எழுதிய 'சுந்தரி அல்லது அந்தரப் பிழைப்பு' முதல், ரேடியோவில் வெளியான 'மார்த்தாண்டன் வரலாறு,' 'ஆண்டாள்' வரையில், புதுக் கருத்தோ பிரசாரமோ இல்லாமல் அவர் எழுதியதே இல்லை. வெறுமனே பொழுது போக்குக்காகவோ, ஜனங்களுடைய நப்

பாசைகளைத் திருப்தி செய்வதற்காகவோ எழுதப்படுபவை களை அவர் வரவேற்பதில்லை. அதெல்லாம் 'ஆர்ட்!' என்று புரளி செய்வார் : வர்ணனை என்று நயமாக நிந்திப்பார்.

கலைக்குத் தாய்ச் சரக்கு இயற்கை. அதைப் பற்றிய பரம ரகஸியத்தை வ. ரா. ஒரு தரம் வெளிப்படுத்தினர். மலை, பூ, குயில், மயில், ஆறு என்று ஏன் கொண்டாடுகிறார் கள்? அவைகளுக்கு சுயமாக இயங்கும் சக்தி இல்லை என் பதனால்தான். ஆகையினால், சொந்தமாக இயங்கும் சக்தி இல்லாத கலைஞர்கள் தங்களைப் போலொத்த பொருள்கள் மீது மோகம் கொள்வதில் வியப்பென்ன? இந்த மாதிரிக் கலைஞர்கள் இரண்டாம் தரமானவர்கள் என்றுகூடக் கருதுகிறார் என நினைக்கிறேன். ஆனால் உண்மையான கலை ஞன் — கத்திக்குப் பதில் பேனாவால் புது யுகத்தை உண் டாக்கப் பார்க்கும் எழுத்தாளன் — மனிதனுடைய கிரியா சக்தியை எழுப்பவேண்டும். குயிலும் மயிலும் அந்த மாதிரி வேலைக்குத் தகுந்த கருவி அல்ல.

வ. ரா.வின் எழுத்துக்கள் எல்லாம் மனிதனுடைய சிந்தனைகளைக் கிளறுவதாகவே அமைந்திருக்கின்றன. அவர் எழுதிய நாவல், நாடகம், அளவற்ற கட்டுரைகள், பத்திரி கைத் தலையங்கங்கள் எதுவாயினும் சரி, கூனிக் குறுகிய நமது முதுகெலும்பை நிமிர்க்காமல் போகாது. அவர் எழுத் துக்களைப் பற்றிப் பேசுவதில் ஒரு சிரமம் இருக்கிறது. அவை பல பத்திரிகைகளில் சிதறிக் கிடப்பதால் முழு நோக் கோடு இங்கு விஸ்தாரமாய்ப் பேச முடியவில்லை. நல்ல வேளையாக, இந்தக் குறையைத் தீர்க்க நவயுகப் பிரசுரால யத்தார் முன்வந்திருப்பது பெரு மகிழ்ச்சி அளிக்கிறது.

வ. ரா. புதுமையான பல துறைகளில், 'முதல் ஏர்' பிடித்திருக்கிறார். தமிழுக்குப் புதிதான 'நடைச் சித்தி ரத்தை' வெற்றியுடன் கையாண்டவர் இவர்தான். பால்

காரன் முதல் பத்திராதிபர் வரையில் சமூகத்தின் பல பிரதி நிதிகளைப் பற்றியும், ஈ. வெ. ரா. முதல் ஸி. ஆர் வரையிலு முள்ள பல தமிழ் நாட்டுப் பிரமுகர்களைப் பற்றியும் வெகு நுட்பத்துடன் குணசோதனை செய்து, அதிசயிக்கத் தக்க சொல் - சித்தரங்கள் எழுதியிருக்கிறார். இங்கிலாந்தின் கீர்த்தி வாய்ந்த ஏ. ஜி. ஜி.யைப் போல் நம் நாட்டில் யார் எழுதுகிறார்கள் என்று அலட்சியமாய்க் கேட்பவர்களுக்கு வ. ரா. வின் நடைச் சித்திரங்களைக் காட்டுங்கள்.

வ. ரா.வின் நடை எளிதானது, சக்தியுள்ளது. அவர் சிந்தனைக்கு முதல் இடம் தருவதினால், ஒரு சிலருக்கு மட்டுந்தான் அவர் எழுதுவது புரியுமோ என்று சந்தேகப்பட வேண்டியதில்லை. நூற்றுக்குத் தொண்ணூற்றென்பது பேராவது படித்துப் புரிந்துகொள்ளவேண்டு மென்பதே அவர் நோக்கம். சகஜமாய்ப் பேசும் பாஷையைத் தவிர வேறொன்றையும் அவர் தீண்டுவதில்லை. தம் முழுப் பெயரையே சுருக்கிக்கொண்டுவிட்டவர் வார்த்தைகளைக் கொட்டிக் கொட்டி அளக்காமலிருப்பதிலும் விந்தை இல்லை. அவர் கருத்துக்கள் திட்டமானவை; குழப்பமோ சந்தேகமோ இருக்காது. அவர் மணி மணியாக எழுதும் கை எழுத்துக் கூட இந்தத் தன்மையைப் பிரதிபலிக்கிறது; அதில் அடித்தல் திருத்தலே கிடையாது. அவ்வளவு முடிவாக எழுதுவார். கருத்துக் குறைவை இட்டு நிரப்ப அலங்காரங்களாகக் குவிக்கிறார்களே சிலர், அந்தக் குறை இவரிடம் இல்லை. சந்தியோ இலக்கணமோ அவர் நினைப்பதற்கு இடைஞ்சலாயிருந்தால், கூசாமல் அவற்றை ஒதுக்கிவிடுவார். படிப்பவனுக்கும் எழுத்தாளனுக்கும் இடையில் இலக்கணப் பூசாரிக்கு என்ன வேலை?

தற்காலத் தமிழ் இலக்கியத்தின் சரித்திரம் எழுதப்படுமானால், இவர் கட்டுரைகளுக்கு நிச்சயமாய் அதில் இடம்

உண்டு. சிந்தனை செய்பவர்களைப் பற்றிப் பேச்செழுந்தால், வ.ரா.வை மறக்க முடியாது. வசன நடையைப் பற்றி நினைத்தால், வ. ரா. வுக்கு முன்னணியில் ஸ்தானம் கொடுத்தே தீரவேண்டும்.

வ. ரா. தான் நம்முடைய பர்னார்ட் ஷா.

ந. பிச்சமூர்த்தி



# 1. மழையும் புயலும்

'இயற்கைத் தாயின் கோபத்தை யாரால் தாங்க முடியும்? அற்ப மனிதன் சர்வாதிகாரியாகி, ஆடம்பரத்துடன் ஆட்சி செய்து, ஏனையோரை அடிமைகளாகச் செய்துவிடலாம். ஆனால், இயற்கைத் தாய் உளங் கொண்டால், சர்வாதிகாரிகளும் மண்ணோடு மண்ணாய்க் கலந்து போக வேண்டியதுதான். இயற்கை கொடிய காளி; அவளே இன்னமுதூட்டி; மாந்தர்களாகிய மதலைகளைப் பரிவுடன் வளர்க்கும் தெய்வீகத் தாய்.

இவ்வாறு வாய்விட்டுப் பேசிக்கொண்டிருந்தான் விசுவநாதன். இவன் இவ்வாறு பேசிக்கொண்டிருந்ததற்கு, காரணம் அவனைத்தான் கேட்கவேண்டும். உள்ளத்திலே உணர்ச்சி எழுவதற்கும் அறிவிலே கருத்தும் கற்பனையும் தோன்றி மறைவதற்கும் காரணத்தைத் தேட முயலுவது வீணான வேலை.

'என்ன பிரசங்கம் செய்கிறாய்?' என்றான் விசுவநாதனது நண்பன் சிதம்பரம். விசுவநாதன் எம். ஏ. படிக்கிறான். சிதம்பரத்துக்கு ஒரு கம்பெனியில் வேலை. இருவரும் தனியாக ஓர் அறையை வாடகைக்கு எடுத்துக்கொண்டு, சென்னையில் இருக்கிறார்கள்.

'நீ இருந்தது ஞாபகமில்லை' என்று விசுவநாதன் பதில் சொல்லவே, சிதம்பரம் சிரித்துக்கொண்டு, 'நாம் காரியம் செய்யும்பொழுது, உலகத்தில் மற்றவர்

களும் உயிருடன் இருக்கிறார்கள் என்ற நினைப்பு இருக்குமாகில், நம்மால் எத்தனையோ தவறுகளைத் தவிர்க்க முடியும்' என்றான்.

'உன் நினைவு இல்லாமல், நான் ஏதோ சொல்லிக் கொண்டிருந்தேனே, அதைத்தான், வேறு பாஷையில் நீ வியாக்கியானம் செய்கிறாய். நல்ல வேளை! நான் கேட்பேன் என்று தெரிந்தே, நீ இவ்வாறு பேசினது எனக்கு ரொம்ப சந்தோஷம். பிரசங்கம் என்கிறாயே! இது கிறிஸ்துமஸ் வார மல்லவா? நாடெங்கும் பிர சங்கம் நடக்கும் பொழுது, நம்ம ரூமில், ஏன் பிரசங் கம் நடக்கக் கூடாது?' என்றான் விசுவநாதன்.

'உன் பிரசங்கத்துக்கு நானுமா பலியாக வேண் டும்? நாம் பார்த்த கூட்டமும், கேட்ட கூச்சலும் போதாதா? இன்னும் கொஞ்ச காலம் உயிருடன் இருக்கவேண்டும் என்று ஆசை. அந்த ஆசைகூட என்னுடைய நன்மைக்காக அல்ல. என்னை யாராவது ஒரு பெண் கலியாணம் பண்ணிக்கொள்ள வேண்டும் என்று மானஸீக பூஜை செய்துகொண்டிருப்பாளே, அவளுக்கு ஆசாபங்கம் நேரிடப்படாதே என்று, நான் உயிருட னிருக்கத் தீர்மானித்திருக்கிறேன். நீயும் பிர சங்கம் செய்து என்னைக் கொன்றுவிடாதே!' என் றான் சிதம்பரம்.

'பிரசங்கத்தைக் கண்டு பயப்படுகிறவனா பெண்ணை மணந்துகொண்டு பயப்படாமல் இருக்கப் போகிறாய்?' என்று விசுவநாதன் குத்தலாகப் பேசி னான். ஆனால் அன்பு இருக்கிற இடத்தில், குத்தலா கப் பேசின வாயை முத்தமிடத் தோன்றுமே யொ ழிய, அதை ஊசி நூல் போட்டுத் தைத்துவிட எவ ருக்கும் தோன்றாது. 'பெண் தெய்வங்களைக் கண்டு

பயப்பட வேண்டாம். கும்பிட்ட கையை வெட்டித் தள்ள எந்தத் தெய்வமும் துணியாது' என்றான் சிதம்பரம்.

இருவரும் சிரித்தார்கள். வார்த்தைக்கு வார்த்தை சரியாய்ப் போனால், ஒன்று சிரிக்க வேண்டும், அல்லது கை கலந்து சண்டை போடவேண்டும். எல்லா வாக்குவாதங்களின் முடிவுகளும் இவைதான். நண்பர்களின் அன்பு, கூலிப் பட்டாளத்தின் விசுவாசமல்ல. உடல், பொருள், ஆவி மூன்றையும் ஏக காலத்தில் தியாகம் செய்யத் தயார் என்று வெறுங் கூச்சல் போடும் அகம்பாவிப் பிரசங்கிகளின் வாய்ச் சொல் அன்பு அல்ல. ஒருமனப்பட்ட அன்பர்களாதலின் அவர்களால் சிரிக்கத்தான் முடியும்.

## II

சிதம்பரம் சொல்லுகிறான்: 'அதிருக்கட்டும், விசு! சென்னையில் புயல்காற்று அடித்த பொழுது, அடைமழை விடாமல் பெய்ததே, அப்பொழுது நீ அதிசயங்களைப் பார்த்ததாகச் சொன்னாய். எத்தனையோ தடவைகள் கேட்டும், "இப்போ, அப்போ" என்று ஏமாற்றுகிறாயே! இந்தியா மந்திரி ஹோர் ஏமாற்றுகிறார் என்று மட்டும் வாய்கிழியச் சொல்ல உனக்கு அதிகாரம் யார் கொடுத்தார்? தனக்கு ஒரு சட்டம், பிறருக்கு ஒரு சட்டம்—இப்படித்தான் எல்லாரும் செய்கிறார்கள். ஆனால் பிறரைக் குறைகூறுவதில் மட்டும் பின்வாங்குவதில்லை!'

'பலே, சிதம்பரம்! இந்தப் பேச்சுக்கு, அடுத்த ராஜா பிறந்த நாள் காலத்தில் உனக்கு ஒரு பட்டம் நிச்சயமாய்க் கிடைக்கும். அதுகூடக் கொஞ்சம்

தவறு. இப்படி நீ வெளியே பிரசங்கம் செய்தால் நீ கம்பெனி வேலையில் திண்டாட வேண்டியதில்லை. போ, வா என்று தமிழில் சொல்லத் தெரியாத துரைமார்கள், தமிழ் நாட்டில் ஜில்லா கலெக்டர்களாக வேலை பார்க்கிற பொழுது, உனக்கா அந்த வேலைக்குத் தகுதியில்லை? உன்னுடைய அபூர்வமான மூளையை, இந்த அறைக்குள்ளே, வாடி வதங்க விடுவது தர்மமல்ல. உலகத்துக்கு நஷ்டமாகாவிடினும், தமிழ் நாட்டுக்கு நஷ்டம்!' என்றான் விசுவநாதன்.

'"நாளைத் தெரியுமடா மாலியவான் பேச்சு" என்று மாலியவான் இராவணனிடத்தில் சொன்னது உனக்கு ஞாபக மிருக்கட்டும். என் கம்பெனி வேலையைப் பழிக்கிற நீ நாளைக்கு என்ன செய்யப் போகிறாய் என்று கொஞ்சம் கற்பனை செய்து பார். இப்பொழுது அறையிலிருக்கிற நீ நாளைக்கு அம்பலத்துக்கு வருகிறபோது சொல்லுகிறேன். துள்ளுகிற மாடு பொதி சுமக்காமல் போகாது!' என்றான் சிதம்பரம்.

'உன் ஆசீர்வாதத்துக்கு வந்தனம்! நீ சொல்லுகிற பொதியை, பொறுப்பைத் தூக்கிச் சுமப்பதில் நான் பின்வாங்க மாட்டேன். நான் காலேஜ் படிப்பை நம்பினவனல்ல. நான் இயற்கைத் தாயின் கருணையை நம்பினவன். அவளுடைய கருணை இல்லாமற் போனால் சென்ற வாரம் சென்னை பாழாய்ப் போயிருக்குமே!' என்று விசுவநாதன் இன்னும் ஏதோ சொல்லப் போகையில், 'அந்தக் கதையைத்தான் கேட்டேன், சொல்' எனச் சிதம்பரம் குறுக்கிட்டான்.

'நீயும் விடமாட்டாய். நானும் சொல்லாம லிருக்க முடியாது. சரி, சொல்லுகிறேன், கேள்!' என்றான் விசு.

'அப்பா! தேர் நிலையை விட்டுப் பெயர்ந்தது!' என்று பெருமூச்சு விட்டான் நண்பன்.

III

விசுவநாதன் சொல்லுகிறான்: 'எச்சரிக்கை யில்லாமல் இயற்கைத் தாய் எந்தக் காரியத்தையும் செய்வதில்லை. எச்சரிக்கை செய்தால் எதிரி விழித்துக்கொள்வான் என்று அற்ப மனிதன் எண்ணிக்கொள்வான். எல்லையற்ற கருணையும் இணையில்லாத சக்தியும் வாய்ந்த இயற்கைத் தாய் யாருக்குப் பயப்பட வேண்டும்? ஆகாயம் குழம்பிக்கொண்டிருந்ததே இயற்கையின் எச்சரிக்கை யாகும். ஆனால் எச்சரிக்கையை அனுசரித்து நடப்பவர்கள் ஒரு சிலர்கூட இருக்க மாட்டார்கள். கல்லையும் கர்டரையும், மண்ணையும் சாந்தையும் குழைத்துக் கட்டி, வீடுகள் அமைத்துக்கொண்டால் பாதுகாப்பு ஏற்பட்டதாக எண்ணி ஏமாந்துபோகும் மனிதர்களைப் பற்றி என்ன சொல்வது?

இந்த மனிதர்களுக்கும் இயற்கைக்கும் என்ன சம்பந்தம்? நெருப்பு என்றால் வாய் முழுதும் தீப்பட்டு எரிவதாகத் தியானம் செய்துகொள்ளும் மனிதர்களுக்கு, இயற்கையின் சக்தியை உணரத் தைரியம் ஏது? இயற்கையின் எச்சரிக்கையை அறிந்துகொள்ள, இவர்களுக்கு யோசனைத் திறன் ஏது? வந்ததை அனுபவிக்கவேண்டும் என்று வெடவெடத்து வாய்க் கூச்சல் போடும் மாந்தர்களை வேரோடு பறித்தெறியாமல் வைத்திருக்கும் இயற்கைத் தாயின் கருணைதான் என் கண்ணில் படுகிறது.'

'விசு, என்னமோ சொல்லிக்கொண்டு போகிறாயே! நான் இருப்பதை நீ மறுபடியும் மறந்து

போனாயா? நீ சொல்ல வாயெடுத்துத் துவக்கியதை யும் நீ மறந்துவிட்டாயா?' சென்னைப் புயலை அனு பவித்ததற்காகவா இவ்வளவு பீடிகையுடன் பேசு கிறாய்?' என்றான் சிதம்பரம்.

'தயை செய்து மன்னித்துவிடு. நம்ம ஜனங் களின் நினைப்பு வந்தால், எனக்குப் பொய் மறதி உண் டாகிவிடுகிறது. ஆனந்தத்தால் அல்ல, சலிப்பினாலே! இந்தக் குறையை நான் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். இது குறை என்று சொல்லாவிட்டால், நீயும் மற்றவர்களும் என்னை லேசில் விட்டுவிட மாட்டீர்கள். சொல்லுகிறேன், கேள்!' என்று விசுவ நாதன் சொல்லுகிறான்:

'புயலும் மழையும் கூடிக் குலாவிக்கொண்டு சென்னை நகரத்தைத் தகர்த்துத் தள்ள எத்தனித்த வுடனே, அவைகளை நேருக்கு நேராய் அனுபவிக்க வேண்டும் என்று ஆசைப்பட்டேன். கடற்கரைக் குப் போகலாம் என்று எண்ணினேன். வீடுக ளில்லாத கடற்கரைக்குப் போக மனமில்லை. ஏன்? ஒண்டுவதற்காக அல்ல. மாட மாளிகைகளும் அவை களில் திமிர் பிடித்து வாழும் அற்ப மனிதர்களும் என்ன பாடு படுகிறார்கள் என்று பார்ப்பதே என் ஆவல்.'

## IV

'கடல் குடைந்து வந்திருக்கும் ராயபுரத்துக்குப் போய், நான் அனுபவித்த காட்சியை வர்ணிப்பதற்கு எனக்குக் கற்பனையுமில்லை, சொல் வர்ணனைத் திற னும் கிடையாது.

'சந்தை இரைச்சலைப் பெரிதாகச் சொல்லுகிறார்கள். இடியைப் பெரிதாகக் கொண்டு பயப்படுகிறார்கள். இரவுகளில் சத்த பேதங்கள் இருக்கின்றனவே! புயல்கண்ட கடலின் கூக்குரல் ஒரே சுரம், ஒரே சுருதி. அந்த ஒலியின் உச்சஸ்தானம் மனிதன் கற்பனைக்கும் தொண்டைக்கும் எட்டாதது. இரத்த வெறி கொண்ட சேனை 'ஓ' என்று ஒரே காலத்தில் தொண்டை கிழியச் சத்தம் செய்தால் எவ்வாறு இருக்கும்? இது ஓர் உவமை. இந்த உவமையை ஆயிரக் கணக்கில் பெருக்கிக்கொள். அப்பொழுது ஏதோ நிதானம் உண்டாகலாம். மனிதர்களின் பாபத்தை அடியோடு அழிக்க வந்த தெய்வச் சேனையின் வெற்றி முழக்கம் போல் இருந்தது கடல் செய்த பேரொலி.

'இந்த ஒலியைக்கேட்டு ஆனந்தம் அடைவதற்கு நம்ம ஜனங்களுக்குச் சக்தி யிருக்குமா என்று உள்ளம் தவித்துப் போனேன். இவ்வாறு இதயம் வாடிக் கொண்டிருக்கிற சமயத்தில், படீரென்று என் காலில் அலை வந்து மோதிற்று. நான் இருந்தது சர்க்கார் பாதை. "அலையே, கிட்ட வராதே!" என்று சர்க்கார் பாதை அவசரச் சட்டம் போட முடியுமா? நல்லவர்களையும் மற்றவர்களையும் சலிப்பில்லாமல் தாங்கிக் கொண்டிருக்கும் பாதை, அலை மோதுவதையும் தாங்கிக்கொண்டிருந்தது.

மற்றொரு அலை, எதிரே யிருந்த பங்களாவுக்கு வாயில் எது என்று கேட்டுக்கொண்டு போவது போல, பரபரப்புடன் சென்றது. தாள் போட்டிருந்த கதவைத் தட்டிவிட்டு, அங்கேயே அது தன் பிராணனை விட்டுவிட்டது. சகோதரன் மடிந்தானே என்று மற்ற அலைகள் அஞ்சி நின்றனவா? படுகளத்தில் ஒப்

பாரிஷது? மீண்டும் மீண்டும் தாக்குதல்தான். இந்த அழகை, மாளிகைகளில் எவரேனும் அனுபவிக்கிறார்களா எனப் பார்த்தேன். ஒருவரையும் காணோம். நான் நாடி தளர்ந்து போனேன். பத்திரத்துக்காக அமைக்கப்பெற்ற வீட்டிலிருந்து கூடவா, இந்த அலை விநோதத்தைப் பார்க்கக் கூடாது?

'வெறும் காற்றும் அலையும் மட்டுமா? வானம் பொத்துவிட்டது போலத் தாரை தாரையாக மழை பொழிந்துகொண்டே யிருந்தது. சென்னை நகரின் மகத்தான பாபங்களை, இருந்தவிடம் தெரியாமல் அடித்துக்கொண்டு போகவேண்டும் என்ற எண்ணமோ, என்னவோ? என் உடம்பையும் உள்ளத்தையும் ஒருங்கே குளிரச் செய்த வர்ஷதாரை நிற்காமல் இருக்கவேண்டும் என்று வேண்டிக்கொண்டேன்.'

V

'இதெல்லாம் போகட்டும், அன்றைக்கு இயற்கைத் தாய் மனது வைத்தால், இந்தச் சென்னை நகரை அடியோடு அழித்துவிட முடியாதா? இயற்கையின் கொடுமையில் கருணை யிருப்பதை சர்வாதிகாரிகள் அறிந்துகொள்வார்களா? கொடுங்கோலர்கள் உணர முடியுமா?

'பதர்களைத் தூற்றும் புயல் வேண்டும். கருணையைக் கொட்டும் மழை வேண்டும். அந்தப் புயலே காந்தி, அந்த மழையே காந்தி. மழையும் புயலும் ஒன்று சேர்ந்து உருவெடுத்தது போல, சென்னைக்கு காந்தி வந்ததை உனக்கு நினைப்பூட்டுகிறேன். சிதம்

பரம்! கேட்டுக்கொண் டிருக்கிருயா, அலுத்துப் போய்விட்டாயா?'

'மழையும் புயலும் அடிக்கிருப் போலப் பேசித் தீர்த்துவிட்டாய். இந்தப் புயலையும் மழையையும் பற்றியா, நீ சொல்லவேண்டும் என்று நினைத்தது? என் கம்பெனி வேலைகூட வேண்டாம் போலிருக்கிறதே!' என்ருன் சிதம்பரம்.



## 2. என்னைப் பற்றிக் கவலையில்லை!

உலகமே மாயை என்பது ஒரு கட்சி. மாயை தத்துவ ரீதியாக உண்டா இல்லையா என்பதைப் பற்றி ஆராய்ச்சி இப்பொழுது தேவையில்லை. தத்துவத்தின் பிடிப்பில் அகப்பட்டுக்கொண்டால், பின்னர் தப்பிப் பிழைப்பது அருமை. நெய்க்குத் தொன்னையா, தொன்னைக்கு நெய்யா என்று ஆராயப் புகுந்தால், நாட்கள் போய்க்கொண்டே யிருக்கும். நாம் இருந்த இடத்தில் இருக்கவேண்டியதுதான்.

தத்துவ ஆராய்ச்சி பொய் அல்லது பிசகு என்று சொல்ல எனக்குத் துணிச்சல் கிடையாது. அணு அணுவாய்ச் சிதறி வாழும் ஜீவராசிகளுக்கு — பகுத்தறியும் ஜீவராசிகளுக்கு—தத்துவ தரிசனம் அவசியம் வேண்டியதுதான். ஆனால் சொல் - வெள்ளம் அடித்து மோதுகிற தத்துவம் தேவையில்லை. அதற்கு வீண் சண்டை, பிரயோஜன மில்லாத மனஸ்தாபம் என்று பெயர்.

தத்துவத்தில் வீழ்ந்து தத்தளித்து வாழ்ந்த இந்தியர்களின் பேச்சினிடையே தத்துவம் சிதைந்து வருவது ஆச்சரியமல்ல. ஒவ்வொரு தொழில்காரனும், தன் தொழிலுக்கு இசைந்த, தன் தொழில் அனுபவத்தில் கண்ட சொற்களைத்தான் உபயோகப்படுத்த முடியும். இந்தியர்களுக்கு—ஹிந்துக்களுக்கு—பொதுவான தொழில் தத்துவம் பேசுதல். இதனின்றும் கிடைத்தவை பெரும்பான்மையான பழமொழிகளும், உபமானங்களும், சம்பாஷணை இடைச் செருகல் சொற்களும்.

தேவையில்லை என்று சொல்லி நானும் ஓர் ஆராய்ச்சி செய்து தீர்த்துவிட்டேன். தத்துவ ஆராய்ச்சி, தத்துவப் பேச்சு — இதினின்றும் நான் மட்டும் தப்ப முடியுமா? தப்பித்துக்கொள்ள முயன்றால், மற்றவர்களுக்கு—நீங்கள் உள்பட—கோபம் வராதா? யார் கோபம் வந்தாலும் எனக்குப் பாதகமில்லை. இந்தக் கட்டுரையைப் படிப்பவர்களுக்குக் கோபம் வந்தால், அதை என்னால் தாங்க முடியாது.

எழுத்தைக் காட்டிலும் சம்பாஷணையிலே அதிகமான விசித்திரங்களைக் காணலாம். எழுத்திலே எழுத்தைக் காணலாம். 'என்ன அபூர்வமான சங்கதியைக் கண்டுபிடித்துவிட்டார்!' என்று சிரிக்கிறீர்களோ? நானும் கூடச் சிரிக்கிறேன். என்ன நஷ்டம் வந்துவிடும்? அதிருக்கட்டும். எழுத்திலே பேச்சின் குரலை, பேச்சின் தோரணையைக் காண முடியாது. 'பேஷ்! நல்ல பையன்' என்பதை எழுத்தில் படித்தால், பேஷ், நல்ல பையன்தான்.

இதையே குரலில் சொன்னால் எவ்வளவு இடக்காயிருக்கும் சில சந்தர்ப்பங்களில்! சொல்லுகிறவன் முகம், ஜாடை, குரல் இவைகளை யெல்லாம் சம்பாஷணையில் முழுதும் அனுபவிக்கலாம். சம்பாஷணையின் நயம் இதுதான். இந்த நயத்தை எழுத்தில் காண்பிப்பதுதான் சிரமம். தத்துவத்துக்கும் நமது வாழ்க்கைக்கும் சம்பந்த மில்லாதது போலவேதான்.

'நேற்றைக்கு அவன் சொன்னதை நீ கேட்டுக்கொண்டுதானே இருந்தாய்? எப்படி யிருக்கிறது அது? என்னைப் பற்றிக் கவலையில்லை. எப்படி யிருக்கிறது அது என்று கேட்கிறேன். சொல்லு!' என்று சம்பாஷணையை ஓர் ஆசாமி துவக்குவதை நீங்கள்

பார்த்திருப்பீர்கள். அந்தப் பேச்சின் நடுவே நவரத்தின மணி ஒன்று பதிக்கப்பட்டிருக்கிறதே, அதைக் கவனித்தீர்களா? அந்த மணி, ‘என்னைப் பற்றிக் கவலையில்லை!’ என்பதுதான்.

‘பின்னே, யாரைப் பற்றிக் கவலையுடன் அவன் பேசுகிறான்?’ என்று உங்களுக்குச் சந்தேகம் தோன்றுமா? இப்படிப் பேசுவது சாதாரண வழக்கமாகி விட்டதால், உங்களுக்கு ஒரு சமயம் விகற்பம் ஒன்றுமே தோன்றாமல் இருக்கலாம். ஆனால், அதை ஊன்றிப் பார்த்து யோசித்ததுண்டா?

தன்னைப் பற்றிக் கவலை யில்லாதவனுக்குப் பிறகு யாரைப் பற்றிக் கவலை? இதை அறிய நம் எல்லோருக்கும் ஆவல் இருக்காதா? இருக்கப்படாதா? இருக்கப்படாது என்றால் தொல்லை விட்டுப் போகுமே! ஆவல் இருப்பதுதான் இயற்கை. மேலும் தன்னைப் பற்றிக் கவலை இல்லாதவனை நித்த நித்தம் கும்பிடும் ஆவல் நமக்கு இருக்கத்தானே செய்யும்? இந்த ஆவலை நாம் மறைப்பதில் லாபம் என்ன?

பிறகு, யாரைப் பற்றிக் கவலை? அந்தச் சந்தேகம் இன்னும் தீரவில்லையே! ‘என்னைப் பற்றிக் கவலை யில்லை!’ என்று சொல்பவனுடைய வார்த்தைகளுக்கு அர்த்தம் உண்டா? இருக்குமாயின் அது என்ன? எப்பொழுதும் பிறரைப் பற்றிக் கவலைகொண்டிருக்கும் உத்தமன் என்று அதற்கு அர்த்தமா? சதா, தன்னைப் பற்றி மட்டும் கவலையுடனிருக்கும் அதமன் என்று பொருளா?

தன்னைப் பற்றிக் கவலை யில்லாதவன் அதைச் சொல்லில் காண்பிக்க வேண்டிய தேவையில்லை. அதை அவன் சொல்லில் காண்பிக்கவும் மாட்டான்.

கவலே யில்லாமை என்ற பாவனைப் போர்வைக்குள்ளே யிருக்கிற பேர்வழிகள் தங்கள் கவலேயை எப்படி வெளியே காண்பித்துக்கொள்ளுகிறது? இதற்கு ஒரு வழி வேண்டாமா? தன்னைப் பற்றிக் கவலேயில்லே என்று சொல்வது ஒரு வழி.

தன்னைப் பற்றிக் கவலே யில்லாதவன், அதை வெளியே சொல்லிக்கொள்ள, ஏன் ஆத்திரப்பட வேண்டும்? மலிந்தால் தானுகச் சந்தைக்கு வரும் என்பது அவனுக்குத் தெரியாதா? அவனுடைய ஆத்திரத்தி லிருந்தே சந்தேகம் — ஏன், நிச்சயம் என்றும் சொல்லலாம்—உண்டாகிறது. உலகமே தன்னைச் சுற்றி இயங்கவேண்டும் என்று அவனுக்கு எண்ணம். இந்த எண்ணத்தை அவன் நாஸுக்கு வார்த்தைகளில் சொல்ல எத்தனித்திருக்கிருன். மற்றவர்கள், ஜாடை தெரிந்து, சிரிப்பை அடக்கிக் கொள்ளுகிருர்கள்.

ஒவ்வொருவனும் தன்னைப் பற்றிக் கவலேப் படுவது இயற்கை. இதைத் தவறு என்று எண்ணி அதை மறைக்க முயலுவதிலேதான் ஆபத்தும் விபரீதமும் உண்டாகின்றன. ஒவ்வொருவனும் தன்னைப் பற்றி அக்கரையுடன் கவலேப்பட்டு, அதற்கான முயற்சியை எடுத்துக்கொண்டால், உலக க்ஷேமத்தைப் பற்றி, ஒருவருமே கவலேப்பட வேண்டியதில்லே. தனக்கு உரிமையில்லாத பெருமையை அல்லது பொறுப்பைத் தனதாகப் பாவித்து சொந்தங் கொண்டாடுவதில் எவ்வளவு தீமை இருக்கிறது?

தன்னைப் பற்றிக் கவலேயில்லே என்று சொல்பவனுக்கு, தன்னைப் பற்றித்தான் கவலே. வேறு யாரையும் பற்றி அவனுக்குத் துளிகூடக் கவலேயில்லே.

உண்மை இவ்வாறு இருக்க, அவன் ஏன் ஒளிந்து பிடிக்கிற வேலை செய்ய வேண்டும்? இதனால் அவனுக்கு லாபம் சிறிதுமில்லை. ஒவ்வொருவனும் ஆண்டவனிடத்தில் தன்னைப் பற்றித்தானே பிரார்த்தனை செய்துகொள்ளுகிறான்! தன்னைப் பற்றி ஆண்டவனிடம் ரகசியமாகச் சொல்லி முறையிட்டுக் கொள்ளுகையில், சகோதர மனிதனிடமிருந்து அதை ஒளித்து மறைக்க ஏன் முயலவேண்டும்?



## 3. 'விட்டேன பார் அவனை !'

ராவணன் சீதையைத் தூக்கிக்கொண்டு சென்ருன். ஆனல் சீதை எங்கே போனுள், எப்படிப் போனுள், எங்கே யிருக்கிருள் என்ற விபரம் ஒன்றும் ராமனுக்குத் தெரியாது. சுக்கிரீவனுக்கு முடி சூட்டிய பின், அவன் சீதையைத் தேட எல்லாத் திசைகளிலும் குரங்குகளை அனுப்பினன்.

தெற்கே இலங்கையை நோக்கிச் சென்றவர் ஹனுமான். வழியில் ஹனுமானுக்குப் பல இடுக்கண்கள் நேர்ந்தன. சூரியனைப் பிடித்துத் தரவேண்டும் என்று குழந்தைப் பருவத்தில் கேட்ட ஹனுமானுக்கு இடுக்கண்களைக் கண்டு பயமா? பயம் என்பதை அறியாத புண்ணியமூர்த்தி யல்லவா அவர்?

ஹனுமான் சீதையை அசோக வனத்தில் கண்டு தரிசித்தார். 'ராம, ராம' என்று இடைவிடாமல் ஜபித்துக்கொண்டிருந்தார். கடைசியாக, சீதையின் அனுமதி பெற்று, சீதையின் ஆசீர்வாதத்தை யடைந்து, ராமனிடம் திரும்பி வந்தார் ஹனுமான். ராமனுடைய கவலையை நீக்குவதற்காக, 'கண்டேன் சீதையை!' என்ருர் ஹனுமான்.

இது ராமாயணக் கதை. இது மெய்யா பொய்யா என்பதைப் பற்றி ஆராய்ச்சி தேவையில்லை. இந்தச் சம்பவத்தைச் சித்திரமாக்கிக்கொண்டு, உங்கள் மனக் கண்ணல் பாருங்கள். சிவன் வில்லை முறித்த ராமன், தனது திறனழிந்து, சீதையின் நினைப்பினல் தவித்துக் கொண்டிருக்கிருன். இந்தச் சமயத்தில் ஹனுமான்,

சீதையை ராவணன் தூக்கிச் சென்ற கதையைச் சுருக்கமாகச் சொல்லுகிறார்.

ஹனுமான் சொன்ன சேதியைக் கேட்டு, ராமன் என்ன செய்கிறான்? இதுதான் ரொம்ப ஸ்வாரஸ்ய மான பகுதி. ராமன் ஆத்திரத்தைக் காண்பித்தானா? பெருமூச்சு விட்டானா? பற்களை, இரணியனைப் போல, நறநறவென்று கடித்தானா? இளையோன் லட்சுமண னைப் போல் துடிதுடித்தானா? அல்லது நாம் எல் லோரும், அசட்டுத்தனமாய், அர்த்தமில்லாமல், 'விட்டேனா பார் அவனை!' என்று படாடோபம் செய் வது போல், பொய்ச் சபதம் செய்தானா?

'நிறை குடம் நீர் தளும்பலில்' என்று பெரியவர் கள் கூறினது உண்மை. நொய் அரிசிதான் கொதி பொறுக்காது. கைச்சூடு பொறுக்க முடியாதவன் கரண்டிச் சூட்டைப் பொறுக்க முடியாது. மேலே செய்யவேண்டிய காரியங்களைப் பற்றிய யோசனை யில் ஆழ்ந்தான் ராமன். இந்தச் சித்திரத்துக்கும் நமது தற்போதைய வாழ்வுக்கும் சம்பந்தம் துளி யேனும் உண்டா?

வீட்டிலே, தெருக் கோடியிலே, எங்கு பார்த் தாலும், 'விட்டேனா பார் அவனை!' என்ற கூச்சலை இடைவிடாது கேட்கிறோம். இவ்வளவு கூச்சல் எதற் காக? காரியம் பலிக்கிற இடத்தில் சத்தமே கேட் காது. போரில் குண்டுச் சத்தம் கேட்குமே யொழிய, வாய்ச் சத்தம் கேட்காது. அநாவசியமான வாய்ச் சத்தம் கேட்டால், அந்த இடத்தில் காரியம் இல்லை என்று, யோசனை செய்யாமல் விலகிவிடலாம்.

'விட்டேனா பார் அவனை!' என்று சொல்லும் தொனியிலேயே, 'அவனை விட்டுவிட்டேன்; அந்த

வேடிக்கையை உன் கண்ணுலே பார்!' என்பது குறிப்பாக அமைந்து கிடப்பதைப் போலத் தோன்ற வில்லையா? விடாத பேர்வழி, தனது சாமர்த்தியத்துக் கும் தைரியத்துக்கும் மற்றவர்களை ஏன் சாட்சி வைக் கப் பிரயத்தனப்பட வேண்டும்? ஏனைய நாய்களைக் கூட்டிவைத்துக்கொண்டு, ஒரு நாய் தன் எதிரியைக் கடித்து ஹிம்சை செய்வதில்லை.

'விட்டேனு பார் அவனை!' என்று சவால் கூறு கிருனே, அவன் தரும புத்திரனைப் போல, தரும யுத் தத்தைக் கருத்தில் கொண்டு, எதிரிக்கு எச்சரிக்கை செய்வதாக எண்ணிக்கொள்கிருனு? பாவனை ரோஷம் காண்பிப்பதில் என்ன லாபம்? லோகத்தி லிருக்கும் அத்தனை பேர்களும் (இவனைத் தவிர) மடையர்கள் என்று இவன் வீண் மனேராஜ்யம் செய்துகொண்டிருக்கிருனு? மரம் பழுத்தால் வௌ வால் தாஞக மரத்தினிடம் போகும். வௌவாலுக்கு மரியாதைப் பிரஸாதம் வைத்து அழைக்கவேண்டிய தேவையே யில்லை.

'விட்டேனு பார்!' என்று சத்தம் போடும் மனி தனை யாராவது கையைப் பிடித்துத் தடுக்கிருர்களா? 'என் கையைப் பிடித்து ஏன் தடுக்கிருய்? கையை விடுகிருயா, மாட்டாயா?' என்று பதறுவது போல், இவன் பேசுகிருனே! இந்தப் பேச்சுக்கு என்ன மதிப்பு ஏற்படும்? தான் பயமுறுத்துவதைக் கண்டு, பிறர் தன்னிடம் மதிப்பு வைக்கவேண்டும் என்பது தான் அவனுடைய ஆசை. ஆனல் அந்த ஆசைக்கு இதுதான் வழியா?

காய்ச்சல் கற்பனை, ஏட்டுச் சுரைக்காய், சோற்று ராமன் வீரம், குழந்தையின் பயங்கரப் பேச்சு, ராஜ

தந்திரியின் வாக்குறுதி, விலைமாதரின் நேசம், வலிமை யற்றவனுடைய ஆதரவு, மின்னலின் ஒளி, அடித்துப் பெய்யாத மழை, ஆபரணங்களை வேண்டி நிற்கும் அழகு — இவைகளினுல் என்ன பயன்? இவைகளைப் பற்றிப் பிறர் கேலி செய்வதுதான் இவைகள் கண்ட பயன்.

'விட்டேனு பார் அவனை!' என்று சொல்லு வதில் சத்தம் ஜாஸ்தி; சக்தியில்லை. சக்தி படைத்த ராமனையும், 'விட்டேனு பார்' வீரனையும் அடுத்து அடுத்து மனதில் சித்திரப்படுத்திப் பாருங்கள். பார்த் தால்தான் தாரதம்யம் நன்ருகத் தெரியும். பார்த்தால் தான் இவ்வாறு சொல்லாம லிருப்பதற்கு நாம் கற்றுக் கொள்ள முடியும்.



## 4. பச்சை நோட்டு

'தீராத வினை தீர்த்து வைப்பார் கோவிந்தம் — கோவிந்தா, கோவிந்தா!' என்று சத்தம் போடும் திருக்கூட்டத்தை நாம் தெருக்களில் கண்டிருக்கிறோம். திருப்பதி வேங்கடாசலபதியின் பேரில் இவர்களுக்கு அவ்வளவு பக்தி. ஆனால் தமிழ் நாட்டில் திருப்பதி வேங்கடாசலபதியைக் காட்டிலும் அதிகமான செல்வாக்கைப் படைத்தது பச்சை நோட்டு.

பச்சை நோட்டு என்றால் உங்களுக்குத் தெரியாதா? முழுசாக ரூபாய் ரூபாயாக நூறு ரூபாயை நாம் தூக்கிச் சென்றால் சந்தோஷம் வரலாம். ஆனால் அதை எப்பொழுதுமே தூக்கிச் செல்வதா யிருந்தால் பச்சை நோட்டு பக்தர்களுக்குக்கூட அலுப்புத் தட்டிவிடும். பண மோகத்தைக் கிளப்பிவிட்ட பெரியார்கள் பச்சை நோட்டைச் சிருஷ்டி செய்தார்கள். பச்சை நோட்டு நூறு ரூபாய்; பச்சை நோட்டு சர்க்கார் செலாவணிக் காகிதம்.

ஒவ்வொரு உத்தியோகத்துக்கும் ஒரு ஸீல் முத்திரையும் ஓர் அடையாளமும் உண்டு. நோட்டுகளுக்கும் அப்படியே. நூறு ரூபாய் நோட்டுக்குக் கிடைத்த பாக்கியம் பச்சை நிறம். பச்சை நிறத்துக்கே மதிப்பு அதிகம்; அதனிடத்தில் மனிதர்களுக்குப் பிரியம். பச்சைக் கிளி, பச்சைமா மலை போல் மேனி, பச்சைப் பசும் புல் தரை, நவரத்னங்களில் ஒன்றான பச்சை — இவைகளைக் கண்டால் மனிதர்களுக்கு அவைகளின் பேரில் உயிர். 'பச்சை பச்சையாக'ப் பேசினாலும் ஜனங்கள் ஆனந்தம் அடைகிறார்கள்.

பச்சை வர்ணத்தில் நம்மவர்களுக்கு இருக்கிற ஆசை, எப்படியோ, ராஜ்யம் நடத்தும் வெள்ளைக் காரர்களுக்குத் தெரிந்துவிட்டதே! என்னென்ன மோ 'சூச்சுமம்' எல்லாம் கண்டுபிடித்துவிடுகிற அவர்களுக்கா தெரியாது? பகட்டுச்சேலைக்கு கிருஷ்ண பொம்மை அட்டையை ஒட்டி யனுப்புகிற வெள்ளைக் காரர்களுக்கு எதுதான் தெரியாது என்று எங்களூர் சாம்பு சொல்லுகிற பொழுது, அதை எல்லோரும் ஒப்புக்கொள்ள வேண்டியதுதான்.

பொம்மலாட்டத்திலே, ஆட்டுகிறவனுடைய தலையிலே யிருக்கும் தாய்க் கயிறு (விசைக் கயிறு) சரியாய் இருந்தால், சந்திரமதிப் பொம்மை தானுக ஆடும் என்று சொல்லுவார்கள் பொம்மலாட்ட நிபுணர்கள். மூக்குக் கயிற்றைக் காட்டிலும் கொம்புக் கயிறுதான் 'ஒஸ்தி' (உயர்ந்தது, அவசியம்) என் பார்கள் வண்டிக்காரர்கள். கல்வியைக் காட்டிலும் கற்பனைதான் உயர்ந்தது என்பார்கள் ரஸிகர்கள். சம்பளத்தைக் காட்டிலும் 'மேல் வரும்படி' ரொம்ப ஸ்வாரஸ்யமானது என்பார்கள் அனுபவசாலிகள்.

எப்பொழுதுமே பயத்தைக் காட்டிலும் நயம் உயர்ந்தது, மேலானது. பாப புண்ய பயத்தைக் காண் பிக்கும் நீதி நூல்களை ஜனங்கள் மதிப்பதில்லை. சுக நயத்தைப் பகட்டாகக் காண்பிக்கும் மாயையைத் தான் ஜனங்கள் கும்பிடுகிருர்கள். உழைத்துக் கூழைக் குடிக்கும் உத்தமர்களைச் சண்டாளர்களாக வும், பச்சை நோட்டின் மோகத்தில் ஆழ்ந்து கற்பனைக்கு அடங்காத குற்றங்களைச் செய்யும் மனிதர்களை உயர்ந்தவர்களாகவும் கருதுவது நய மாயையின் வேலை அல்லவா?

பணமும், நோட்டும், பச்சை நோட்டும் மாய மான்கள். மாய மானைத் துரத்திக்கொண்டு போன ராமனுடைய கதி எல்லோருக்கும் தெரியும். ராவணன் சீதையைத் தூக்கிக்கொண்டு போனதுதான், மாய மான் வேட்டையால் ராமன் கண்ட பயன். இருந்தாலும் பச்சை நோட்டு மனிதனைப் படுத்துகிற பாட்டை வர்ணித்துச் சொல்ல முடியாது.

இந்த நாட்டில், எங்கு போய்ப் பார்த்தாலும் அங்கே பச்சை நோட்டுப் பிரசங்கத்தைப் பார்க்கலாம். எந்த சம்பவத்தை எடை போடவேண்டுமானுலும், அதைப் பச்சை நோட்டைக் கொண்டு நிறுத்துக் கட்டிவிடலாம். 'என்ன பிரமாதம்! காரியம் நடந்துவிடாதோ? இரண்டு பச்சை நோட்டு இருந்தால் ஓடுகிற ஓட்டம்; என்னமோ முழிக்கறயே!' என்பான் ஒருவன். 'ஆமாம்' என்று அவனை ம்றுத்துப் பேசுவது போல, மற்றவன் தலையாட்டுவான்.

அடிபிடி கேஸ். போலீஸ் கச்சேரிக்குப் பையனைக் கொண்டு போய்விட்டார்கள். தகப்பன், முக்காடு ஒன்று குறைவாக, அழுது புலம்பித் தவித்துக்கொண்டிருக்கிறுர். அந்த சமயம் அங்கே 'சவடால்' சின்ன சாமி வருகிறுன். 'என்ன ஒரு மாதிரியாக இருக்கிறீர்களே! கேஸ் என்றுல் குடி முழுகிப் போய்விட்டதா? ஆளை விழுங்கி ஏப்பம் விட்டுவிடுமா? மூணு பச்சை நோட்டு கொடுத்தால் கேஸ் பைஸல்!' என்று அவன் பையன் தகப்பனிடம் லலிதமாய் உரைத்து உபதேசம் செய்வான்.

மாட்டுச் சந்தை. 'பூர்ணியன் ஜோடி மாடுகள்' ஏராளமாகக் கூடியிருக்கின்றன. கிராமத்திலே இதைப்

பற்றி விடாத பேச்சு. வண்டிக்காரர்களும் மற்றவர்களும் 'மொலு மொலு' என்று சந்தையை விதவிதமாய் வர்ணித்துக்கொண்டிருக்கிறார்கள். பேச்சும் அலுக்கவில்லை. குறுக்கே ஒரு மைனர் தோன்றுகிறான். லீலைகளுக்கு சளைக்காத மைனர். இந்தக் கூட்டத்தில் 'ராஜா' வேஷம் போட்டு, அவனால் நடிக்க முடியாதா? 'இருபது பச்சை நோட்டு இருந்தால் சந்தையை நம் ஊர்ப் பக்கம் திருப்பிவிடலாமே!' என்று லாகவமாய்ப் பேசுகிறான்.

பெண்ணுக்குக் கலியாணம். பணத்துக்குத் திண்டாடுகிறான் தகப்பன். 'என்னமோ யோசித்துக்கொண்டிருக்கிறீர்களே! நாலு பச்சை நோட்டு இருந்தால் மாப்பிள்ளையை ஊருக்கு அழைத்து, அவங்க ஊருக்குக் கொண்டுபோய் விட்டுவிடலாமே!' என்று செட்டு சிக்கனத்துடன் ஒருவன் யோசனை சொல்லுகிறான்.

'அந்த உருப்படி (பெண்) மேலக் காவேரிக்கு வந்திருக்கிறதாமே! நீ கேள்விப்பட்டயோ?' என்று இங்கித 'லோடா' நண்பன் சொல்லி வாய் மூடுவதற்கு முன், 'ஒரு பச்சை நோட்டு இருந்தால், கூண்டோடு கைலாசமாய், இந்த ஊருக்குக் கிளப்பிக் கொண்டு வந்துவிடலாமே!' என்று மற்றவன் லேசாகச் சொல்லிவிடுவான்.

பொழித் தகரார் வழக்கு. கேஸ் தோற்றுப் போகும்போல் இருக்கிறது. வக்கீல், குமாஸ்தா, கட்சிக்காரன், சாட்சி — எல்லோரும் ஒன்று கூடி மந்திராலோசனை சபையில் வீற்றிருக்கிறார்கள். சாட்சிகளில் ஒருவன் புதையல் கண்டு எடுத்தது போல், துடுக்காக, 'ரொம்பத் துக்கப்படுகிறீர்களே! பத்துப் பச்சை

நோட்டை விட்டெறிந்தால், பட்டணத்திலே வக்கீல், ஜட்ஜ், எல்லோரும் ஒரே காலத்தில் ஆலாப் பறக்கிறார்கள். என்னமோ, குழம்பிக்கொண்டே யிருக்கிறீர்களே!' என்பான்.

பச்சை நோட்டைப் பதுக்கி வைப்பவர்கள் இவ்வளவு அலட்சியமாகப் பேசுவதில்லை. அவர்களுக்கு வாயடக்கம் ஜாஸ்தி. அதை அதிகமாகத் தடவிப் பார்க்காத ஏனைய 'ஜீவன்கள்' பச்சை நோட்டைப் பதராக மதித்துப் பேசுவதும், அந்தப் பேச்சைக் கேட்டு மற்றவர்கள் நொட்டை விடுவதும் பிரம்மானந்தமான காட்சி. இந்தக் காட்சியைக் கண்டாலும் கவியின் கலி தீராதா? காய்ந்தவனுக்குப் பச்சையைக் காண்பது என்றால் அப்படித்தானே!



## 5. ரொம்பப் பெரிய காரியமோ ?

சின்ன மனிதர்களிடம் மூன்று வகை மனப் பான்மைகள் உண்டு. நிஷ்டூரம், ஏளனம், ஏமாற்றம். நிஷ்டூரம் என்பது குறைகூறி முணுமுணுத்தல். ஏளனம் எல்லோருக்கும் தெரியும். ஏமாற்றம் - இது ஒரு விநோத சக்தி. தன்னைத் தானே ஏமாற்றிக்கொண்டு இறுமாந்து போகும் தன்மை சின்ன மனிதர்களிடம் ஏராளமாய்க் காணப்படும்.

கிணற்றுத் தவளையைக் கடல் தவளை சந்தித்த கதை எல்லோருக்கும் தெரிந்திருக்கும். என்றாலும் ரஸமான கதையைத் திரும்பத் திரும்பக் கேட்பதனால், விளையும் சந்தோஷம் வெகுவாகக் குறைந்து போவதில்லை. ஔவையார் சொன்ன பிரகாரம், கற்றது கை மண்ணளவு. அந்தக் கைம்மண்ணைக் கொண்டு தான் புதிது புதிதாக நாம் எல்லோரும் 'உண்டை' பிடிக்கிறோம்.

கடல் தவளை எப்படியோ கிணற்றில் வந்து குதித்துவிட்டது. ஏன் வந்தது, எவ்வாறு வந்தது, எப்படிக் குதித்தது என்ற விவரங்களைத் தெரிந்து கொள்ள விரும்புகிறவர்கள், முதன் முதலாகக் கதையைச் சிருஷ்டி செய்த அன்பரைத்தான் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும். மேலும் அந்த விவரங்கள் நமக்கு இப்பொழுது தேவையில்லை.

கிணற்றிலே தம்பித் தவளையைக் கண்டது அண்ணன் கடல் தவளை. (அக்காள் தங்கை என்று முறை வைத்துச் சொல்வதில் எனக்கு ஆட்சேபமில்லை; பெண்ணைப் பேயாகக் கருதும் சபையில் நான் மெம்பர்

அல்ல.) கண்டதும் சண்டப் பிரசண்டமாய்ப் பேச்சைத் துவக்கிற்று. தன் இனத்தைச் சேர்ந்த இன்னொரு தவளை இப்படியும் பேசலாகுமா என்று கிணற்றுத் தம்பிக்குக் கோபம்.

கடலைப் பற்றிய சங்கதியே கிணற்றுத் தவளைக்குத் தெரியாது. தவளையைப் போய்ச் சொல்லுவானேன்? நம் நாட்டில் மலையையும் கடலையும் பார்க்காதவர்கள் லட்சக் கணக்கில் இருக்கிறார்கள். கிணற்றில் ஒரு கோடிக்கு ஒரு கோடி பாய்ந்து, அட்டஹாஸ லீலைகள் செய்துகொண்டிருந்த கிணற்றுத் தவளைக்குக் கடல் சகோதரன் பேச்சு அர்த்தமாகவில்லை.

கடலின் மாண்பை அறியாமல், அதைத் தன் உடலின் மூலமாய், பெருத்துக் காண்பிக்க எத்தனித்து, அது உயிரை விட்டுவிட்டது. இது பழங் கதை; பொய்க் கதையும் கூட. இந்தக் கற்பனைக் கதையில் உண்மை இருப்பது யாருக்குத் தெரியாது? சின்ன மனிதர்களின் ஏமாற்ற மடையும் சேஷ்டையும் கிணற்றுத் தவளையின் தற்பெருமைக் குறும்பும் ஒன்றுதான்.

ரொம்பப் பெரிய காரியமோ என்று வாய் வீச்சு வீசும் வித்தை எல்லோருக்கும் எளிதான காரியம். ரொம்பப் பிரமாதமோ என்று வித்தகம் பேசும் கூட்டத்தாரைக் கவனித்திருக்கிறீர்களா? அவர்களை, ஓட்டைத் தகரங்கள் என்று, கூசாமல் பெயர் கொடுத்து அழைக்கலாம். அதாவது, அவர்கள் எதை எப்படிப் பேசினாலும் சத்தம்தான் மிச்சம்.

ரொம்பப் பெரிய காரியமோ? இல்லை என்று வைத்துக்கொள்ளுவோம். காரியத்தைச் செய்கிறது தானே? செய்தால், கிராமத்தார்கள் சொல்லுவது

போல், 'வண்டவாளம்' (சக்தியின் தன்மை என்று இந்தக் கிராம வார்த்தைக்கு அர்த்தம் கற்பிக்கலாம்) புரிந்துவிடும். பறக்க முடியாதா, ஓட முடியாதா, நீந்த முடியாதா, செய்ய முடியாதா என்று அடுக்கிக் கொண்டு போனுல் அகராதிக்கு நஷ்டம்; சொல் அடுக்குத்தான் மிச்சம்.

காரியத்துக்குப் பிரதானம் இடம், பொருள், ஏவல். இடம், பொருள், ஏவல் — இந்தச் சாதனங் களைக் கவனிக்காமல் செய்ய எத்தனிக்கும் காரியம் பாழ்; இதைச் சொல்ல முயலும் மனிதனுடைய சொற்கள் வீண்; இதைக் கேட்கும் காதுகள் கெட்ட உபயோகத்துக்கு ஆளானவை. ஆனுல் காதையும் கண்ணையும் நல்ல வழியில் எல்லோரும் உபயோகப் படுத்துகிருர்களா?

சில மனிதர்களுக்கு எதுவும் பிரமாதமில்லை. நிபு ணத்துவம் படைத்த மேதாவிகளின் வார்த்தையை ஆய்ந்து அலசிப் பார்க்காமல், மற்றவர்கள் பிரயோகம் செய்தால், 'கான மயிலாடக் கண்டிருந்த வான் கோழி'கள் ஆகிவிடுகிருர்கள். இதில் எள்ளளவும் சந்தேகமில்லை. காந்தியின் மனச் சாட்சிக்கு அர்த்த முண்டு; சக்தி உண்டு. சின்ன மனிதர்களின் மனச் சாட்சிக்கு அர்த்த முண்டு; ஆனுல் சக்தி உண்டா?

பிரமாதக் காரியமோ? இந்தச் சூத்திரத்தை இந் தத் தலைமுறையில் எவரும் சிருஷ்டிக்கவில்லை. இது வாழையடி வாழையாக வந்ததாகும். இப்படியே வீணுகச் சொல்லிச் சொல்லி எத்தனை நூற்றுண்டுகள் கழிந்து போயின? எத்தனை தலைமுறைகள் பாழாய்ப் போய்விட்டன? நினைத்தால் துக்கம், சொன்னுல் வெட்கம்.

ஒரு சராசரி இங்கிலீஷ்காரனைப் பார்த்தால், ரொம்பப் பெரிய காரியமோ என்று ஒரு நாளும் அவன் வாய்த் துடுக்காகச் சொல்லவே மாட்டான். அவனுக்குப் பேச்சிலே துடுக்குக் கிடையாது. அவன் காரியத்திலே முடுக்கு. அவனிடமிருந்து நம்மவர்கள் பாடங் கற்றுக்கொள்ள வேண்டியது அனந்தம். வெறும் நிஷ்டூரத்தாலும், ஏளனத்தாலும், ஏமாற்றத் தாலும் காரியம் பலிக்காது.

ஸர் ஸி. வி. ராமன் அற்புதம் ஒன்றை ஸயன்ஸில் கண்டுபிடித்துவிட்டார் என்றால், ரொம்பப் பிரமாத மோ என்று சொல்லுபவனுடைய முகத்தையும் நாக்கையும் அளவு எடுத்துப் பார்ப்பது உசிதம் அல்லவா? 'எங்கள் மூதாதைகள் செய்யவில்லையா?' என்ற பதில் தகுதியுள்ளதா? சொல்லுகிறவனுடைய மூதாதைகளைப் பற்றிப் பேச்சில்லை, சொல்லுகிற வனைப் பற்றித்தான் பேச்சு.

சங்கற்ப திட சித்தத்துடன் முயன்றால் எந்தக் காரியமும் பிரமாதமில்லை. கம்பி யில்லாத ஆகாயத் தந்தியைக் கண்டுபிடித்த மார்க்கோனி என்ற மேதாவி, நம் எல்லோரையும் போலவே, தாயின் வயிற்றில் பிறந்தவர்தான். நமக்கும் அவருக்கும் வித்தியாசம் என்ன? அவரிடம் சலிக்காத பயன்படு முயற்சி; நம்மிடம் சளைக்காத வீண் பேச்சு!

இதாலி தேசத்தை அபூர்வமாய் மாற்றிவிட்டாரே முஸோலினி என்றால், அது பிரமாதமோ என்று சொல்லுவதா பிரமாதம்? எளிய பிறப்பிலிருந்தும், எத்தனையோ விதத் துன்பங்களுக்கும் தொல்லை களுக்கும் ஆளாகி, களைத்துச் சளைத்துப் போகாமல் மேலெழுந்த ஒருவனுடைய முயற்சியை, தற்பெருமை

ஏமாற்றத்தால் ஏளனம் செய்வது அறிவுடைமை அல்ல.

எதற்கெடுத்தாலும், 'இரண்டாயிர வருஷத்துக்கு முன்னே யிருந்த பெரியவர்கள்' என்ற பல்லவி பாடுவது எவ்வளவு காலத்துக்கு இனிப்பாயிருக்கும்? காலத்தோடு பேச்சும் பழக்கமும் மாறினாலன்றி, ஜன சமூக உயிர், தரித்து நிலைத்து நிற்காது. பழமையான மோர்கூடக் கடுப்புக் கலந்த புளிப்பை அடைகிறது. பழைய பேச்சு, பிறந்த மேனிக்கு, எப்பொழுதும் சுவையுடனும் சக்தியுடனும் இருக்குமா? பழையது புதுமைக்குத் தாய். தாய் மரித்து மகள் வளர்வதும், அந்த மகள் இறந்து புது மகள் தோன்றி மகிழ்வதும் இயற்கையல்லவா?



## 6. என்ன மோசம் வந்துவிட்டது?

ஏந்த நிலையிலும் கலங்காதவன் வீரன். வாய்ச் சொல் தைரியம் காண்பிப்பதில் அவனுக்கு விருப்பம் இருப்பதில்லை. நிலை கலங்காம லிருக்கும் நிலைமையே அவனுடைய உண்மையான தைரியத்தை எல்லோருக்கும் விரைவில் விளக்கிக் காண்பிக்கும். வார்த்தை வேலியால் பந்தோபஸ்தை நிலைக்கச் செய்ய முடியாது என்று அவனுக்குத் தெரியும்.

நெடுங்காலமாக, நம் தேசத்தில், 'என்ன மோசம் வந்துவிட்டது?' என்பது, தெருத் தெருவாய், எங்கேயும் மலிந்து குப்பையாகக் கிடப்பதைக் காணலாம். தெருவின் ஒரு கோடியில் தீப்பிடித்து எரிந்தால், இன்னொரு கோடியிலிருந்து ஒருவன், 'என்ன மோசம் வந்துவிட்டது!' என்று தத்துவ உபதேசம் செய்வான்.

ராகவன் வீட்டில் ஒரு ஜோடி நல்ல மாடு திருட்டுப் போய்விட்டது என்றால், 'என்ன மோசம் வந்துவிட்டது? பழசு போனால் புதுசு வந்துவிடுகிறது!' என்று உடனே, சிரம மில்லாமல், யோசனை யில்லாமல் கோவிந்தன் சொல்லித் தீர்த்துவிடுவான். தொட்டில் பழக்கமே சுடுகாட்டில்தான் முடியும் என்கிறார்கள். ஆயிர வருஷத்துப் பழக்கத்துக்கு என்ன மருந்தோ, யார் கண்டார்கள்?

'உன் குழந்தைக்கு உடம்பு நன்றா யில்லையாமே!' என்று ஒருவனைக் கேட்டால், 'என்ன மோசம் வந்துவிட்டது!' என்று சொல்லிவைத்தது போலப் பிதற்றுகிறான். குழந்தையைப் பெற்றெடுத்த தாயின் காதில் விழுந்தால், எப்படி யிருக்கும்? அவள் பொறுப்பாளா?

ஆற்றிலே கால்நடைகளைக் குளிப்பாட்டக்கூடத் தண்ணீர் இல்லையென்றால், 'என்ன மோசம் வந்துவிட்டது!' என்கிறார்கள். தண்ணீரைப் பற்றியும் மாடுகளைப் பற்றியும் இப்பொழுது கவலையில்லை. சாப்பிடுகிற சமயத்தில் கவலை; உழவு காலம் வந்தால் கவலை. நடுவிலே என்ன மோசம் வந்துவிட்டது என்ற ஜம்பப் பேச்சு!

'ஊருக்குப் போகிற பொழுது உன்னைக் காணவில்லை. உன் தங்கை ரொம்ப வருத்தத்துடன் போகிறாள்' என்றால், சொல்லிக்கொள்ளாமற் போனால் என்ன மோசம் வந்துவிட்டது என்று ஒருவன் வாய் நிறையக் கூசாமல் பேசுகிறான். மோசம் வந்தது தங்கைக்குத்தானே! இவனுக்கு அல்லவே!

'ஊர்ப் பொதுவிலே, வரி வைத்து வாய்க்கால் வெட்டுகிறார்களாம். உன் வரிப் பணம் கொடுக்க வேண்டாமா?' என்றால், 'கொடுக்காவிட்டால் மோசமோ?' என்று திட்டமாகச் சொல்லித் தீர்த்து விடுகிறான். 'கொடுக்காவிட்டால் வாய்க்காலில் தண்ணீர் வருமா?' என்றால், 'வராமற் போனால் மோசமோ?' என்று முடித்துவிடுகிறான்.

'பீகாரிலே பூகம்பமாமே! அதற்குப் பண உதவி செய்யவேண்டாமா?' என்று கேட்டால், அப்பொழுது தான் டிபனுக்காகக் காப்பி ஓட்டலில் தனக்கென்று அரை ரூபாய் செலவழித்த அன்பர், 'சொந்த வீட்டுப் பூகம்பத்துக்கு வழியைக் காணோம் — பீகார் பூகம்பம் தான் ரொம்ப மோசம்!' என்று சிக்கனத் தத்துவம் பேசுகிறார்.

'என்ன ஸார், வருஷந் தோறும் ஆயிரக் கணக்கான ஹரிஜனங்கள், கஷ்டம் பொறுக்க முடியாமல்,

பிற மதங்களில் போய்ச் சேர்ந்துகொள்ளுகிறுர்களே! என்ன அநியாயம்!' என்றுல், 'சேர்ந்தால் என்ன மோசம்?' என்று கவலே யில்லாமல் பேசும் மனித னுடைய படம் உங்களுக்குத் தேவையாளுல் அனுப்பு கிறேன்.

தன் சொந்தச் சாமான், தனக்குத் தனியாகச் சௌகரியம் கொடுக்கும் பொருள் ஒன்று கெட்டுப் போகுமாகில், அவன் படுகிற அவஸ்தையைப் பார்க்க வேண்டுமே! ஊர் முழுதும் அவனிடம் அனுதாபம் காட்டவேண்டும். காண்பித்தாலும் மொச்சு மொச்சு என்று சலிக்காமல் பேசுவதை நிறுத்த மாட்டான்.

இவ்வளவு பொறுப்பில்லாத்தனம் எங்கிருந்து வந்ததோ தெரியாது. வாழ்க்கைக் கோளாறு? தத்து வப் பிசகா? படிப்புத் தவரு? மூளேப் பிசகா? நரம்புக் கோணலா? அசட்டுத்தனமா? அலட்சியமா? தன் னல மிகுதியா? கோழைத்தனமா? அல்லது எல்லா வற்றையும் ஒன்று சேர்த்துப் பிடித்த உருண்டையா?



## 7. சொல்லுக்கு மதிப்பு

சங்கீதத்திலே உயர்ந்தது வாய்ப்பாட்டு. வாய்ப் பாடு அல்ல. பையன்களுக்கு வாய்ப்பாடு தலைகீழா கத் தெரியும். சங்கீதத்தில் ரொம்ப மட்டம் ஹார் மோனியப் பாட்டு. சங்கீதத்தைப் போலவே சொல் லிலும் உண்டு. எழுதினாலும் அச்சுக் கோத்தாலும், சொற்கள் நோயாளியைப் போலப் படுக்கையில் கிடக் கும். பேசினால் வார்த்தைகள், செலாவணியாகும் நாண யங்களைப் போல், உயிரும் மதிப்பும் பெற்று ஓடிக் கொண்டே யிருக்கும்.

'கன்னாப் பின்னா மன்னார் கோயில்' என்று பேசி னாலும், சொல்லுகிறவனைப் பொறுத்து, அவன் சொல் லும் சொற்களுக்குச் சக்தியும் அழகும் இருக்கும். சொல்லுக்குத் தனியான சக்தியும் அழகும் இருந்தா லும் சொல்லுகிறவனுடைய மனோபாவத்தைப் பொறுத்து, அதற்கு விபரீத அர்த்தம் உண்டாகலாம்.

கூச்சமுள்ள ஒருவனை, ஏதாவது வேண்டுமா என்று கேட்டால் அவன் வேண்டாம் என்று உடனே சொல்லிவிடுகிறான். இங்கே, அவன் சொல்லுவதற்கு என்ன அர்த்தம் தெரியுமா? 'எனக்கு அது வேண் டும்; ஆனால், என்னை வேண்டுமா என்று கேட்பது தவறு' என்று அர்த்தம். இந்தச் சந்தர்ப்பத்தில் வேண்டாம் என்பதற்கு வேண்டும் என்று அர்த்தம் பேசினால், சொல்லுக்கு விபரீத நயம் ஏற்படுகிறது ஓர் ஆச்சரியம்.

பேசுகிற பொழுது, வேறோர் அதிசயத்தைக் காணலாம். சிலர் வளைத்து வளைத்துப் பேசுவார்கள்.

'நான் அங்கே போனேன்' என்று சொல்லவேண்டும் என்று வைத்துக்கொள்ளுங்கள். தாம் அங்கே போனது சரியா தவரு என்பது முதல், எல்லாவற்றை யும் ஆராய்ச்சி செய்து, பதப்படுத்தி, கடைசியில் போனரோ இல்லையோ என்று தொனிக்கும்படியாகப் பேசுவார்கள்.

இதிலே என்ன நயம் தெரியுமா? மனதை வெளியே விட்டு, விட்டு மறைக்கிற நயம். இவ்விடத் தில் முக்கால் பங்கு வார்த்தைகளுக்கு அர்த்தம் கிடை யாது. அவைகள் யாவும் பிறருடைய மனதை ஆழங் காண உபயோகப்படுத்தப்பட்டவை யாகும். வெறும் சத்தத்துக்குப் பதிலாக, வார்த்தைகள்—அவ்வளவு தான்!

உள்ளத்திலே தோன்றிய உண்மையையோ அழ கையோ, உணர்ச்சி உருவமாகப் பார்க்கிற ஒருவனுக்கு, சில சமயங்களில் வார்த்தைகள் தட்டிப் போகும். ஒரு காரியம் நியாயம் என்று உணர்ச்சியின் மூலமாய் ஒருவனுக்கு நன்ருகத் தெரியலாம். ஆனல் அந்த நியா யத்தை, வார்த்தைகளின் மூலமாய்ச் சொல்லத் தெரிவ தில்லை, சொல்ல முடிவதுமில்லை. இது ஒரு நிலைமை.

சிலருக்கு வார்த்தைகள் அடுக்கு அடுக்காய்த் தெரியும். ஆனல் பிரயோக சந்தர்ப்பங்கள் ஏற்படுவ தில்லை; அல்லது தெரிவதில்லை. இந்தக் கோஷ்டியா ருக்கு மனேலோக சஞ்சாரம் மிகுதியும் இருப்பதில்லை. வார்த்தைகள் தெளிவா யிருந்தபோதிலும், சந்தர்ப்பத் தவறு அல்லது சந்தர்ப்பக் குறைவினல், இவர்க ளுடைய சொற்கள் அடிவலுவற்று மாய்கின்றன.

சிலர் வர்ணனை ஆசையால் சொற்களைத் தூவிச் சிதற அடிக்கிருர்கள். நாலா பக்கங்களிலும் அடிபட்டு

விழும் சொற்கள் வீரிட்டு அலறி அழுகின்றன. அவைகளுடைய அழுகைக் குரல் காதில் கேட்கிறதே யல்லாமல், அவைகள் வர்ணிக்கவந்த அழகு கண்ணில் புலப்படுவதில்லை. இந்தச் சொற்கள் தவிக்கும் தவிப்பை, கண்கொண்டு பார்க்க முடியாது.

சிலர் கையில் அகப்பட்டுக்கொண்டு, பல சொற்கள், ஆயுள் முடமாகிவிடுகின்றன. இவைகளுக்குக் கொச்சை என்று பெயர். சொற்களின் உருப் பிரியாமல் இருக்கவேண்டு மென்பது இவர்களுடைய தீர்மானமோ என்னவோ! சீனிவாஸன் என்ற சொல்லை, லேசாக இவர்கள் சீமாச்சு ஆக்கிவிடுகிறார்கள். சொற்களுக்கு ஆஸ்பத்திரி இருக்குமாகில், இந்த முடத்தைத் திருத்திவிடலாம். ஆஸ்பத்திரி இல்லையே!

சிறிய பூச்சியை அடிக்கச் சிலர் பெரிய தடிகளைக் கொண்டு வருவார்கள். பூச்சி ஓடிப்போகப்படாதே! அந்தக் கஷ்டமல்லவா இருக்கிறது? மற்றும் பலர் படாடோப ஆடைகளில் எப்பொழுதும் ஆசை வைக்கிறார்கள். இன்னும் சிலர், பிறருடைய சரிகை வேஷ்டிகளைப் போட்டுக்கொண்டு, பிரம்மானந்தம் அடைவார்கள். இவைகளைப் போலவே, சிலர் சிறிய குச்சியைப் பெரிய தடி என்று சொல்லுவார்கள். குச்சி குச்சியாகத்தான் இருக்க விரும்பும்; பெரிய தடியாகப் போக ஒரு நாளும் விரும்பாது. பெருக்கிச் சொல்லும் மனிதர்களிடம் சொற்கள் இந்தக் கஷ்டத்தை அனுபவிக்கின்றன.

வார்த்தைகள் மனிதர்களிடம் அகப்பட்டுக் கொண்டு படும் கஷ்டத்தைச் சொல்லி முடியாது. அவைகள் என்னிடமும் அகப்பட்டுக்கொண்டு, இப்பொழுது விழிக்கவில்லையா?

## 8. சத்தியமாய்ச் சொல்லுகிறேன்!

மந்திரிக்கு அழகு வரும் பொருள் உரைத்தல். வரும் பொருள் உரைக்கும் மந்திரிகள், நீண்ட கால மாக, நம்முடைய நாட்டில் இருக்கவில்லை என்பது தெளிவு. இருந்திருந்தால் இந்த முறையில் ஆரம்பிப் பதற்கு சந்தர்ப்பமும் தேவையும் ஏற்பட்டிருக்க மாட்டா.

மேற்சொன்ன பழமொழிக்குத் துணையாக ஒன்று சேர்க்கலாம் என்பது என் எண்ணம். 'பொய்யனுக்கு அழகு சொல்பொருள் மறைத்தல்.' இதிலே பிராஸம், பதம், உண்மை — எல்லாம் சரியாகத்தானே இருக் கின்றன? இன்னும் நூறு இதைப் போல் சேர்த்து விட்டால், புதிய 'கொன்றை வேந்தன்' ஆகிவிடாது!

பேச்சின் நடுவிலே, 'சத்தியமாய்ச் சொல்லு கிறேன் — வாஸ்தவமாகவே — உண்மை!' முதலிய ஆபரணங்கள் சம்பாஷணையை அலங்கரிக்கும் வகை யை நீங்கள் எல்லோரும் கேட்டு அனுபவித்திருப்பீர் கள். 'வாஸ்தவமாக' என்று ஒருவன் அடித்துப் பேசும் பொழுது, உங்கள் மனதில் ஏதோ சந்தேகம் திடீரென்று தோன்றுகிறதே, ஏன்?

இயற்கையாக நீர் ஏறக் கூடாத மேட்டுக்கு, நீரைத் தடுத்து, அதை உயரச்செய்து மேட்டில் ஏற்று வது விவசாயிகளின் வழக்கம். ஆனால் எல்லா பூமி களும் மேடுகள் அல்ல. எல்லா ஆறுகளும், வாய்க்கால் களும் பள்ளத்தில் இருப்பது மில்லை. சம்பாஷணை நடுவே, கேட்பவர் உள்ளம் மேடுதட்டிப் போனால்,

'வாஸ்தவமாக' என்ற அணையைப்போடுவது இயல்பு, என்று சிலர் சொல்லலாம்.

ஏதோ குறிப்பிட்ட ஒரு சமயத்தில் உபயோகப் படுத்தும் சாதனத்தை எல்லாச் சமயங்களிலும் உபயோகப்படுத்தலாமோ? பழகப் பழகப் பாலும் புளிக்கும் என்கிருர்களே, அது பொய்யா? மலிந்து போனதை யாரும் மதிக்கமாட்டார்கள். குப்பையோடு குப்பையாய்ச் சேர்ந்து மண்ணில் அது சோரவேண்டியது தான்.

'வாஸ்தவமாகச் சொல்லுகிறேன்' என்று ஒருவன் சொல்லும் பொழுதே, எதிரி அதை நம்பமாட்டான் என்ற சந்தேகம் அவனிடம் பிறக்கவில்லையா? வெள்ளத்தைத் தடுப்பதற்கு அருகம் புல் அணை போட்டால் போதுமா? கேட்கிறவனுடைய மனதில் சந்தேக வெள்ளம் அலையடித்து மோதுமாகில், 'வாஸ்தவமாக, சத்தியமாக' என்ற தனி வார்த்தைகளைக் கொண்டு அந்த சந்தேகத்தைத் தடுத்துப் போக்க முடியுமா?

சொல்லுவது உண்மையானல், ஏன் சத்தியம் செய்யவேண்டும்? சத்திய சப்பைக் கட்டு கட்டுவதிலேயே, சொல்லுவதில் பொய்யும் உண்மையும் கலந்து இருக்கின்றன என்று கூசாமல் கொள்ளலாம். இதிலே ரகசியம் என்னவென்ருல், பொய் சொல்லத் துவங்குகிற உடனேதான், 'சத்தியமாக' என்ற சப்பைக் கட்டு தோன்றுகிறது.

சொல்லுவதைப் பிறன் நம்பாமல் போனல் அது அவனுக்கு நஷ்டம். சொல்லுகிறவன் ஏன் அவதிப் பட வேண்டும்? பிறன் மனதிலே, தான் சொல்லுவதை எப்படியேனும் புகுத்திவிட வேண்டும் என்ற

ஆவலுக்குக் காரணம் என்ன? பெரும்பாலும் சுய நலம். தன் காரியம் பலிக்கவேண்டியதற்காக, 'வாஸ் தவமாக, சத்தியமாக' என்றெல்லாம் சொல்லவேண்டி யிருக்கிறது.

குடலைத் திறந்து காட்டினாலும், கஜகர்ண வித்தை என்று தீர்மானம் செய்துகொண்டிருப்பவர்களிடம், என்ன உண்மையை ஸ்தாபிக்க, என்ன வார்த்தைக ளைச் சொன்னாலும் பயன்படாது. இவர்கள் பிறவி சந் தேக ஜன்மங்கள். வித விதமாய்ப் பேசினாலும் வித்தை பலிக்காது.

'சத்தியமாய்ச் சொல்லுகிறேன்' என்று சொல்லு வது சொல்லுகிறவனுக்கும் அவமானம், அதைக் கேட் பவனுக்கும் அவமானம். இப்படிச் சொல்லுவதால், தான் பொய்யன் என்று, சொல்லுகிறவன் தனக்கு முடிசூட்டிக்கொள்கிறான். இது அவமானம் அல்லவா? கேட்கிறவனுக்கும் புத்தியில்லை என்று குறிப்பிடுகி றான். இது கேட்கிறவனுக்கு அவமானம் அல்லவா?

ஊதுகிற சங்கை ஊதினால், விடிகிற பொழுது விடியட்டும் என்பதுதான் உண்மை. மனோபாவம் சரியாயிருந்தால், பஞ்சை வார்த்தைகளும் கெட்டி யாய்த் தலை நிமிர்ந்து நிற்கும். மனோபாவம் செல் லரித்துப் போனால், வேத வார்த்தைகளுக்குக் கூடச் சக்தி இருக்காது. முலாம் பூசுதல் தங்கமல்ல; அது மேல் பகட்டு.

## 9. காலம் வரணும்

'காலம் வரணும்' என்று பலர் பிலாக்கணம் பாடுவதை நாம் கேட்டிருக்கிறோம். காலம் 'போட் மெயி'லா, ஸ்டேஷனில் டிக்கட் வாங்கி, அது வந்தவுடன் ஏறி உட்கார்ந்து குறித்த இடம் போய்ச் சேருவதற்கு?

அப்படியே அது 'போட் மெயி'லாயிருந்தாலும், செய்ய வேண்டிய பூர்வாங்கங்களைச் செய்யத்தானே வேண்டும்? மூட்டை முடிச்சுகளைக் கட்டவேண்டும். ஸ்டேஷனுக்குப் போகவேண்டும். டிக்கட், அடிதடி நெருக்கத்தில் வாங்கவேண்டும். கூட்டத்தை இடித்து மிதித்து, ரயில் வண்டியில் இடத்தைச் சம்பாதித்துக் கொள்ளவேண்டும். இத்தனை வேலைகளையும் முன் கூட்டியே செய்ய வேண்டும். இல்லை, இவைகளுக்கும் காலம் வரணுமோ?

'கெட்டது கிழப் பயல் குடித்தனம்' என்று சொல்லுவார்கள். கிழப் பயல் என்றால் சின்ன வயதிலே கிழவனானவன் என்று அர்த்தமல்ல. கிழவர்கள் குடித்தனம் செய்ய எத்தனித்தால்,கிழத்தோடு பயலைச் சேர்க்காமல் என்ன செய்கிறது? துறவு கொள்ள வேண்டியவர்கள், குடித்தனம் செய்ய எத்தனித்தால் தொல்லைதான்.

நமது நடைமுதல் வாழ்க்கைத் தத்துவத்தில் நிறையக் 'கிழடு' தட்டிப் போயிருக்கிறது. வயிரம் பாய்ந்திருக்கிறது. வயிரம் பாய்ந்த காந்தக் கிழடுஅல்ல; முக்காலுக்கு ஏகும் கிழத்தனம். மனிதனை வளர்க்கும்

தத்துவத்துக்கும் பிடித்துக்கொள்ள ஒரு தடி வேண்டி யிருப்பின், அந்தத் தத்துவத்துக்கு 'பிஞ்சின்' கொடுத்துவிட வேண்டியதுதான்.

இந்தியாவின் வியாபாரத்தைக் கவர எண்ணிய கிழக்கு இந்தியக் கம்பெனியார், 'காலம் வரணும்' என்று லண்டன் நகரில் கைகட்டிக்கொண்டு காத் திருந்தார்களா? சுதந்திரத்தை நாடிய அமெரிக்கா யுனைடெட் ஸ்டேட்ஸ் (ஐக்கிய மாகாணங்கள்) 'காலம் வரணும்' என்று பஜனை பண்ணிக்கொண்டிருந் தனவா? கம்பியில்லாத் தந்தியைக் கண்டுபிடித்த மார்கோனி, 'காலம் வரணும்' என்று கம்பளிச் சட் டைக்குள் பதுங்கிக் கிடந்தாரா?

நித்த நித்தம் பகல் உண்டு; இரவு உண்டு. அதிலே மாறுதல் இருக்காது. மரியாதை வார்த்தை களால் சூரியன் கிழக்கே உதித்து மேற்கே அஸ்தமிக் கிருன் என்று சொல்லலாம். நாளுக்கு இருபத்து நான்கு மணி நேரம் என்ற கட்டுப்பாட்டையும் மனித வர்க்கம் எளிதில் மாற்றப் போவதில்லை. அப்படியானல், 'காலம் வரணும்' என்று அர்த்த மில்லாமல் சதா ஜபித்துக்கொண்டிருப்பதில் லாபம் என்ன?

உணவு, உறக்கம், உற்பத்தி — இந்த மூன்று துறைகளிலும், நம்மில் யாரும் 'காலம் வரணும்' என்று காத்திருப்பதே யில்லை. அந்த வேலைகள் ஒழுங் காகத்தான் நடைபெற்று வருகின்றன. அல்ப வாழ்வு வாழும்பொழுது, 'காலம் வரணும்' என்பது குறுக் கிடுவதில்லை. உயர்ந்த வாழ்வைப் பற்றிப் பேச்சு எடுத் தால் போதும். தட்டுக்கூடை தத்துவம் எப்படியோ வந்து தோன்றிவிடுகிறது.

'காலம் வரணும்' என்று, கறி காய் மார்க்கெட்டில் விற்பனைக்கு வரும் சாமான்களுக்காகக் காத்திருப்பதைப் போல் பேசுகிறார்களே, என்ன அபத்தம்? காலம் தானாக வருமா? எந்தச் சித்தாந்தத்திலும் இந்த அருமையான தத்துவோபதேசத்தைக் காண முடியாது. தோற்றவன், கிழவன், கடன் கொடுக்க நிர்வாகமில்லாதவன், பயங்கொள்ளி, வீணன்,—இவர்களும், இந்தக் கூட்டத்தைச் சேர்ந்த பெரியார்களும் தான், 'காலம் வரணும்' என்று, பேச்சையும் காரியத்தையும் நடத்தப் பார்ப்பார்கள்.

1919-ம் வருஷம், தலை குப்புறக் கவிழ்ந்துபோன ஜெர்மனியில், எவரும் 'காலம் வரணும்' என்று பிலாக்கணம் பாடவில்லை. காலத்தைப் பிடித்து இழுத்து, தங்கள் வசமாக்கும் சக்தி இருக்கிறது என்ற உயிருள்ள தத்துவம் அந்தத் தேசத்தில் நடமாடி வந்தது. 1941-ம் வருஷம், ஜெர்மனி தலை நிமிர்ந்து அட்டஹாஸம் செய்கிறதே! நமக்குத் தத்துவத்தில் சக்கை மிச்சம்; அவர்களுக்குத் தத்துவத்தில் 'எஸ்ஸன்ஸ்' (சாரம்) லாபம்.

'அர்ஜுனா! நீ ஞானியைப் போலப் பேசுகிறாய்; உனக்கு வாழ்க்கைத் தத்துவம் தெரியவில்லையே!' என்று கண்ணன் குறிப்பிட்டிருப்பதைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? அர்ஜுனனே போலித் தத்துவம் பேசினான் என்பது கண்ணனுடைய கருத்து. பராக்கிரமசாலியான அர்ஜுனனே, இடறி விழக் கூடுமானால், நம்மவருடைய தற்போதைய போலித் தத்துவத்தைப் பற்றி என்ன சொல்லுவது?

படித்து உழைக்காத மாணவர்கள், தங்கள் தோல்விக்காகப் பரீட்சாதிகாரிகளின் பேரில் பழிபோட்டு,

பொய்ச் சமாதானத்தை மனதில் வருவித்துக் கொள்ள முயலுவது போல், நம்மவர்கள் எவ்வித முயற்சியிலும் உழைப்பிலும் மனப் பிடிப்பு இல்லாமல், ‘காலம் வரணும்’ என்று சாக்குப் போக்குச் சொல்லுகிறார்கள்.

‘தோல்வித் தத்துவம் உதவவே உதவாது; அதைத் தொலைத்துத் தலை முழுக வேண்டும். வாழ்க்கையில் தோல்வி என்பதே கிடையாது. வாழ்க்கையை நிரந்தரப் போராட்டமாக எண்ணிக் காரியம் செய்ய வேண்டும்’ என்று இத்தாலிய சர்வாதிகாரி முஸோலீனி சொல்லுகிறார். இவருடைய தத்துவத்தின் பயனாக, இத்தாலி செழுமை யடைந்து உலக மதிப்புக்கு ஏற்றதாய் விளங்கிற்று சிறிது காலமாவது. ‘காலம் வரணும்’ என்று பிதற்றிக்கொண்டிருப்பவர்கள் வீணர்களாகவும் அடிமைகளாகவும் வாழ்கிறார்கள். சித்திரங்களின் வேற்றுமை இதுதான்.



## 10. இங்கிலீஷ் மோகம்

'ஹோட்டலில், டிராம் வண்டியில், ரயிலில், தெருவில், எங்கே பார்த்தாலும் ஒரே இங்கிலீஷ் முழக்கமா யிருக்கிறதே. பெரிய பெரிய ராஜீயத் தலைவர்கள்கூட இங்கிலீஷில் பேசுகிறார்களே! இது என்ன அநியாயம்!' என்று ஒரு நண்பர், பரபரத்துத் துடித்துக்கொண்டு, என்னிடம் சொன்னார்.

அவருக்கு நான் என்ன பதில் சொல்லுகிறது? இதற்கு என்ன பதில் சொல்ல முடியும்? 'ஆமாம், அப் படித்தானிருக்கும்' என்று சமாதானம் சொல்லு கிறதா? 'அப்படி யிருப்பது தவறு' என்று அவரோடு கூட நானும் அழுத்தமாக ஆட்சேபிக்கிறதா?

நண்பரின் ஆட்சேபம் உண்மைதான். ஆனால் காரியம் நடக்கிற வழியை அல்லவா கவனிக்க வேண் டும்? தமிழ் நாட்டிலே தமிழைத் தவிர வேறு எந்த பாஷையும் பேசுவது அதர்மம் என்று உபதேசம் செய்வதா அல்லது கெஞ்சுவதா? தமிழ்தான் பேச வேண்டும் என்று 144 போடுகிறதா? 144 போடும் அதிகாரம் நமக்கு ஒருவருக்கும் கிடையாது. வேண்டு மானால் அதை மீறுவதற்கு நம்மில் பலருக்கு சக்தியும் உரிமையும் இருக்கலாம்.

ஒவ்வொரு தேசத்திலும் அந்த நாட்டார் தங்கள் தாய் பாஷையிலேதான் பேசுகிறார்கள் என்ற உண் மையை எடுத்துச் சொன்னால் போதுமா? இந்த நாட் டில் குடியேறி, மதப் பிரசாரம் செய்யும் பிரெஞ்சு, ரோமன் கத்தோலிக்கப் பாதிரிமார்கள்கூடத் தங்

களுக்குள் பிரெஞ்சு பாஷைதான் பேசுகிறார்கள். இது தமிழர்களுக்குத் தெரியுமோ?

இங்கிலாந்திலே, பார்லிமெண்டு சபைகளில் வாதமும் பேச்சும் ஜெர்மன் பாஷையில் நடைபெறவில்லை, இங்கிலீஷிலேதான் நடைபெறுகிறது என்ற சங்கதி தமிழர்களுக்குத் தெரியுமோ? சீமைக்குப் போய்ப் பார்த்தால்தான் தெரியும் என்று சொல்லுவார்களோ என்னவோ!

அவ்வளவு தூரம்கூடப் போகத் தேவையில்லை. இரண்டு மலையாளிகள் சேர்ந்தால், அவர்கள் ஒரு நாளும் இங்கிலீஷ் பேசுவதில்லை. தெலுங்கர்களும் அவ்வாறுதான் செய்கிறார்கள். வடநாட்டிலிருந்து வருபவர்கள் யாவரும் தத்தம் தாய் பாஷையிலே தான் பேசுகிறார்கள். என்றாலும் தமிழ் நாட்டிலே இங்கிலீஷ் முழக்கம்!

சுதந்திரமுள்ள நாட்டார் தங்கள் தாய் பாஷையிலேதான் பேசுவார்கள் என்று சிலர் அசட்டுவாதம் செய்யக்கூடும். நம்மைப் போலவே சுதந்திரமில்லாத மலையாளிகளும் தெலுங்கர்களும், தங்கள் தாய் பாஷைகளிலேதான் பேசுகிறார்கள். இதை மறுக்க, குயுக்தி சமாதானம் ஏதாவது இருக்கிறதா?

‘இங்கிலீஷ் நயமான பாஷை, அதிலே பேசுவதில் கஷ்டமே யில்லை. நம்முடைய கருத்துக்கள் யாவற்றையும் அதிலே எளிதாகச் சொல்ல முடியும்’ என்று சிலர் வீண் வாதம் செய்வார்கள். இந்த மனோபாவத்தைத்தான் நாம் நன்றாகக் கவனிக்க வேண்டும். இந்த மனப்பான்மையை ஆராய்ந்து பார்த்தால், முதலில் துடிதுடித்துச் சொன்ன நண்பருக்கு, தக்க பதில் சொன்னாலும் சொல்ல முடியும்.

அழகான, சௌகரியமான இங்கிலீஷ் இலக்கிய பங்களாவைப் போலக் கட்டிக் கொள்ளுவதற்குத் தான், மற்றவர்கள் முயற்சி செய்ய வேண்டும். இது தான் சாதாரண மனித இயற்கை. இதை மீறிய இயற்கை, வீணனுடைய சுபாவமாகும், அடிமை யினுடைய சுபாவமாகும்.

'வயிற்றுப் பிழைப்புக்காக இங்கிலீஷ் பேசு கிறோம்' என்று பலர் சொல்லுகிறார்கள். வயிற்றுப் பிழைப்பு என்பது உண்மைதான். ஆனால் அதைப் பற்றி, கௌரவக் குறைவான முறையில் அடிக்கடி பேசுவது தவறு. வயிற்றுப் பிழைப்பு என்று எந்தக் கேவலமான காரியத்தையும் செய்ய நமக்கு அசட்டுத் துணிச்சல் இருக்குமா? வயிற்றுப் பிழைப்பைப் பற்றி விஸ்தாரமாகப் பேசினால், நமக்கும் கால்நடைகளுக் கும் வித்தியாசமே கிடையாது. நான் திட்டுவதாக எண்ணுவது தவறு, — நிலைமை அதுதான்.

'தமிழில் சொல்ல வரவில்லையே!' என்கிறார்கள் பலர். தமிழ் தானாகப் பேசுமா? நாம் பேசிப் பார்த் திருக்கிறோமா? தமிழில் சொல்லுவது கஷ்டமாகவே இருப்பதாக வைத்துக்கொள்ளுவோம். அது யாரு டைய தவறு? தமிழ், குழந்தையைப் போல, வளர்த் தால் வளரும்; அலட்சியமாய் விட்டுவிட்டால் வளராது.

தமிழைப் பக்குவப்படுத்தி, நம் முன்னோர்கள் விட்டுவிட்டுப் போகவில்லையே என்று நாம் குறைகூற முடியுமா? நம் தகப்பன்மார்கள் லட்ச ரூபாய் சொத்து வைத்துவிட்டுப் போகவில்லையே என்று வருந்தலாமா, அல்லது வருந்துகிறோமா? தகப்பனார் லட்ச ரூபாய் வைத்துவிட்டுப் போனால், அதைச்

செலவு செய்யத்தான் நாம் கற்றுக்கொள்ளுவோம். சம்பாதிக்கக் கற்றுக்கொள்ள மாட்டோம். பெரியவர்கள் நமக்கு விட்டுவிட்டுப் போன அல்ப சொத்தையும் அல்ட்சியம் செய்து, அழிக்கவா நாம் பிறந்திருக்கிறோம்? கேவலம்!

பக்குவமாகச் சமைத்துப் பிறர் போட்டால், உண்பதற்கு நாம் லாயக்கானவர்கள் என்று சொல்லுவது போல நாம் நடந்துகொள்ளுகிறோம். இப்படிச் சொன்னால் நம்மில் பலருக்குக் கோபம் வரலாம். கோபம் வரவேண்டும் என்றுதான் நான் இவ்வாறு எழுதுகிறேன். நல்ல சங்கதிகளைப் பற்றி, நமக்கு ஆத்திரமும் துடிதுடிப்பும் ஏற்பட்டாலொழிய, நமக்கெல்லோருக்கும் கதி மோட்சம் கிடையாது. வெறும் வாய்ச் சாலகம், எழுத்து ஜாலம் பயன்படமாட்டா.

'நம்முடையது என்று பாஷைகூட இருக்கப்படாதா? தெய்வமே!' என்று கூடச் சொல்ல என் மனம் கூசுகிறது. தெய்வம் என்ன செய்ய முடியும்? நமது வாழ்க்கையில் அலட்சியமும் வக்கிர புத்தியும் நிரம்பியிருந்தால், தெய்வம்கூட நம்மைத் திருத்த முடியாது. கர்ம பலனை மூட்டையாகக் கட்டிக் கடலில் எறிய வேண்டியதுதான்! என்ன போலி வேதாந்தம்! என்ன அசட்டுச் சமாதானம்! என்ன அலட்சிய புத்தி! என்ன கேவலமான வாழ்க்கை!

பலவேறு கூறுகளாகப் பிரிந்து கிடக்கும் தமிழர்கள் எல்லோருக்கும் பொதுவான சொத்து, ஒன்றே ஒன்றுதான் பாக்கியிருக்கிறது. அதுதான் நமது ஜீவ நாடியை வளர்த்துக் காக்கும் அருந்தனமாகும். அந்தப் பொக்கிஷமிருக்கும் கோயிலிலேதான், நாம் எல்லோரும், ஜாதி மதம், ஆண் பெண் குழந்தை முத

லிய வித்தியாசங்கள் இல்லாமல், கும்பிடலாம். தமிழ் பாஷைதான் அந்த அருந்தனமாகும்.

தமிழ் பாஷையைக் கொண்டுதான் நாம் உயர முடியும். ஒற்றுமையாக வாழ முடியும். அந்த ஒரு சாதனந்தான் நமக்கு மிஞ்சியிருக்கிறது. அதையும் கை விட்டுவிட்டு, கையை விரிக்க வேண்டாம். ஒருவர் மற்றவரைத் திட்டினாலும், தீர்க்கமாக, நன்றாகத் தமிழில் திட்டுங்கள். 'டாம், ஆஸ், டாங்கி' என்று திட்ட வேண்டாமே! என்னையே முட்டாள் என்று தமிழில் திட்டுங்கள். இங்கிலீஷில் திட்டினால் வேகம் இருக்காது.

எதற்கும் அர்த்தமில்லாத சமாதானத்தைச் சொல்லி, பொழுது போக்கும் கெட்ட வழக்கம் நம்மை எப்பொழுது விடுமோ? கட்டுவது சிரமம்; கட்டின வீட்டிலே குடியிருப்பது சிரமமல்ல; கலியாணம்செய்து குடித்தனம் நடத்துவது சிரமம்; விபசாரம் செய்வது சிரமமல்ல. உழைப்பது சிரமம்; உண்பது சிரமமல்ல. மானத்தைக் காப்பது சிரமம்; மானத்தை இழப்பது சிரமமல்ல. முயற்சிதான் சிரமம்; வெட்டி வம்பு சிரமமல்ல. புதையல் எடுத்து வாழ்க்கை நடத்த முடியாது. பிறர் சொத்தால் கௌரவமும் பதவியும் ஏற்படாது.

# 11. தூய தனித் தமிழ்

திருநெல்வேலியில், தமிழர் மகாநாடு கூடிய பொழுது, கா. சுப்ரமணிய பிள்ளை அவர்கள், வரவேற்புப் பிரசங்கம் செய்திருக்கிறார். பிள்ளையவர்கள் ரொம்பப் படித்தவர், தமிழும் சரி, இங்கிலீஷும் சரி. இவர் தனித் தமிழ் கோஷ்டிக்குப் பிரதிநிதி. இவருடைய கட்சியை ஆராயவேண்டியது அவசியம்.

தமிழ், ஆதிசிவன் பெற்றது என்ற மரியாதையை உண்மையாகக் கொண்டிருப்பவர்களிடம் கட்சிவாதம் செய்வதில் பயனில்லை. அவர்களையும் தமிழையும் விழுந்து கும்பிட வேண்டியதுதான். மனிதனுடைய தேவைக்காக, மனிதனால், மனிதக் கூட்டத்தால், கஷ்டப்பட்டு ஆக்கப்பட்டது பாஷை என்று எண்ணுபவர்களிடம்தான், கட்சி வாதம் செய்ய முடியும்.

சென்றது தூய்மை, நடப்பது கேவலம், நடக்கப் போவது மகா கேவலம் என்று எண்ணுவது ஒருவித வைதிக மனப்பான்மை. இந்த மனப்பான்மைக்கு மாற்றுத் தேட முடியாது. நெபோலியன் கேலி செய்தது போல, கேலி செய்யலாம். ஆஸ்திரியா தேசத்து ராஜ குமாரத்தியைக் கலியாணம் செய்துகொள்ள நெபோலியன் தீர்மானிக்கையில், அசட்டு மந்திரியொருவன், 'ராஜகுமாரியின் ரத்தம் தூய ராஜ ரத்தமாயிற்றே! அவளைத் தங்களுக்குக் கலியாணம் செய்து கொடுக்க, அவர்கள் சம்மதிப்பார்களா?' என்று சொன்னானும். 'என்னுடைய ரத்தம் மட்டும் சாக்கடைக் குட்டைத் தண்ணீரோ?' என்று நெபோலியன் கேலி செய்து நகைத்தாராம்.

இறந்த காலம், நிகழ் காலம், எதிர் காலம் — எல்லாக் காலங்களுக்கும் தூய்மை பொதுவான சங்கதியாகும். நிலைத்து, அழகுடனும் ஜீவ-களையுடனும் நிற்பதுதான் தூய்மை கொண்டதாகும். மற்றைய யாவும் குட்டிச் சுவர்கள்; அல்லது குட்டைப் பாசிகள்.

தூய்மை என்ற பதத்தைப் பிரயோகித்து, 'கிட்ட நெருங்காதே!' என்று நோட்டீஸ் போடுவதைப்போல, தமிழை அடித்துவிட்டார்கள் தமிழ்ப் பண்டிதர்கள். சாதாரணத் தமிழர்கள் தமிழ் பேசக்கூடப் பயப்படுகிறார்கள். இது பண்டிதர்கள் தமிழுக்குச் செய்த தொண்டு.

இருக்கட்டும். கா. சுப்ரமணிய பிள்ளை தமிழ் பேசுவதும் நான் இங்கிலீஷ் பேசுவதும் ஒன்றுதான். இரண்டும் தமிழ் பேசும் தமிழர்களுக்குப் புரியாது. தமிழ் எல்லோருக்கும் புரியவேண்டுமே என்ற பொறுப்பும் கவலையும் தூய தனித் தமிழ்க் கூட்டத்தாருக்கு, கிடையவே கிடையாது. பொருள் விளங்காத நூலைப் பெரிய நூல் என்று சொல்லுவது போல, அர்த்தமாகாத பாஷையை, தமிழ் என்று சொல்லிக் கொண்டு, இவர்கள் காலந் தள்ள வேண்டியதுதான்.

தனித் தமிழ்ப் பண்டிதர்களின் ஆட்சியில் தமிழ் இருந்த காலத்தில், இவர்கள் தமிழுக்காக என்ன செய்தார்கள்? ஒருவருக்கும் அர்த்தமாகாத தமிழை, சுவையும் கவர்ச்சியு மில்லாத நடையில் எழுதி, குழூஉக் குறியாக அடித்துவிட்டார்கள். அருணாசலக் கவிராயர், புகழேந்தி, கோபால கிருஷ்ண பாரதியார், அண்ணாமலை ரெட்டியாரைப் போன்ற உத்தமர்கள் வெள்ளைத் தமிழ் எழுதி, தமிழைச் சாகாமல் காத்தார்கள்.

தமிழும் நமக்குக்கூடச் சொந்தம் போலிருக் கிறதே என்று சந்தோஷங்கொண்டு, சாமான்யத் தமி ழன் பெருமூச்சு விட்டான். பண்டிதர்கள், தாங்கள் தமிழை உயிர் வதை செய்துவிட்டு, சாமான்யத் தமி ழனை அவமானத்துக்கும் ஏச்சுக்கும் ஆளாக்கிவிட்டு, இப்பொழுது அதை வளர்த்து சாமான்யத் தமிழனுடைய தன்மதிப்பைப் பாதுகாக்க முன்வரும் உழைப்பாளிகளின் பேரில், கூசாமல் பழியையும் சுமத்த முன்வந்திருக்கிறார்கள்.

சாமான்யத் தமிழர்கள் பாடுபட்டு வளர்த்து வரும் தமிழை இவர்கள் ஏளனம் செய்கிறார்கள். பாஷை சம்பந்தப்பட்ட வரையிலும் இது ஒருவகைப் பரம்பரை இறுமாப்பு; இதை இளந் தமிழ் ஆசிரியர் களும் ஏனைய தமிழர்களும் லட்சியம் செய்யவேண் டியதில்லை.

எழுத்துக்களை மாற்றவோ, கூட்டவோ, குறைக் கவோ கூடாதென்றும், தமிழ் எழுத்துக்கள் 'ஓம்' என்ற பிரணவத்திலிருந்து பிறந்தவை யென்றும் பிள்ளையவர்கள் சொல்லுகிறார். அப்படியானால், அ, இ, உ - இந்த மூன்று உயிர் எழுத்துக்களே போதும். 'அ' என்ற எழுத்து மட்டுமே போதும் என்று எனக் குத் தோன்றுகிறது.. பஞ்சக் காலத்தில், எழுத்துச் செட்டும் நாம் பழக்கிக்கொள்ளலாம்!

'ர'வுக்கு 'ற'வும், 'ன'வுக்கு 'ந'வும் மாற்றிப் போட் டால் குழப்பம் வந்துவிடும் என்கிறார். வங்காளி பாஷையில் ச, ஸ, ஷ என்ற எழுத்துக்களையே பேத மன்னியில் வங்காளிகள் பேசுகிறார்கள். 'வ'வுக்கும் 'ப'வுக்கும் உச்சரிப்பில் வித்தியாசம் அவர்கள் பாராட் டுவதில்லை. பாஷை எப்படிக் கெட்டுப் போய், குழப்

பம் வந்துவிட்டது என்று எனக்குத் தெரியவில்லை. பிற நாட்டார் வங்காளி பாஷையைத்தான் அதிகமாகக் கற்கிறார்கள்.

குரங்கிலிருந்து மனிதனான காலந்தொட்டு இருந்துவரும் தூய தனித் தமிழை, பிறநாட்டார் விழுந்து விழுந்து படிப்பதாகத் தெரியவில்லை. உச்சரிப்பு பேதமில்லாத அபத்த வங்காளி பாஷை இலக்கியத்துக்கு 'நோபல்' பரிசாம்! பிள்ளையவர்களின் 'தூய்மை' மனப்பான்மையில் இடி விழும்படியாக, பிறநாட்டு 'நோபல்' பரிசுக் கூட்டத்தார் காரியம் செய்வது சுத்தத் தவறு!

அருமருந்தன்ன, ஆயிற்று, போயிற்று, குழாம், கழகம் என்று பண்டிதர்கள் கரடியாய்க் கத்திப் பார்த்தார்களே, அது முடிந்ததா? அருமந்த, ஆச்சு, போச்சு, கூட்டம், சபை என்றுதான் சாமான்யர்கள் பிடிவாதமாகச் சொல்லத் தலைப்பட்டார்கள். இலக்கணமோ வெட்கிப்போய், தலை குனிந்து, சாமான்யர்களின் பேச்சை ஒப்புக்கொண்டது.

திண்ணையில் உட்கார்ந்துகொண்டு, பண்டிதர்கள், 'பத்து மாடுகள் வந்தன' என்று தொண்டை வற்றும் படியாகச் சொல்லிப் பார்த்தார்கள். 'பத்து மாடு வந்தது' என்று அழகுபட சாமான்யன் சொன்னான். யார் கட்சி ஜயித்தது? சாமான்யன் முட்டாள் என்றால், அதைத் திருப்பிச் சொல்ல, அவனுக்கு தைரியமும் பத்து மடங்கு பாத்தியமும் உண்டு.

எழுத்துக்களிலே, ஆண், பெண், அலி என்று பிரிவுகளாம். பெண் எழுத்துக்கள் துணையின்றி வெளியே வரப்படாதாம்! ய, வ என்ற அலி எழுத்துக்கள்கூட, துணையில்லாமல் வெளியே வரலாமாம்! ஆண் பெண்

ணுக்குத் தாலி கட்டுகிற வரையிலும், பெண்ணுக்குச் சொத்து உரிமை வோட்டுரிமை இல்லாத வரையிலும், இந்த இலக்கணம் செல்லும். அதற்கப்புறம், ஒரு விஞடிகூடச் செல்லாது.

மனித வர்க்கமே, தேசம், தரை எல்லே, நீர் எல்லே முதலியவைகளேக் கடந்து, ஒன்றுசேர முயற்சி செய்துகொண்டு வருகிறது. எல்லா பாஷைகளிலும் அவசியமான வார்த்தைகளே, அப்படியே அவைகளின் உருவங்களேச் சிதைக்காமல் சேர்த்துக்கொண்டு வருகிருர்கள். தமிழுக்கும் தமிழர்களுக்கும் மட்டும் இந்தத் தேவை வேண்டாம் போலிருக்கிறது.

'கம்பீரமான தனிமை' என்பது அரசியலில் கூடச் செல்லாது என்று இங்கிலாந்துக்கு உபதேசம் செய்தார் டிஸ்ரேலி பிரபு. எந்தக் கூட்டமும், எந்தத் தேசமும் இனிமேல் தனித்து வாழவே முடியாது. இந்த உண்மையை, பிற்போக்காளர்களான ஆங்கிலேயர்களும் கண்டுகொண்டு விட்டார்கள்.

எத்துணே என்று யாராவது சொல்லுகிருர்களா? எத்துணே என்பது அழகாக எத்தனே என்று மாறி விட்டது. நிரம்ப என்று ஒருவரும் சொல்வதில்லே. ரொம்ப என்றுதான் சொல்லுகிருர்கள். பழகிப் பழகித்தான் வார்த்தைகள் அழகாகும். மெருகு ஏறும்.

நன்னூல் சூத்திரங்களே மாற்ற வேண்டியிருக்குமே என்று பிள்ளேயவர்கள் ரொம்பவும் வருத்தப் படுகிருர். கீழ்க் கோர்ட்டாரின் தீர்ப்பை மாற்ற வேண்டுமே என்று ஹைக்கோர்ட்டார் கவலேப்பட்டு வருந்துவதே யில்லே.

அரசியலும், மதமும், பாஷையும் ஜனநாயக ஆவேசங்கொண்ட பொது மக்களுக்காகத்தான் இருக்

கின்றன. ஒரு கூட்டத்தாரின் நன்மைக்காக, ஒரு கூட்டத்தார் அதிகாரம் செலுத்துவதற்காக, இவைகள் மூன்றும் இருக்கவில்லை. பெரிய மனிதர்கள், புரோகிதர்கள், பண்டிதர்கள் என்று சொல்லப்படுபவர்கள், பொது ஜனங்களின் பிரதிநிதிகள் என்ற உரிமை பெற்று, பொது ஜனங்களின் ஆசாபாசங்களைத் தழுவிய மனப்பான்மை பெற்றாலொழிய, அவர்களுடைய உபதேசத்தை சாமான்யர்கள் இனிமேல் கேட்கவே மாட்டார்கள்.

தமிழ் ஜன சமூகத்தை அடியோடு புதுப்பித்து நிர்மாணம் செய்யவேண்டிய காலமும் தேவையும் வந்துவிட்டன. அந்தப் புதிய நிர்மாணத்துக்கு ஏற்றாற்போல, பாஷையை அமைத்துக்கொள்ளத்தான் வேண்டும். யார் தடை செய்தாலும், அது பலிக்காது. காலப்போக்கையும் தேவையையும் தழுவி, தன்னலமோ, தனிக் கூட்ட நலமோ இல்லாமல், பொது நலமொன்றையே கருத்தில்கொண்டு, இதம் சொல்லுபவர்களின் வார்த்தைகள்தான் இனிமேல் எடுபடும்.



## 12. அவனுக்கு அதிருஷ்டம்!

நொந்து போன கருடனை, காக்கைக் குஞ்சு கொத்தும் என்று சொல்லுவதுண்டு. சறுக்கி விழுந்து அடிபட்டவனை, சமாதியில் வைக்க எல்லாரும் தயாராய் இருப்பார்கள் என்று சொன்னால், அதில் உண்மை இருக்கிறதா, இல்லையா?

தோற்றவனுக்கு, ஏனைய யாவரும் உபதேசிகள் அல்லது விரோதிகள். ஜயித்தவனுக்கு, ஏனையோர் பக்தி செலுத்துவது ஒருவகை இயற்கை. ஒருவன் செத்துப்போனால், அவன் உடலை மற்றவர்கள் மதிப்ப தில்லை. இந்த அலட்சியம் மனிதர்களிடம் மட்டுமா? நாய், நரி, கழுகு, புழு முதலியவை தயாராய்க் காத்துக் கொண்டிருக்கின்றன.

உயிருள்ள வரையிலேதான் ஓட்டம். உயிர் போயின் எல்லாம் மட்டம்தான். மனித வர்க்கத்தைப் பீடித்து நிற்கும் சாபம் போல் இருக்கிறது இது. ஹிந்து ஜன சமூகம் ஏதோ ஒரு சமயத்தில் சறுக்கி விழுந்தது என்பது உண்மை. அதனால், நாய், நரி, கழுகு, புழு முதலிய தத்துவங்களும் பழமொழி களும் அதைக் கவ்வி, பலியிட்டுக்கொண்டு வரவேண் டுமா?

குடியில்லாத வீடு பாழ். அந்த வீடு இடிந்து, மண்ணோடு மண்ணாய்ப் போவதற்கு இடிகூலிச் செலவு வேண்டியதே யில்லை. உயிருள்ள தேகம்கூட, அந்தத் தேகத்தினுள்ளே பொதிந்து கிடக்கும் உயிரின் தன் மையைப் பொறுத்து, பொலிவுடனும் சக்தியுடனும்

விளங்குகின்றது. உயிரின் ஓட்டத்தைப் பொறுத்தது தானே இளமையும் கிழப் பருவமும்?

'ஒரு மனிதனுடைய நண்பர்களை என்னிடம் காண்பி. அந்த மனிதனுடைய குண விசேஷங்களை உனக்குச் சொல்லிவிடுகிறேன்' என்றார் ஒரு பெரியார். உண்மை. ஒரு ஜன சமூகத்தினிடையே வழங்கும் பழ மொழிகளையும் பேச்சுத் தத்துவங்களையும் கொண்டு அந்த சமூகத்தின் ஜீவ நாடியை அளந்துவிடலாம்.

ஒரு வெள்ளைக்காரன், அதிருஷ்டத்தைப் பற்றி அதிகமாகப் பேசமாட்டான். நாமோ அதைத் தவிர வேறு எதையும் பற்றி அதிகமாகப் பேசுவதில்லை. திருஷ்டத்தில் (பார்வையில்) அகப்படாதது எல்லாம் அதிருஷ்டம் (பார்க்க முடியாதது) தான். இந்த அர்த் தத்தில் பார்த்தால், ஸயன்ஸ் கண்டுபிடித்திருக்கும் அற்புத அறிவு யாவும் அதிருஷ்ட இனத்தில் சேர்க்கப் பட வேண்டியவைகள். ஆனால் அதிருஷ்டத்தைப் பற்றி, நாம் போடும் கூச்சல் அருவருக்கத் தக்க தாகும்.

'அவனுக்கு அதிருஷ்டம் அப்பா!' என்று எவ் வளவு ஸ்வாரஸ்யமாகச் சொல்லுகிறோம்! நெருக் கடிக்குத் தேவையான சொற்களை யெல்லாம் நடை முதலில் உபயோகிப்பது என்று வந்துவிட்டால் பாஷை பாழ்தான். வீட்டு நகைகளை நெருக்கடிக்காக விற்கலாம்; அவைகளைத் தினம் தினம் விற்று ஜீவனம் செய்ய முடியுமோ?

விருந்தும் பத்தியமும் தினசரி சம்பவங்கள் அல்ல. அவைகள் எப்பொழுதோ தோன்றும் திரு நாட்கள். திருநாட்களைத் தினசரி வெறுநாட்களாக மதிப்பது அழகாமா, அறிவாமா? மனிதனுடைய அறி

வுக்கும் ஆராய்ச்சிக்கும் புலப்படாத சில நிகழ்ச்சிகள் இருக்கின்றன. ஆனால் அவைகள் வாழ்க்கை நடை முதல் நிகழ்ச்சிகள் அல்ல.

அதிருஷ்டம், அதிருஷ்டம்! என்ன வேண்டியிருக்கிறது! கண்மூடி வாழ்வு வாழ்ந்துகொண்டிருக்கும் வரையில், நமக்கு எதுதான் அதிருஷ்டமாயும் துரதிருஷ்டமாயும் தோன்றுது? சம்பவங்கள் யாவும் நமது அறிவுக்கும் ஆராய்ச்சிக்கும் எட்டாத நிலைக்கு வந்து விடுமாகில், நாம் உயிருடனிருந்து வாழ்வதனால் என்ன பயன்?

அதிருஷ்டத்துக்கும் துரதிருஷ்டத்துக்கும் மனித முயற்சியால் மாற்றுத் தேட முடியாது என்பது சாதாரண எண்ணம். ஆனால் நமது முன்னோர்கள் முட்டாள்கள் அல்ல. அவர்கள் அதிருஷ்டத்தை நம்பி வாழவுமில்லை. விதியைக் கூட வெல்ல முடியும் என்பதற்கு ருசுக் காண்பிப்பது போல், மார்க்கண்டன் கதையை பரம்பரையாக நமக்குச் சொல்லி வந்திருக்கிறார்கள்.

நியாய புத்தி இருப்பவன் காதிலேதான் தர்மோபதேசம் ஏறும் என்று விவேகானந்தர் சொன்னது உண்மை. பலசாலி, இன்னும் அதிகமான சக்தியை நாடுகிறான். பலவீனனோ, இன்னும் கேவலமான பலவீனத்தில் ஆசை கொள்ளுகிறான். இடத்தை விட்டு நகர, பிரியமும் சக்தியுமில்லாதவன் சோம்பல் தத்துவத்தைத்தான் ஏற்பான். உழைப்பையும் ஊக்கத்தையும் பற்றி அவனுக்கு என்ன கவலை?

தினசரி வாழ்க்கைக்கும் அதிருஷ்டத்துக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. அதிருஷ்டத்தை நம்பி, போட்டிப் பந்தயத்தில் விழுந்து, கையிலிருக்கிற

காசையும் பறிகொடுத்துவிட்டு, கவலை பிடித்து இறக்கவேண்டியதுதான். அதிருஷ்டத்தால் ஆகாத காரியம் உண்டா என்று சொல்லிக்கொண்டு, பிறன் கைச் சாப்பாட்டுக்குக் காத்திருக்கவும் செய்யலாம்!

லோகத்திலே அதிருஷ்டத்தை நம்பி யாராயினும் பெரிய காரியங்களைச் சாதித்திருக்கிறார்களா? நம்மவர்களை மட்டும்தான் இந்த அதிருஷ்டப் பேய் பிடித்து ஆட்டிவைக்க வேண்டுமா? எல்லாம் ஈசன், எல்லாம் உழைப்பு என்ற நாணயமான செலாவணித் தத்துவம் போய், எல்லாம் அதிருஷ்டம் என்று சொல்லித் தவிக்கும் பரிதாப நிலைக்கு நாம் வரவேண்டுமா?

நொண்டிக்கு வேலை செய்ய முடியாதது அதிருஷ்டமா? அப்படியானால் நாம் எல்லோரும் நொண்டிகளா யிருக்கலாமா? வியாதியால் படுத்த படுக்கையாகக் கிடக்கையில், பத்துப் பேர்கள் கட்டிக் காத்துக்கொண்டிருப்பின், அது அதிருஷ்டமா? அப்படியானால், நாம் சதா நோயாளிகளா யிருக்கலாமே! ஆனால் அப்பொழுது கட்டிக் காப்பதற்கு ஒருவரும் மிஞ்சமாட்டார்கள்.

அதிருஷ்ட தத்துவத்தைச் சோதித்துப் பார்த்தால், முக்கால் பங்கு சோம்பலும், கால் பங்கு தன்னம்பிக்கைக் குறைவும் இருப்பதைக் காணலாம். வீதாசாரம் எப்படி வேண்டுமானாலும் வைத்துக்கொள்ளுங்கள். அதைப்பற்றிச் சச்சரவு வேண்டாம். கிழடுகள் அதிருஷ்டத்தைப் பற்றிப் பேசலாம். அவர்களுக்கு, சாவு அதிருஷ்டம் (கண்ணில் படாதது). மற்றவர்கள் பேசலாமோ?

பலவீனத்தையும் சோர்வையும் தரும் சொற்களும் பழமொழிகளும் நம்மவர்களிடம் அண்டிக்கொண்டு

அட்டகாசம் செய்யும் ஆச்சரியமே ஆச்சரியம்! பல வீன வார்த்தை ஒன்று வந்தால், அது தன் இனத்தை யெல்லாம் வம்ச பரம்பரையாகக் கூட்டிக்கொண்டு வந்திருக்கிற அழகே அழகு! இவைகள் நம்மவர்களை விருந்துக் களமாக அடித்துவிட்டன.

அதிருஷ்டத்தை நம்பி வாழ்ந்தவரும் கிடையாது. உழைப்பை நம்பிக் கெட்டவரும் இல்லை. அதிருஷ்டம் என்பது நம்மவர்களை வெகுதூரம் வரையில் சூட்சுமமாகக் கெடுத்துவிட்டது. தட்டிக்கொடுத்துத் தம்பியைக் கெடுத்தான் என்று சொல்லுவதுண்டு. மாய அதிருஷ்டம் பேசி, நாம் உழைப்பை மறந்து போனோம். அதிருஷ்டத்தை நம்பி, அழகான நடை முதல் வாழ்வைப் பலியிட்டுவிட்டோம். அதிருஷ்டமே! வெள்ளைக்கார நாடுகளுக்குப் போய், அவர்களுடைய உழைப்பையும், ஊக்கத்தையும், தன்னம்பிக்கையையும் ஒரு சின்னக் கப்பலில் எங்களுக்கு அனுப்பு! உனக்குக் கோடி நமஸ்காரம். நீ இந்நாட்டில் இல்லை என்று நாங்கள் அழுது புலம்பமாட்டோம்.



## 13. சம்பாஷணை முறை

‘காட்டைக் கட்டலாம். மலையைப் பிளக்கலாம். நீரின் பேரில் நடக்கலாம். வேறொருவர் காணமல் உலகத்தில் உலாவலாம்; நெருப்பு ஆசனத்தில் அமர்ந்திருக்கலாம்’...... இவை போன்றவை பெரிய பேச்சுகள். பெரிய இடத்துப் பேச்சுகளுங்கூட! இப்படியெல்லாம் செய்வது சாத்தியமான சங்கதிகள் என்று சொன்னல், அது லட்சத்தில் ஒருவருக்கு சாத்தியமாயிருக்கலாமோ என்னவோ? அதுவும் சந்தேகம்.

சாதாரண நடைமுதல் வாழ்வுக்குச் சில சங்கதிகள் தேவை. அவ்வாறு தேவையான விஷயங்களில் சம்பாஷணை ஒன்றுகும். ஒருவருக்கு மேற்பட்டால் சம்பாஷணை இல்லாமல் முடியாது. செய்யும் காரியத்தைத் தெளிந்துகொள்ளுவதற்கும், பேச்சு (சம்பாஷணை) மிகவும் அவசியமானது.

இந்த அத்தியாவசியமான சம்பாஷணைச் சங்கதியைப் பற்றி, நம்மில் எத்தனை பேர்கள் சரியான கவனம் செலுத்துகிறுர்கள்! இரண்டு பேர்கள் கூடிக்கொண்டால், இப்பொழுது இரண்டுவிதக் காரியங்கள்தான் நடைபெறுகின்றன: ஒன்று மௌனம் அல்லது சண்டை. இனிப்பான சம்பாஷணை நடைபெறுவதேயில்லை.

‘எல்லாப் பாடங்களையும் வாசிக்கிருயே? உனக்குத் தமிழ்ப் பாடம் கிடையாதோ?’ என்று சமீபத்தில் ஒரு பையனைக் கேட்டேன். அவனுடைய பதில் என்னைத் திடுக்கிடும்படி செய்துவிட்டது. அவன் சொன்ஞன், ‘தமிழ்ப் பாடம் உண்டு; ஆனல் தமிழ்ப் பாடத்

தைப் படிக்காமலே பரீட்சையில் தேறிவிடலா' மென்று. இது எனக்கு அதிசயமா யிருந்தது.

அவன் சொன்ன பதிலிலிருந்து, அவன் தமிழில் கெட்டிக்காரன் என்று அர்த்தம் செய்துகொள்ள முடியாது. அவனுக்குத் தமிழிலே அவ்வளவு அலட்சியம். படிக்காமலே இருந்துவிடலாம் என்பது அவன் எண்ணம். இந்த நினைப்பை, சாதாரணமாய் நமது மாணவர்களிடம் காணலாம்.

பையன்களுக்குத் தமிழிலே எவ்வளவு அலட்சியமோ, அவ்வளவு அலட்சியம் பெரியவர்களுக்கு சம்பாஷணையில். சம்பாஷணைக்குத் தேவையான சில விதிகள் இருப்பதாகவே அவர்களுக்குப் படுவதில்லை. சம்பாஷணைக்கு விஷயம், வரம்பு, இனிப்பு, இதமான சொற்கள் முதலிய லட்சணங்கள் தேவை என்பதை அவர்கள் உணர்ந்ததே யில்லை.

. சம்பாஷணை என்றால் எதை வேண்டுமானாலும் பேசலாம் என்று வந்துவிட்டால், அது சண்டையில் முடிகிறதைத் தவிர, வேறு எந்த முடிவையும் காண முடியாது. எழுதுகிற பொழுது வார்த்தைகளை நாம் எப்படிப் பொறுக்கி எடைபோட்டு உபயோகப் படுத்துகிறோமோ அப்படிச் செய்தால்தான் சம்பாஷணை ஸ்வாரஸ்யமா யிருக்கும். சம்பாஷணை என்பதை பேச்சு-இலக்கியமாகக் கருதவேண்டும்.

பேச்சிலே ரஸிகத்தன்மை மட்டும் இருந்தால் போதாது. ஒருவர் மனதை மற்றவர் அறிந்துகொள்ளுவதற்குப் பேச்சைவிட வேறு சிறந்த சாதனம் ஏது? பேச்சுப்பேசும் பொழுதே பொய் சொல்ல ஆரம்பித்துவிட்டால், அந்தப் பேச்சினால் ஒரு லாபமுமில்லை. அது வீணான தொண்டைச் சேதம்.

காலச் செட்டுக்காகவும் தெளிவின் பொருட்டும் நாம் உண்மை பேசவேண்டிய தேவை ஏற்பட்டிருக்கிறது. பொய்யைச் சொல்லிக்கொண்டே போனுல், மனதில் உண்மையாக இருப்பது என்ன என்பதைக் கண்டுபிடிப்பதற்குப் பிரளய காலம் வரையிலும் செலவழித்தாலும் போதாது. உண்மையை இதமாய்ச் சொல்லுவதற்கு, உண்மையைக் காணுவதற்கு ஆவல் இருந்தாலொழிய, சம்பாஷணையில் லாபமே யில்லை. இதை அனுபவத்தில் யாவரும் தெரிந்துகொள்ளலாம்.

சத்தம் போட்டால், அது சம்பாஷணை யாகுமா? அதிலே ரஸம் இருக்குமா? மனதில் இருப்பதை, தெளிவாக, பிறர் அறியும்படியாக, சரியான வார்த்தைகளின் மூலமாய், தெரிவிக்க முயலுவதுதான் சம்பாஷணைக்கு அவசியமான லட்சணமாகும். ஆடு என்ற வார்த்தை ஆட்டைத்தான் குறிக்கும். அது மாட்டைக் குறிக்குமா? ஆடு என்று சொல்லிவிட்டு, அதை முகத்தில் அழிக்கிறதா? ‘இல்லை, மாடு என்று சொல்ல வந்தேன். வாய் தவறி வந்துவிட்டது’ என்று சொல்லிக் கொண்டேபோனுல், சம்பாஷணையின் கம்பீரம் குறைந்துகொண்டே போகும். சம்பாஷணையிலிருந்து கிடைக்கும் முக்கியமான லாபமும் கிடைக்காது.

சம்பாஷணையில் ஆத்திரப்படுவதில் துளிகூட பிரயோசனம் இல்லை. பிறர் சொல்லுவதையும் நாம் பூராவும் வாங்கிக்கொள்ள முடியாது. நாம் சொல்ல வேண்டியதையும் பிறருக்குத் தெளிவாக எடுத்துச் சொல்ல முடியாது. அப்படியானுல் பேச்சு என்ற சாதனத்திஞல் நமக்கு எவ்வித நல்ல பயனும் ஏற்படாது. சம்பாஷணைக்கு மதிப்புக் கொடுக்காமல், அதை நாம் ஏளனம் செய்வது போலத் தோன்றும்.

சம்பந்தமில்லாத விஷயங்களைச் சம்பாஷணையில் புகவிடுவது ஒரு பெருந் தவறு. இது யோசித்துப் பேசாததன் பயன் ஆகும். எதைப் பேசினாலும் சம் பந்தம் உண்டு என்று சொல்ல நினைப்பவர்கள், தங்கள் புத்தியை அவமதிக்கும் குற்றத்துக்கு ஆளாவார்கள். நீதி ஸ்தலத்தில் போய்ப் பார்த்தால்தான், பொருத்த மில்லாத வாதத்தை, எவ்வாறு நீதிபதிகள் மண்டையி லடிக்கிறார்கள் என்பது தெரியும்.

பெரும்பான்மையோர் சம்பாஷணையை மேடைப் பிரசங்கமாக அடித்துவிடுகிறார்கள். இந்த மாதிரி பேசுவது சம்பாஷணைக்கு லட்சணம் அல்ல. பேசு பவரின் மனோபாவம் இன்னதென்று தெரிந்து கொண்டு, அதை வாங்கிக்கொண்டு, சரியான பதில் சொல்லுவதுதான் சம்பாஷணைக்கு அழகாகும். சொல்லுவதையே திருப்பித் திருப்பிச் சொன்னாலும் புளித்தும் போகும். மேலும் விஷயமும் விள்ளாது.

விஷயத்தைத் தெரிந்துகொண்டு, விஷயத்தை அறிய ஆவல்கொண்டு, சம்பாஷணையில் இறங்கவேண் டும். பொழுது போக்குக்காகப் பேசும் பேச்சைத் தவிர, பெரும்பாலும் சந்தேக நிவர்த்திக்காகத்தானே நாம் பிறருடன் சம்பாஷணையை நாடுகிறோம்? இந்த வேலையைச் சரிவரச் செய்து முடித்துக்கொள்ளாமல், ஆகாய வீதியில் வார்த்தைகளைத் தூவுவதால், சம்பா ஷணையை அழகும் அர்த்தமும் பெறச் செய்ய முடி யாது.

இரண்டு பேர் பேச ஆரம்பித்தால் இரண்டு பேருக்கும் அர்த்தமாகும் சொற்களையும் உபமானங் களையும்தான் உபயோகிக்க வேண்டும். ஆன்ம சக்தி என்று ஒருவன் சொல்லுகிறான். அது மற்றவனுக்கு

அர்த்தமாகாமல் இருக்கலாம். நரிவேட்டை யாடியது போல என்று உபமானம் சொன்னுல், அது மற்றவனுக்கு அர்த்தமாக வேண்டும். அதாவது, இருவருடைய அனுபவத்துக்கும் அறிவுக்கும் ஒட்டிய வார்த்தைகளை, விஷயங்களைச் சொன்னுல்தான் சம்பாஷணை தெளிவாக இருக்கும். இல்லாவிட்டால் சங்கடம்தான்.

சம்பாஷணை சாமான்ய சங்கதி யல்ல. அதைக் கலையாகப் பழக்கிக்கொள்ள வேண்டும். அதைக் கதையாக, காலட்சேபமாக அடித்துவிடுவது தவறு. 'ஏண்டா அப்பா பேச ஆரம்பித்தோம்!' என்ற மனச் சங்கடம் இருவரில் ஒருவருக்கு நேருமாகில், அந்தச் சம்பாஷணையைப் பெருமை வாய்ந்ததாகக் கொள்ள முடியாது. வெட்டி வம்புக்கும் வீண் சண்டைக்கும் நெருங்கிய சம்பந்தம் உண்டு.

உலகத்தில் பெரிய விஷயங்கள் இருக்கையில், சம்பாஷணை முறையைப் பற்றி நான் ஏன் பேசவேண்டும் என்று நீங்கள் ஏளனம் செய்யலாகாது. உணவுக்கு உப்பு எப்படியோ, அப்படி சம்பாஷணை வாழ்க்கைக்கு. உப்புப் போடத் தெரிந்தவன்தான் சிறந்த சமையல்காரன். சம்பாஷணையில் தேர்ந்தவர்கள்தான் பெரிய காரியங்களைச் சாதிக்க முடியும், வீண் காலம் போக்காமல். காந்தியை நீங்கள் நேரில் கண்டு பேசியிருந்தீர்களாகில், நான் எழுதியது எவ்வளவு தேவை, எவ்வளவு உண்மை என்பது உங்களுக்கு உடனே புலப்படும்.

## 14. வளர்ச்சிக்கு வழி

புத்தி, உணர்ச்சி என்று மனிதனுக்கு இரண்டு வகை சக்திகள் உண்டு. மோட்டார் வண்டிக்கு பெட்ரோல்(எண்ணெய்) எவ்வளவு அவசியமோ அவ்வளவு அவசியமானது அவைகள் உடம்புக்கு. மோட்டாரை இழுத்துச் செல்லும் சக்தி பெட்ரோலில் இருக்கிறது. மனிதனை இழுத்துச் செல்லும் சக்தி உணர்ச்சிக்கு உண்டு. உணர்ச்சிதான் மனிதனுடைய மூலபலம்.

உணர்ச்சி மனிதனை வாழ்வில் இழுத்துக்கொண்டு சென்றாலும், அதை அடக்கியாள ஒரு சாதனம் வேண்டும். மோட்டாருக்கு 'பிரேக்' எவ்வளவு தேவையோ, அவ்வளவு தேவை மனிதனுக்கு புத்தி. புத்தியின் ஆட்சிக்குக் கட்டுப்படாத உணர்ச்சி மனிதனைத் தலைகுப்புற வீழ்த்திவிடும். உணர்ச்சியின் தாங்க முடியாத வேகத்தால் மனிதன் தேய்ந்து மாய்ந்து போய் விடுவான்.

புத்தியையும் உணர்ச்சியையும் பக்குவமாய் இணைத்து, அவைகளை மனிதனுக்குப் பெருந் துணைகளாகச் செய்வதே படிப்பின் நோக்கம், பழக்கத்தின் பயன். உணர்ச்சி என்பது மின்சார சக்தியைப் போல. அது மனிதனை ஆக்கவும் செய்யும், அழிக்கவும் செய்யும். புத்தி மனிதனுக்கு நிதானத்தையும் கொடுக்கும்; கோழையாக மனிதனைச் செய்யவும் செய்யும்.

புத்தியும் உணர்ச்சியும் நம்ம நாட்டில் எவ்வகையில் இப்பொழுது இருந்து வருகின்றன என்று பார்த்தால், அது ரொம்ப விநோதமாகத் தோன்றும். ஆசை

என்பது உணர்ச்சியின் பயன். ஆவல் என்பதும் உணர்ச்சியின் பயன். ஆசையும் ஆவலும் ஒன்ரு?

ஆசை ஒரு வியாதியைப் போல; ஆவல் என்பது சக்தி. ஆவல் (சிரத்தை) சேராத எந்த ஆசையும் பலிக்காது. ஆசை என்பது ஒருவகை அரிப்பு. ஆவல் என்பது துடிதுடிப்பு. உணர்ச்சி சம்பந்தமாகப் பேசினேமே! நம்மவர்களிடம் உணர்ச்சி ஆசை ஏராளமாக இருக்கிறது. ஆனல் உணர்ச்சி ஆவல் இல்லை. அதனலேதான் நமது ஆசைகள் பலிப்பதில்லை.

ஆசை பலிக்கவில்லையே என்று ஏங்குகிரேம். ஆசை பலிப்பதற்குத் தேவையான சாதனங்களைக் காணுமலும், கண்ட சாதனங்களைக் கைக்கொள்ள விருப்பமில்லாமலும் இருந்தால், ஒரு நாளும் ஆசை பலிக்காது. மனேராஜ்யம் செய்வது பிரமாதமான காரியமில்லை. எதிலும் ஆசை ஏற்படலாம். ஆனல் அந்த ஆசையைப் பூர்த்தி செய்துகொள்ளுவதற்கான ஆவல் (ஆற்றல்) வேண்டும்.

நம்முடைய நாட்டார், உலகமே பிரமித்துப் போகும்படியாக, ஒருகாலம் பெருமை வாழ்வு வாழ்ந்தார்கள் என்பது சரித்திரம். அது வெறும் திண்ணைப் பேச்சல்ல. ஆனல் அந்தப் பெருமை வாழ்வைப் பற்றி இப்பொழுது திண்ணை வம்பு மட்டும் பேசுகிரேம். பெரியவர்களின், வீரர்களின், மேதாவிகளின் வர்க்கத்தில் பிறந்தவர்கள் **நாம்** என்ற நினைப்பே நம்மிடம் இப்பொழுது இருப்பதில்லை.

மாயை மூடிப் போச்சு என்று வெட்டித் தத்துவம் பேசலாம். இந்தத் தத்துவம் உண்மையா யிருந்தால், உலக முழுமையையும் அந்த மாயை மூடிக்கொண்டிருக்க வேண்டும். அப்படி யிருப்பதாகத் தெரிய

வில்லை. ஒவ்வொரு நாட்டாரும் சுறுசுறுப்புடன் (அது தவறான சுறுசுறுப்பா யிருக்கலாம்) வேலை செய்து வருகையில், நாம் மட்டும் சோம்பிக் கிடந்து, வீண் தத்துவம் பேசுகிறோம்.

உணர்ச்சியிலும் புத்தியிலும் கற்பனைக்கும் கணக்குக்கும் அடங்காத வல்லமை இருக்கிறது என்ற எண்ணமே நம்மிடம் இல்லை. இதற்குக் காரணத்தைத் தேடவேண்டிய தேவையில்லை. இந்தக் குறையைத் தெரிந்துகொண்டாலே போதுமானது. லோகத்திலே மகத்தான காரியங்களைச் செய்திருப்பவர்கள் நம்மைப் போலவே மனிதர்கள்தான்.

அவர்களுக்கும் நமக்கும் என்ன வித்தியாசம்? கைக்கொண்ட காரியத்தை அவர்கள் எளிதிலே விட்டு விடுவதில்லை. பிடிவாதத்தோடு வேலை செய்கிறார்கள். நல்ல காரியம் என்று தெரிந்தால், எந்தப் பழியையும் தாங்கத் தயாரா யிருக்கிறார்கள். ஏக்கத்தால் பொறுமையையும் பிடிவாதத்தையும் இழப்பதில்லை. தொட்ட வேலையைத் தாங்கள்தான் செய்து முடித்து விட வேண்டும் என்ற திடசங்கற்பத்துடன் உயிர் வாழ்கிறார்கள்; உயிரைக் கொடுக்கவும் செய்கிறார்கள்.

தனி மனிதர்களின் மகத்தான சக்திக்கு, சரித்திரம்தான் அத்தாட்சி. சரித்திரம் பொய்யல்ல. சரித்திரத்தை நம்பித்தான் உலகம் உயிர் வாழ முடியும். கடவுளைக் காண்பது முடியாம லிருக்கலாம். ஆனால் சரித்திரத்தைப் படிப்பது கஷ்டமே யில்லை. சரித்திரம் தான் மனிதனுக்கு வழிகாட்டி. அதைக் காட்டிலும் மனிதனுக்கு உயர்ந்ததொரு ஆவேசமும் துணையும் கிடையாது.

நமது தற்போதைய சீர்கேடான நிலைமையைப் போலவே, எல்லா நாடுகளிலும் ஒவ்வொரு சமயத்தில் இருந்திருக்கிறது. அந்த நிலைமையைக் கண்டு ஜனங்கள் தூங்கி வழியவில்லை. நிலைமையை மாற்றுவது தங்கள் பொறுப்பு என்று கொண்டார்கள். மாற்ற முடியும் என்ற தைரியத்தை அவர்கள் சரித்திரத்தின் மூலமாய் அடைந்தார்கள். தைரியம் இருப்பின் பிறகு கஷ்டங்கள் கண்ணில் படவே படமாட்டா.

ரொம்ப சிரமமான காரியம் என்று சொல்லுவதில் சிரமம் ஒன்றுமே யில்லை. மரத்து நிழலில் குடியிருப்பது அவ்வளவு சிரமமில்லை. வீடு கட்டி, ஊர் சமைத்து, நாகரிகத்தை வளர்த்து, மேன்மையான வாழ்வு வாழ்வதுதான் கஷ்டம். இந்தக் கஷ்டத்தை உலகத்தில் எல்லா நாடுகளும் மேற்கொண்டிருக்கவில்லையா? நமக்கு உயர்ந்த லட்சியத்தில் ஆவல் கிடையாதா?

சிறிய பெல்ஜிய நாட்டை எடுத்துக்கொள்வோம். 1914-ம் வருஷத்தில் ஒரு வருஷ காலத்துக்குள் பெல்ஜிய நாடு முழுமையையும் ஜெர்மானியர்கள் பாழ்படுத்திவிட்டார்கள். பூகம்பம் வந்த பீகாரைப் போலவே, பெல்ஜிய நாட்டில் மாட மாளிகைகளில் பெரும்பான்மை தரையோடு தரையாய்ப் போய்விட்டன. ஆனால் பெல்ஜியர்கள் சளைத்துப் போகவில்லை. நான்கு வருஷம் விடாமல் சண்டை போட்டார்கள். அதற்குப் பின் பத்து வருஷ காலத்துக்குள் பெல்ஜியத்தை அற்புதமாய்த் திருத்தி அமைத்துவிட்டார்கள்.

பெல்ஜியர்கள் மனிதர்கள்தானே? அவர்கள் ஆகாயத்திலிருந்து குதித்து விடவில்லையே? அவர்களுக்குச் சாத்தியமான ஊக்கம் எல்லோருக்கும் சாத்

தியமானதுதான். ஊக்கத்துக்கு அஸ்திவாரமாக, வைராக்கியம் வேண்டும். வைராக்கியம் இல்லாத வாழ்க்கை வெறும் பாழ். அது 'அணிகள் வேய் பிணத் தோடு ஒப்பாம்'.

நாகரிகத்தில் மட்டம் என்று சாதாரணமாய் ஏளனம் பேசும் நீக்ரோவர்கள்கூட, அமெரிக்காவில் சிறந்த முறையில் முன்னேற்றம் அடைந்து வருகிற தாகச் சொல்லுகிறார்கள். நீக்ரோவர்களுக்குப் பண்டை நாகரிகப் பெருமை என்பது கிடையாது என் கிறார்கள். அப்படி யிருக்க, அவர்களுக்குச் சாத்தியப் பட்டது நமக்குச் சாத்தியப்படாமல் போகுமா?

நமக்கு ஒரே ஒரு குறை. நாம் வளரவேண்டும் என்ற ஆவல் நம்மிடம் அதிகமாக இல்லை. ஒருவித மான திருப்தி நம்மிடம் குடிகொண்டிருக்கிறது. அந்த அசட்டுத் திருப்தியினால் எந்த நிலைமையும் நமக்குப் போதுமானது என்ற வீணான சமாதானம் செய்து கொள்ளுகிறோம். திருப்திதான் உண்மையாக இருக் கிறதா? அதுவும் உண்மையான திருப்தியல்ல. இந் தத் திருப்தி பலவீனத்தின் பயனாகும். அது சக்தியல்ல.

மனிதனால் ஆகாத காரியமே இல்லை என்று சொல்லலாம். மேலும் மனிதர்கள் வாழும் உலகத் தில் மனிதர்கள்தானே பாடுபட வேண்டும். நம்ம வேலையை, தேவர்கள் வந்து செய்யப்போவதில்லை. மேலும், ஒரு நாட்டார் செய்யவேண்டிய வேலையை, இன்னொரு நாட்டார் வந்து செய்து கொடுப்பார்கள் என்று எண்ணுவதும் தவறு; பொய்கூட. தீர்மானம் இருந்தால் எல்லாம் கைகூடும். காகிதத் தீர்மானத் தாலும், அசட்டுத் தீர்மானத்தாலும், அசட்டுத் திருப்தி யாலும், விதியை நோவதாலும் காரியம் கைகூடாது, நாமும் வளர முடியாது.

## 15. என்ன உடம்புக்கு ?

இரண்டு பேர்கள் வெள்ளைக்காரர்கள் சந்தித்தால், 'குட்மார்னிங்' (நல்காலை) என்பார்கள். நல்ல பொழுதாக விடியுமோ என்ற சந்தேகமோ என்னவோ அவர்களுக்கு? இந்த 'நல்காலை' வந்தனத்தில் விசேஷம் என்னவெனில் விடிந்து பத்துப் பதினைந்து நாழிகைக்குப் பிறகு சந்தித்தாலும் 'நல்காலை'தான். காலைப் பொழுது, மாலை வரையிலும் அந்த நாடுகளில் நீண்டுகொண்டே போகிறதோ என்னவோ?

மேல் நாட்டாரின் நாகரிகப் பழக்கங்களைப் பற்றி நாம் சிரிக்க வேண்டாம். நாம் ஒருவரை யொருவர் சந்தித்தால் கொஞ்ச நேரத்துக்கு, வெட்ட வெளியாக, பற்களைத் திறந்து காண்பித்து, ஒருவருக் கொருவர் உபசாரம் செய்துகொள்ளுகிறோமே, அது என்னத்தில் சேர்ந்தது என்று சிறிது யோசித்துப் பார்த்தால், நாம் பிறரைப் பார்த்து ரொம்பவும் சிரிப்பதற்கு இடமில்லை.

'இழவு விழுந்தால்' துக்கம் கேட்பது ஒருவகை வழக்கம். மனிதர்கள் ஒன்றாய்க் கூடி வாழ ஆசை படைத்தவர்கள் என்பதைக் காண்பிப்பதற்கே மனிதர்கள் துக்கம் விசாரிக்கிறார்கள். மனிதர்களின் இயற்கையான கூடி வாழும் தன்மைக்கு அது அடையாளம். இன்னொரு வேடிக்கைக் காரணத்தையும் சொல்லலாம். 'உயிர்க் குலத்தின் எதிரியான எமன் மனித வர்க்கத்தின் கோட்டைக்குள் புகுந்துவிட்டானா, சரி, பார்த்துக் கொள்வோம்!' என்று அபயம் அளிப்பதாக, துக்கம் கேட்பதை வைத்துக் கொள்ளலாம்.

ஆனால், நம் நாட்டில் இரண்டு பேர் சந்தித்தால, 'என்ன, ஒரு மாதிரியாக இருக்கிறீர்கள்! என்ன உடம்புக்கு?' என்று துக்கம் விசாரிப்பதைப் போல, கேட்கிறார்களே, ஏன்? எப்பொழுது பார்த் தாலும் உடம்புக்கு ஏதேனும் நோய் வந்துகொண் டிருக்கவேண்டும் என்று அவர்களுக்கு ஆசையா? அல்லது வியாதி வரும் என்று நிச்சயமா? இதைப் பற்றிப் பேசாவிட்டால் எல்லோருக்கும் வருத்தம் வரும் என்ற நினைப்பா?

ஒருவரை யொருவர் கண்டவுடனே ஏதாவது பேசித் தீர்க்கவேண்டும் என்ற நிர்ப்பந்த மல்லவா, இந்த வினோத விசாரணைக்குக் காரணம்? ஒருவருக் கொருவர் கும்பிட்டுவிட்டு, அவரவர் காரியத்தைச் செய்தால் என்ன? இப்படிச் செய்தால், ஒருவரை யொருவர் அலட்சியம் செய்துவிட்டாற் போல, எண் ணம் பிறந்துவிடுமாம்! பிறகு ஒருவரை யொருவர் சந்தித்துப் பார்த்துப் பேச முடியாதாம்! வினோத மான வாதம்!

சாதாரண மனித சுபாவம் என்பது ரொம்ப மெல் லிய சரக்கு. அதற்குச் சக்தி அதிகமாகக் கிடை யாது. மண்ணை எடுத்துக் குயவன் பாண்டம் செய் வது போல, உலகம் ஒருவனை வீரனாகவும் செய்கிறது; கோழையாகவும் அடித்துவிடுகிறது. ஆனால் இயற்கை வீரர்களை உலகம் ஒன்றும் செய்ய முடி யாது. அவர்கள் உலகத்தைப் படுத்தாத பாடு படுத்தி வைத்து விடுகிறார்கள்.

தமக்கு உடம்பு சரியாக இருப்பதாகவே, ஒருவ ரும் நினைத்துக்கொள்வதில்லை. யோசிப்பதற்கு விஷய மில்லாதவர்களுக்கு, கவலைப்படுவதுதான் ஒரு

பொழுது போக்கு. எதையாவது ஒன்றைப்பற்றிக் கவலைப்பட்டுக்கொண்டிருந்தால்தான் அவர்களுக்குக் காலம் போகும். அநேகமாக, இவர்கள் எப்பொழுதும் உடம்பைப் பற்றித்தான் கவலைப்பட்டுக்கொண்டிருப்பார்கள். இவர்களிடம், 'என்ன உடம்புக்கு?' என்று கேட்டுவிட்டால் போதும், அவர்களுக்கு ஒரே குழப்பம்தான்.

சிறிய ஜலதோஷத்துக்கும் சாவுக்கும் நெருங்கிய சம்பந்த முண்டு என்று ஜபித்துக்கொண்டிருப்பவர்களிடம், 'உடம்புக்கு என்ன?' என்று கேட்பது உசிதமல்ல. கேட்டவன் வேறு பக்கம் காலடி எடுத்து வைத்தவுடன், மற்றவன் தலையைத் தொட்டுப் பார்ப்பான். உடம்பைத் தடவிப் பார்ப்பான். கை நாடியைப் பிடித்துப் பார்ப்பான். மனதில் என்ன வெல்லாமோ சிந்தனை சுரம் அவனுக்கு உண்டாகிவிடும்.

லேசாய்க் கேட்ட கேள்வி, இதோடு விடாது. நெருங்கிய நண்பனிடம் போய், 'ஏண்டாப்பா, என் உடம்பு எப்படி யிருக்கிறது? முகத்திலே ஏதாவது தெரிகிறதா?' என்று கேட்கச் சொல்லும். 'எனக்கு ஒன்றும் தெரியவில்லையே!' என்று நண்பன் சொன்னால், 'நீ என்னை எப்பொழுதும் பார்ப்பதனாலே உனக்கு என் முகத்தில் வித்தியாசம் ஒன்றும் தெரியவில்லை' என்று சொல்லுவதோடுகூட நண்பன் சொன்னதையும் நம்ப மாட்டான்.

ஏதோ வெயிலில் அலைந்ததால், ஒரு சமயம் இருமல் வரலாம். உடம்பில் சில்லறை சேஷ்டைகள் நேருவது சகஜம். நாம் அளந்து சாப்பிடுகிறோமா? உடம்புக்கு சமயத்துக்குத் தேவையான ஆகாரத்தைச் சாப்பிடுகிறோமா? குறிப்பிட்ட நேரங்களில் சாப்பிடு

கிருேமா? இவைகள் சம்பந்தமாக நமக்குத் திட்டமே கிடையாது. அப்படியிருக்க, இருமல் முதலியவை நேர்ந்தால், அந்த மனிதன் 'என்ன உடம்புக்கு?' என்று கேட்டானே, அது உண்மைதான் போலிருக்கிறது என்ற முடிவுக்கு வந்துவிடுகிருேம்.

அரண்டவன் கண்ணுக்கு இருண்ட தெல்லாம் பேய் என்பார்கள். மனசு என்றைக்குக் கெட்டுப் போச்சோ, அப்பொழுதே பிடித்தது சனியன். ஒவ்வொரு சங்கதியும் என்னவெல்லாமாகவோ தோன்றும். கழுதை, புலி மாதிரி கண்ணுக்குப் படும். பதிவிரதை வியபசாரியைப் போலத் தோன்றுவாள். நல்லது, கெட்டது மாதிரி தோன்றும். கெட்டது, நல்லது மாதிரி தோன்றும். பேய் வெருண்டவன் கண்ணிலே தான் படும்.

கோழை ஒருவனுக்கு, எல்லாம் பயங்கர ஆபத்துக்களாகத் தோன்றத்தான் செய்யும். எதிர்ப்பும் தோல்வியும்தான் அவன் பார்வைக்குப் படும். அவனுக்குச் சாதகமாக, யாரும், எதுவும் இருப்பதாகத் தோன்ருது. அதாவது பலவீனனுக்கு, சக்திக் குறைவுதான் கண் முன்னே தாண்டவமாடும். இந்த நிலைமையில் பிறர் சொல்லும் அபத்த வார்த்தைகள் யாவும் அவன் உடம்பில் சுறுக்கென்று தைக்கும்.

உடம்புக்கு என்ன என்று ஒருவன் உளறிவிட்டுப் போய்விடுகிருன். மற்றவன் பாடு திண்டாட்டத்தில் வந்துவிடுகிறது. இவனுடைய மனைவிக்குத் திண்டாட்டம். 'எனக்கு உடம்பு சரியாயில்லை. பத்தியமாய் ஆகாரம் செய்' என்கிருன். குருகுருவென்று அதைப்பற்றியே நினைத்துக்கொண்டிருக்கிருன். தெரு

விலே விளையாடும் குழந்தைகளைப் பொத்து பொத்தென்று சாத்துகிறான். வருகிறவர்கள் போகிறவர்களோடு சண்டை. ஏன்? அவன் மனது நிம்மதியுடன் இல்லை. இது ஹாஸ்யக் கற்பனை யல்ல. உலகத்தில் இந்த அனுபவத்தைப் பார்க்கலாம்.

'உடம்புக்கு என்ன?' என்று கேட்பதில் என்ன லாபம், யாருக்கு லாபம்? வியாதியஸ்தர் இருக்கிறார், வைத்தியர் இருக்கிறார். இவர்க ளிருவரையும் சகித்துப் பொறுத்துக்கொள்ளப் பக்கத்தில் பலர் இருக்கிறார்கள். நாம் ஏதாவது உதவி செய்யக் கூடுமானால் இந்தக் கேள்வியைக் கேட்கலாம். அல்லது நாம் கேட்பது நிச்சயமாய் உண்மைதான் என்று தெரிந்தாலும் ஒரு வேளை கேட்கலாமோ என்னவோ? அப்பொழுதும் கேட்டு லாபம் என்ன? கேட்காவிட்டால் கொடிய நெஞ்சம் படைத்தவன் என்று நம்மை அவன் ஏசுவானோ என்ற பயம் நமக்கு வேண்டியதே யில்லை.

ஒருவரை யொருவர் தேற்றிக்கொண்டால்தான், மனிதர்களுக்கு ஒருவாறு தைரியம் உண்டாகும். புயல் முதல் பூகம்பம் வரையில் இயற்கையின் கொடுமைகள் எத்தனையோ இருக்கின்றன. கண் கொட்டாமல் எமன் வேறு காத்துக்கொண்டிருக்கிறான். இடையிலே பணக் கஷ்டம். போதாக் குறைக்கு அரசியலால் பயம். இத்தனையும் போதாது என்று நோய். இதை யெல்லாம் மீறிக்கொண்டு மனிதனுக்குச் சுதந்திர தாகம், வளர்ச்சியில் ஆசை. இந்த நிலைமையில் பயத்தைக் காண்பித்தால், பயம் கெட்டியாகப் பிடித்துக்கொள்ளும். நூறு காந்தி அவதாரம் செய்தாலும் இந்த பயம் தொலையாது.

ஒரு வார்த்தைக்கு, ஒரு குரலுக்கு, ஒருவித முக ஜாடைக்கு, ஒரு கேள்விக்கு எத்தனையோ விபரீத பலன்கள் உண்டாகின்றன என்பதை நம்மவர் சரியாக உணர்ந்துகொள்ளவில்லையே! வார்த்தையை நிறுத்துப் பேசுவது எல்லோருக்கும் சாத்தியப் படாமலிருக்கலாம். அபத்தமான, ஆபத்துக் கிடமான கேள்விகள் கேட்காமலிருக்க, நம்மில் ஒவ்வொருவராலும் முடியும். அத்தகைய அபத்தமான கேள்விகளில் 'உடம்புக்கு என்ன?' என்பது ஒன்று.



# 16. பெரியவர்கள் யார்?

சமீபத்தில் ஒரு இங்கிலீஷ் புஸ்தகத்தைப் படித்தேன். அதன் மேல் அட்டையில் 'நாவல்' என்று எழுதியிருந்தது. 'கதைதானே, இரண்டொரு மணி நேரத்துக்குள் படித்துவிடலாம்' என்று புஸ்தகத்தைக் கையிலெடுத்தேன். எனக்குத் திருப்தி வரும்படியாக, புஸ்தக முழுமையையும் படிக்க ஒரு வாரமாயிற்று. தினசரி, குறைந்தது ஆறு மணி நேரம் இதைப் படிப்பதில் செலவிட்டிருப்பேன்.

திடீரென்று ஆகாயத்தில் அவுட்டு வெடித்து, பல வர்ணங்கள் படைத்த பூக்கள் உதிர்ந்தால், அது பார்வைக்கு எவ்வளவு அழகாயிருக்கும்? மனதுக்கு எவ்வளவு ரம்யமாயிருக்கும்? சற்று முன் கண்ணில் பட்டதெல்லாம் ஒரே கறுப்பு; ஒரே கும்பி இருட்டு. அதன் நடுவே இந்த ஜோதிப் பிரகாசங்கள் தோன்றினால், 'அம்மா, அதோ பார்!' என்று குழந்தைகள் கூடக் கூச்சல் போடுவார்கள்.

திகைப்புக் கலந்த உற்சாகத்தைக் கொடுக்கும் புஸ்தகத்தைப் படிப்பதென்றால், அதனாலே, எத்தனையோ லாபங்கள் ஏற்படுகின்றன. முதலாவதாக, நமக்கு ஏராளமாகக் களிப்பு உண்டாகிறது. இரண்டாவது, நாம் ஏற்கனவே எண்ணிக்கொண்டிருக்கும் எண்ணங்கள் சரியா தவறா என்று தீட்டிப் பார்ப்பதற்கு ஒரு சந்தர்ப்பம் ஏற்படுகிறது. மூன்றாவது, நமக்கு புதிய கருத்துக்கள் தோன்றுவதற்கு இது தூண்டுகோலாய் நிற்கிறது. அதாவது நாம் வளர்கிறோம்.

அந்தப் புஸ்தகத்தை சாரமாக வடிகட்டி உங்களுக்குக் கொடுக்க என்னல் இயலாது. ஆசைக் குறைவு காரணமல்ல. மனித வாழ்க்கையின் எல்லா அம்சங்களையும் ஆசிரியர் தொட்டிருக்கிருர். ஓம் என்ற பீஜாட்சரத்திலே படைப்பு அடங்கிவிட்டதாக, ஒரு புரளி யிருக்கிறதே, அதைப் போல, நானும் ஒரு புதுப் புரளி கண்டுபிடித்தாலொழிய, அந்த நூலின் சாரத்தை வடிகட்டிக் கொடுக்க முடியாது.

அந்தப் புஸ்தகத்தைப் படித்ததன் பயனுக, என் மனதில் தோன்றிய எண்ணங்களை, உங்களுடன் கலந்து பங்கு போட்டுக்கொள்ள என்னல் முடியும். தவிர, அது கடமையும்கூட. உயிரையும் உற்சாகத்தையும் கொடுக்கும் நூல்கள் அபரிமிதமாய்த் தமிழில் எப்பொழுது தோன்றும் என்பது முதன் முதலாக என் மனதில் எழுந்த எண்ணம். இதைப் பற்றிப் பன்னிப் பன்னிப் பேசத் தேவையில்லை.

இந்தப் புஸ்தகத்தைப் படித்த பிறகு, பெரியவர்கள் யார் என்ற கேள்வி என் மனதில் தோன்றிற்று. இந்தக் கேள்வி தோன்றியதும் நான் திணறிப் போனேன். ஏதாவது கோடி அகப்பட்டால், அதைப் பிடித்துத் தொத்திக்கொண்டு ஏறலாம். பெரியவர்கள் யார் என்று மொட்டையாக ஒரு கேள்வி பிறந்தால், அதற்குச் சரியான பதில் சொல்ல முடியுமா ?

பெரியவர்கள் என்பவர்களுக்கு லட்சணங்களைக் கற்பித்தால், அந்த லட்சணங்கள் உடையவர்களைப் பெரியவர்கள் என்று எளிதிலே சொல்லிவிடலாமல்லவா ? பெரும்பான்மையோர்களின் உள்ளத்திலே, நெடுங் காலத்துக்கு வேரூன்றிப் போகும் தன்மை யாருக்கு உண்டோ, அவரைப் பெரியவர்

என்று சொல்லலா மல்லவா? இதைத் தவிர வேறு நிலையான பிரமாணத்தை, ருசுவைச் சொல்ல முடியாது.

தங்கத்துக்கு ஏன் மதிப்பு? அதில் துரு ஏறுவதில்லை; களிம்பு பிடிப்பதில்லை. பிரகாசமா யிருக்கிறது. எந்த உருவத்திலும் அதைத் தட்டி அமைத்துக்கொள்ளலாம். அது நீண்ட காலம் நிலைத்திருக்கிறது. பார்ப்பதற்கு அழகாயிருக்கிறது. அருமையாக அகப்படுகிற சாமான் என்பதையும் சேர்த்துக் கொள்ளலாம். பெரியார்களும் தங்கத்தைப் போல.

தனி மனிதன் ஒருவன் பலபேர்களின் உள்ளங்களில் குடிகொண்டான் என்றால் அது எளிதிலே சாத்தியப்படாத சங்கதி போல் தோன்றுகிறது. ஆனால் அவன் பிறர் உள்ளங்களில் வேரூன்றிப் போவதற்கு காரணம் என்ன? கண்ணிலே இருக்கிற ஒளி, வெளியே அகண்டமாய்ப் பரவி நிற்கும் ஒளியில் ஈடுபட்டுப் போகிறது. குருட்டுக் கண் பிரகாசத்தை வேண்டுவதில்லை.

தனி மனிதனுடைய உள்ளத்தில், ரயில் பாதை இரட்டையைப் போல, இரட்டை உணர்ச்சிகள் இருக்கின்றன. ரயில் பாதையைப் போல, விலகி நிற்கவில்லை; பின்னிக்கொண்டு கிடக்கின்றன. முதலில் ஒரு இரட்டையை எடுத்துக்கொள்ளலாம். ஆசையும் அச்சமும் பின்னிக்கொண்டு கிடக்கின்றன. மனிதனுக்கு தான் உயர்வதில் ஆசை. அந்த ஆசையைப் பூர்த்தி செய்ய எத்தனிக்கும் வழியில் என்ன நேருமோ என்ற பயம். ஆசையும் பயமும் ஒரு இரட்டை.

அறிவும் மயக்கமும்—இன்னொரு இரட்டை. பக்குவமும் ஆராய்ச்சியும் நிறைந்து நின்றொழிய,

எந்த அறிவும் ஒவ்வொரு நிலையில் மயக்கமாகத் தோன்றும். நாம் நினைக்கிறது என்பது அறிவு. அது சரியோ தவறோ என்ற சந்தேகமும்கூடத் தோன்று கிறது. அறிவும் சந்தேகமும் இரட்டைகள். ஒன்று இருக்கிற இடத்தில், சாதாரணமாக, ஏதாவது ஒரு உருவத்தில் இன்னொன்று இருக்கும்.

தியாகமும் சுகமும்—இன்னொரு இரட்டை. எல்லா மனிதர்களுக்கும் இயல்பாக தியாக புத்தி இருக் கிறது. அதை ஒட்டியே சுகத்தில் பிரமையும் இருந்து வருகிறது. தியாகம் செய்யவேண்டிய சம யத்தில் அவனைச் சுகம் கண்ணைக் கட்டி அழைக் கிறது. சுகத்தை விரும்பும் காலத்தில், தியாக புத்தி சுக ஆசையை அழித்துவிடுகிறது. எனவே அவன் இரண்டும் கெட்டானாக ஆகிவிடுகிறான்.

மனிதனுக்கு நவீனத்தில் ஆவல். ஆனால் பழமை யிலும் பிடிப்பு. இது ஒருவித இரட்டை. இப் படியே இரட்டைகளை அடுக்கிக்கொண்டு போகலாம். உங்கள் கற்பனைக்கும் அனுபவத்துக்கும் ஏற்றவாறு இரட்டைகளைப் பெருக்கிக்கொள்ளுங்கள். ஆனால், தத்துவக் கடலில் மட்டும் விழுந்துவிட வேண்டாம். ஆழம் அண்டாது.

இந்த இரட்டைகளில் தாழ்ந்ததை உதைத்துத் தள்ளிவிட்டு, உயர்ந்ததில் உல்லாசமாய் இருப்பவர் களே பெரியார்கள். ஒவ்வொரு மனிதனும் பெரி யார் கூட்டத்தில் சேர முடியும். தனி மனிதர் களின் உள்ளங்களில் பெற முடியாத லட்சியங்க ளாக இருப்பவை யெல்லாம், பெரியார்களின் நடை முதல் வாழ்வில் சாதாரணமாகக் காணப்பெறு கின்றன.

தேள் கொட்டுவதற்குப் பயப்படும் மனிதன், இடறி விழுந்தால் வீரிட்டு அலறும் மனிதன், ஏசு சிலுவையில் புன்னகையுடன் மாண்டார் என்று கேட்டால், அவனுக்கு ஏன் திகைப்பு உண்டாகாது? மனிதனுடைய உயர்ந்த ஆசைகளெல்லாம் ஏசுவினிடம் இருந்தன. ஏசுவினிடம் மனக்கசப்பும் பயமும் இருக்கவேயில்லை. இரட்டையில் தாழ்ந்ததைக் கொன்ற வீரனல்லவா ஏசு?

மயக்கத்தை அறிவாகக் கொண்டு மயங்கின காலத்தில், இதுதான் அறிவு என்று திடமாய்ச் சொல்லக்கூடிய ஆற்றல் மகம்மது நபிக்கு இருந்தது. 'ஓகோ! நமக்கு இருக்கும் மயக்கம் அவரிடம் இல்லை. அவருக்குச் சந்தேகமே கிடையாது' என்று மனிதர்கள் எண்ணுகிறார்கள். இங்கேயும் இரட்டையில் தாழ்ந்ததைக் கொன்றவனுக்குத்தான் உலக மதிப்பு.

சுகத்தை நாடி, அதிலே உழல்வது சாதாரண மனித இயல்பு. இந்த இயல்பினால் தியாக உணர்ச்சி காணப்படாமல் மறைந்து நிற்கிறது. சுகத்தை எட்டத் தள்ளிவிட்டு, தியாகத்தையே — அன்பே உருவான தியாகத்தையே — மேற்கொண்ட புத்தனைப் பார்த்து, சாதாரண மனிதன் திகைத்துப் போகாமலிருப்பானா?

இவர்கள் மூவரையும் தன்னகத்தே அடக்கிக் கொண்டு, நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்துவரும் காந்தியை என்னென்று சொல்லுகிறது? இரட்டைகளை யெல்லாம் அவர் கொன்றுவிட்டதாகத் தோன்றுகிறது.

மனிதன் உள்ளத்தில் இரண்டு வகை உணர்ச்சிகள் இருக்கின்றன. ஒன்று தங்கத்தைப் போல,

நிலைத்து, நீடித்து உழைக்கும் உணர்ச்சி. இன்னொன்று களிம்பைப் போல, துருவைப் போல இருக்கும் உணர்ச்சி. இவைகளில் தங்க உணர்ச்சியை வாழ்க்கையில் காண்பிப்பவர்கள் பெரியார்கள். இந்த உணர்ச்சியை அழகும் சக்தியும் ஒருங்கே அமைந்த பாஷையில் வெளியிடுபவர்கள் பெரியார்கள். இந்த உணர்ச்சியைச் செயலாக உருப்படுத்தும் மனிதர்கள் பெரியார்கள்.

இவர்களுடைய உணர்ச்சியும் செயலும் அடிவயிற்றிலிருந்து கிளம்பும் அக்கினித் திராவகத்தைப் போல இருக்கின்றன. இந்தத் திராவகத்தால் அவர்கள் பிறரைக் கொல்லுவதில்லை; தாங்களே தங்களைக் கொன்றுகொள்ளுகிறார்கள்; வளர்த்துக் கொள்ளவும் செய்கிறார்கள். தங்களுக்குள் களிம்பு ஏற, அவர்கள் ஒருநாளும் விடுவதில்லை.



## 17. என்ன அவசரம், ஸார்?

'கிழக்கு கிழக்குத்தான்; மேற்கு மேற்கே. இரண்டும் ஒருநாளும் சந்திக்காது' என்று ரட்யார்ட் கிப்ளிங் என்ற ஆங்கில ஆசிரியர் எழுதியிருக்கிறார். இதை அவர் விகடமாக எழுதவில்லை. வினையாகவே எழுதியிருக்கிறார். அதாவது, ஆசியாவில் வசிப்பவர்களின் மனோபாவம் ஐரோப்பா வாசிகளின் மனோபாவத்தோடு ஒவ்வாது என்பது அவருடைய கருத்து.

* * *

செயல் சம்பந்தப்பட்டவரையில், ஆசியாக்காரர்களுக்கு மந்த மனோபாவம் என்பது வெள்ளையர்களின் கருத்து. அது எவ்வளவு தூரம் உண்மை என்பதை ஆராய்வது நலம். எந்தக் காரியத்திலும் ஆசியாக்காரர்களுக்கு விரைவில் துடிதுடிப்பு ஏற்படுவதில்லை என்பது வெள்ளைக்காரர்களின் கட்சி. ஒரு வகையில் பார்த்தால், இது உண்மை போலத் தோன்றுகிறது.

பஞ்சமும், பட்டினியும், வேலையில்லாத் திண்டாட்டமும் வெள்ளைக்கார நாடுகளில் அதிகரித்துப் போயின, அதனால் அந்த நாடுகளில் புரட்சி சாதாரணமாய் நேரும் என்று வெள்ளைக்கார ஆசிரியர் ஒருவர் எழுதியிருக்கிறார். பஞ்சத்தைப் போக்குவதும் வேலையில்லாத் திண்டாட்டத்தைத் தொலைப்பதும் அரசாங்கத்தின் கடமை என்பது மேல்நாட்டாரின் சித்தாந்தம்.

அதே மாதிரி, கஷ்டங்கள் ஆசியாக் கண்டத்தில் ஏதாவது ஒரு நாட்டில் ஏற்பட்டால், யாராவது

ஒருவன், தான்தோன்றியாக பெரிய பதவிக்கு வந்து, அரசியலில் கொடுங்கோன்மையைக் கையாளுவான் என்று மேற்சொன்ன ஆசிரியர் சொல்லுகிருர். நெருக்கடி, தனி மனிதன் உயர்வுக்காக ஏற்பட்டது போல, ஆசியாக் கண்டத்தில் பாவிக்கப்படுவது வருந்தத் தக்கது என்றும் அவர் சொல்லுகிருர்.

உலக சரித்திரத்தை சற்று கவனமாய்ப் படித்தால், மேற்சொன்ன ஆசிரியர் சொல்லியிருப்பது உண்மை போலவே தோன்றுகிறது. வெள்ளைக்கார நாடுகளில், தனி மனிதன் தன் சுதந்திரத்தை நாடுகையில், பொதுவாக எல்லாருடைய சுதந்திரத்துக்காகவும் பாடுபட வேண்டியிருக்கிறது. அதற்காக, அவன் பாடுபடுகிருன். ஆனுல் கீழ்நாடுகளில், அத்தகைய மனேபாவம் இதுவரையிலும் மிகுதியாக இருந்ததில்லை.

சாதாரணமாக, ஒரு காலத்தை - ஒரு இரு நூறு வருஷங்களை ஒரு கால எல்லையாகப் பாவிப்போம் - எடுத்துக்கொண்டால், அந்தக் காலத்தில், ஜன சமூகத்துக்கு விளையும் தீமைகள் யாவும் தனித்த சில மனிதர்களால் ஏற்பட்டவை யென்றும், அவைகள் அரசியல் முறையால் ஏற்பட்டவை யல்ல வென்றும் ஒருவித மயக்கம் இந்தியாவில் பரம்பரையாக இருந்து வந்திருக்கிறது.

ஒரு ராஜா காலத்தில், தீமைகள் நேர்ந்தால், அந்த ராஜாவை மாற்றி, வேருெருவரை சிம்மாதனத்தில் வைத்தால், பிரஸ்தாப தீமைகள் மறைந்து போகும் என்ற முட்டாள்தனமான எண்ணம், நம் நாட்டிலே இருந்துவந்திருக்கிறது. ஆள்வோனுல், தீமைகள் என்னமாய்ப் போகும்? வாழ்க்கைத் திட்ட

மும் அதன் பிரதிபிம்பமுமான அரசியல் முறையும் மாறினலொழிய, ஜன சமூகத் தீமைகள் ஒழிந்து போகமாட்டா.

ஆளைப் பற்றிக்கொண்டே வாழும் குழந்தை மனப்பான்மை நம்மவர்களிடம் இருப்பதற்குக் காரண மென்ன? இதற்கு முதல் காரணம் என்ன வென்ருல், எக்காலத்துக்கும் ஏற்றதான வாழ்க்கைத் திட்டம் ஏற்பட்டுவிட்டதாயும் அந்தத் திட்டத்தை அமுலுக்குச் சரிவரக் கொண்டுவர ஆட்கள் மட்டும் தேவை யென்றும் நம்மில் பெரும்பான்மையோர் எண்ணி வந்திருக்கிருர்கள். அந்த வாழ்க்கைத் திட்டத்திற்கு வர்ணுசிரமம் என்று பெயர்.

அரசியலில் முடியரசு, குடியரசு, ஜனநாயகம், போல்ஷிவிஸம், பாஸிஸம், ஸோஷலிஸம் என்று எத்தனையோ திட்டங்கள், முறைகள் இருக்கின்றன. நாட்டின் தேவைக்கும் அனுபவப் பயன்களுக்கும் தக்கவாறு, இந்த முறைகளும் திட்டங்களும், மேல் நாடுகளில் மாறிக்கொண்டே வந்திருக்கின்றன. ஆனுல் நமது நாட்டு வர்ணுசிரம தர்மமோ, அசையாக் கருங்கல்லாக, நம்மவர்களின் மூட நம்பிக்கையில் பதிந்து, நமது மனேபாவத்தை மந்தம் தட்டும்படி அடித்துவிட்டது.

வர்ணுசிரமம் என்பது வாழ்க்கைக்கு ஒரு வகைத் திட்டம். ஒருவகைத் திட்டம் என்ற மரியாதைதான் அதற்கு இப்போது கொடுக்க முடியும். அதுதான் என்றைக்கும் அழியாத் திட்டம் என்று பிடிவாதமாய்ப் பேசுவது முழு மூடத்தனமாகும். திருவள்ளுவர்தான் கவி என்றும், அவருக்குப் பின் தீர்க்கதரிசி யாருமே பிறக்கவில்லை, பிறக்க முடியாது

என்றும் எவரேனும் சொன்னல், எவ்வளவு சிரிப்பு வருமோ, அவ்வளவு சிரிப்பு வரும் வர்ணுசிரமத்தின் சிரஞ்சீவித்துவத்தைப் பற்றிப் பேசினல்.

எந்தத் திட்டத்திலும் அடிப்படையான சில உண்மைகள் உண்டு. அந்த உண்மைகளை யாருமே அழிக்க முடியாது. திட்ட மென்பது பெரும்பான்மை யோரின் சம்மதத்தைப் பெற்றது. எனவே, அந்தத் திட்டத்துக்கு ஏற்ற மனேபாவம் ஜன சமூகத்தில் இருக்கும் என்பது உண்மை. என்ருலும், அத்தகைய மனேபாவத்தால், சமுதாயமாகத் தீமைகள் விளைந் தால், அந்தத் திட்டத்தையும் அதன் பயனுன மனே பாவத்தையும் மாற்றவேண்டியது அவசியமாகும்.

இந்த வர்ணுசிரமத் திட்டத்தால், அது ஏற்பட்ட காலத்தில், நல்ல பயன்கள் ஏற்பட்டிருக்கலாம். ஆனல், அந்தக் காலத்தில், நாம் வாழவில்லை. எனவே, அதைப்பற்றி யோசிக்கவே தேவையில்லை. வர்ணு சிரமம் என்பது சாசுவத வாழ்க்கைத் திட்டமாகக் கருதப்பட்டது முதல், அதைக் காப்பாற்றுவதற்காகச் சில அர்த்தமில்லாத் தத்துவங்களும் வார்த்தைகளும் பக்க பலமாக ஏற்பட்டுவிட்டன.

மனிதனுக்கு சகோதர மனிதனல் ஏற்படும் தீமையைத் தெய்வக் கோளாறு என்று மழுப்புகிருேம். இல்லாவிட்டால் அவன் தலைவிதி, கர்ம பலன் என்று அழுத்தமாகச் சொல்லுகிருேம். இதனுடைய விபரீத பலன்களைப் பாருங்கள். கஷ்டம் ஒருவனுடைய தலை விதியின் பயனுயின், அதைத் தவிர்க்க மற்றவர்கள் முயலக் கூடாது என்றுதானே முடிவு கட்ட முடியும்? அதாவது, அந்தக் கஷ்டத்தை அவன் அனுபவித்துத் தான் ஆகவேண்டும். அந்தக் கஷ்டத்தைப் போக்க

பிறர் முயலுவது பாவம், தெய்வ சம்மதமாகாது. இந்த முடிவு தெய்வ சம்மதமாகுமா என்று நீங்கள் ஏன் கேட்கப்படாது?

எதற்கெடுத்தாலும், 'என்ன அவசரம், ஸார்!' என்று கேட்கிறோம். ஒவ்வொருவனும் ஆயிரம் வருஷம் இந்த மண்ணில் வாழ வரம் பெற்று வந்திருப்பவனைப் போலப் பேசுகிறான். இது கொடுமையா, கோழைத்தனமா? எது என்று சொல்ல முடியவில்லை. இந்த மனோபாவம், போலித் தத்துவத்தின், போலி வாழ்க்கைத் திட்டத்தின் பயனாகும். 'என்ன அவசரம், ஸார்!' என்று வியாதியை முற்றவிட்டுக் கொண்டு போகும் மனோபாவம் வெறுக்கத் தக்கதாகும். அது மனித மனோபாவ மல்ல.

ஒரு வழக்கத்திலே, பாசமும் பிடிப்பும் ஏற்படுவது பலவீனத்தினாலே. புது பழக்கத்தைக் கைக்கொண்டால், என்ன நேருமோ என்ற பயமும், கோழைத்தனமும், 'பழசு போதும், பழசு நன்றாயிருக்கிறது' என்று கூக்குரலிடுவதற்கு நம்மைத் தூண்டுகின்றன.

நான்கு நாட்களுக்கு முன் சமைத்த ஊசிப் போன தின்பண்டங்களை உண்ண யாருக்காவது மனம் வருகிறதா? தத்துவமும், வாழ்க்கைத் திட்டமும், தின்பண்டத்தைப் போலவே, ஊசிப்போய், கெட்ட வாடை வீசும் தன்மை கொண்டவை. சாக்கடை வழிக்கும் தொழிலைக் கொண்டவனுக்கு மூக்குக் கெட்டுப்போகும் என்று சொல்லுகிறார்கள். அது உண்மைதான் போலிருக்கிறது.

கெட்ட வாடை வீசும் வாழ்க்கைத் திட்டத்தின் கீழ் வாழ்ந்து வந்த நம்மவர்களுக்கு, கெட்ட வாடை

இன்னதென்றே சொல்லும் சக்தி அடியோடு போய் விட்டதோ என்று சந்தேகிக்கும்படி இருக்கிறது. மந்தம் பால்யத்திலும் கிழப் பருவத்திலும்தான் ஏற் படும். அத்தகைய மந்தம், நம்முடைய மனோபாவத் தில் மலையாகக் குவிந்து கிடக்கின்றது. 'வீர்' என்று சக்தியுடன் கையைத் தூக்குவதற்குக்கூட, தலை விதியை யோசனை கேட்கத் துவக்கிவிட்டோம். சகிக்க முடியாத கொடுமை!

'தூங்குகிற' பம்பரத்தில் கை வைத்தால், கையில் 'பட்' என்று அடி விழும். படுக்கையில் கிடக்கிற பம்பரத்தை, சிறு குழந்தை கூடத் தட்டிக் கொடுக் கலாம். படுக்கையில் கிடக்கிற பம்பரத்தின் கதி நமக்கு நேர்ந்துவிட்டதே! யாரிடம் முறையிட்டுக் கொள்வது?

'என்ன அவசரம், ஸார்!' என்று யாரேனும் புத்தி சாலியைப் போல் பேசினால், எனக்கு அடங்காத கோபம் வருகிறது. அற்ப ஆயுளிலே, அவசரத்துக்குத் தேவையில்லையா? நல்ல சந்தர்ப்பத்தில் செய்ய வேண்டிய காரியத்தைச் செய்யாமல், ஒத்திப்போட்டு விட்டால், அதன் கேடு, பின் சந்ததியார்களுக்குத் தாங்க முடியாத சுமையாகச் சுமந்து போய்விடுமே! பின் சந்ததியார்க்கு மட்டுமல்ல, நமக்கே, அது ஒரு பெரிய சுமையாகச் சுமந்துபோகும்.

இப்படிச் சுமையாகச் சுமந்துபோனால், சார மில்லாத தத்துவம் பேசத் தொடங்கிவிடுகிறோம். ஜீவ சத்தே இல்லாதது போல, பேசுகிறோம். வாழ்க் கையிலே பிடிப்பு இல்லாமற் போய்விடுகிறோம். ஈசுவரன் செயல் என்று பிதற்றுகிறோம். காலம் பொல்லாதது என்று அர்த்தமில்லாத பழியைக் காலத்

தின்மீது போடுகிறோம். இன்னும் என்னவெல்லாமோ, விபரீதப் பேச்சுகள் பேசுகிறோம். ஏன்? மனோபாவத்தில் மந்தம் ஏற்பட்டுவிட்டதனால். அது யாருடைய பிழை? நம்முடைய பிழை. அது தனி நபரின் தவறு அல்ல. அது திட்டத்தின் குறையாகும். வாழ்க்கைத் திட்டத்தை மாற்றினாலொழிய நமக்கு விமோசனம் இல்லை. 'என்ன அவசரம், ஸார்?' என்றால், உலகம் சிரிக்கும். அதற்குக்கூட ரோஷமில்லாவிட்டால், என்ன செய்கிறது?



## 18. கட்டை வேகும்—இல்லாவிட்டால்....

நம்முடைய தத்துவப் பேச்சுகள் எல்லாம் சுடு காட்டுத் தத்துவப் பேச்சு என்பது என் கருத்து. வாழ வகை யறியாதவர்கள் எல்லோரும், எப்பொழுதும் சுடுகாட்டைப் பற்றித்தான் பேசிக்கொண்டிருப்பார்கள். இந்த உலகத்திலேயே வாழத் தெரியாத பொழுது, அவர்களுக்கு இன்னொரு உலகத்தில் எல்லா சௌகரியங்களும் தயாராகக் காத்துக்கொண்டிருப்பதாக எண்ணிக்கொண்டிருக்கிறார்களே, இதைக் காட்டிலும் அபத்தம் வேறொன்றுமே யில்லை என்று அவர்களுக்குத் தெரிவதில்லை.

எப்பொழுது பார்த்தாலும் அலுத்துச் சலித்துப் பேசிக்கொண்டு, சுடுகாட்டைச் சொர்க்க வழியாக எண்ணிக்கொண்டிருப்பவர்களுக்கு, வாழ்க்கையில் ருசி இருக்குமா? இந்த மண் உலகத்திலிருந்து கொண்டு, சமாளிக்கத் தெரியாத மூடர்கள், உயர்ந்த உலகத்தைக் கற்பனை செய்வதும், அதை அடையப் போவதாகக் கனவு காண்பதும் அபத்தங்களில் ராஜா-அபத்தம்.

நரம்பு தளர்ந்துபோய், அறிவு துருப்பிடித்து, ஜீவதாது வற்றிப்போனால், மனிதனுக்கு, தன்னைத் தானே ஏமாற்றிக்கொள்ளும் மாயா சக்தி யொன்று உண்டாகின்றது. எந்தக் கட்சிக்கும் ஒரு எதிர் கட்சி உண்டு. எதிர் கட்சி உண்மையாக இருக்க வேண்டும் என்பதில்லை. எதிர் கட்சி சொன்னால் போதும். இந்த எதிர் கட்சி எதற்காக? தன்னைத்

தானே ஏமாற்றிக்கொண்டு தன்பேரில் சுமந்து நிற்கும் பொறுப்பை மெள்ள நழுவ விடுவதற்காக.

சுமார் பன்னிரண்டு வருஷங்களுக்கு முன் நேர்ந்த சௌரி சௌரா பயங்கர சம்பவத்துக்கு 'நானே ஜவாப்தாரி' என்று காந்தி சொன்னபொழுது, நான் திடுக்கிட்டுப் போனேன். காந்தி பொறுப்பை அள்ளி மேலே போட்டுக்கொள்ளும் விநோதமே விநோதம். பிரான்ஸ் தேசத்தில் அரசாண்ட பதினாலாம் லூயி என்ற மன்னன், 'நானே ராஜ்யம்' என்று சொல்லி, பொறுப்பில்லாமல் கண்டபடி ராஜ்யத்தை நடத்த அதை ஒரு சாக்காக வைத்துக்கொண்டார். மேலே சொன்ன இருவகைப் பொறுப்புகளையும் ஆராய்வது நலம்.

அஜீரணத்தால் ஏற்படும் கனவுகளுக்குக் கூட சூட்சும அர்த்தம் தேடும் கேவலமான நிலைக்கு வந்தவர்களுக்கு, இந்த உலகம் பிடிக்காது என்பது உண்மைதான். கைக்கு வந்த வேலையை அலட்சியம் செய்துவிட்டு, கைக்கு ஒருநாளும் வரமுடியாத வேலையிலே மோகங்கொண்டு, அர்த்தமில்லாத பேச்சுப் பேசுவது நரம்புக் கோளாறே யொழிய, வேறு உயர்ந்த சரக்கே யில்லை.

நம்மவர்கள் பேசும் அபத்தப் பேச்சுக் களஞ்சியத்தில், ஒரு சில நல்ல சரக்குகளும் இருக்கின்றன. 'இப்படி யிப்படி நேர்ந்தால்தான், நான் செத்த பிறகு என் கட்டை வேகும். இல்லாவிட்டால்......' என்று முடிக்கிறார்களே, இது நல்ல மாதிரியான பேச்சு. இத்தனை பாவனை வைராக்கியங்களுக்கு நடுவே, ஒரு உண்மையான ஆசை உணர்ச்சி ஏற்படுவது பாலைவனத்து நீர்ச்சுனையைப் போலத்தான்.

தனக்கு ஒரு ஆசையுமில்லை என்று போலி ஞானம் பேசுபவனை, கண்டிப்பாய், சுத்த வஞ்சகன் என்று தீர்ப்புக் கட்டிவிடலாம். 'சீ! இந்தத் திராட்சைப் பழம் புளிக்கும்!' என்ற கதை, யாருக்குத் தெரியாது? சக்திக் கிளையின் 'உச்சாணி'யில் இருக்கும் விரக்தி வைராக்கியம் உண்மையானது. அது நெருப்புக் குழம்பைப் போல, நாலா பக்கங்களிலும் தீயைப் பரப்பி, தாபத்தை வளர்க்கும்.

பாரிச வாயுவால் பீடிக்கப்பட்ட கைகளை உடையவன், 'கைச்சண்டை உதவாது' என்று உபதேசம் செய்வானானால், அதை யாராவது நம்புவார்களா? 'பையா, போர்வைக்குள் கைகளை வைத்துக்கொள்ளாதே! சூம்பிப் போன கைகளை வெளியே காட்டு!' என்று சொல்லத்தானே தோன்றும்? கட்டை வேகாது என்று சொல்வதிலே, ஒருவித பிடிவாத மிருக்கிறது. எதனால் கட்டை வேகாது என்று சொல்லுகிறானோ, அதைப்பற்றி அவன் எவ்வளவு சிந்தனை செய்திருக்கிறான், எவ்வளவு விசாரப் பட்டிருக்கிறான், எவ்வளவு கஷ்டப்படுகிறான் என்ற சங்கதிகள் வெளியாகின்றன. இடித்த புளியைப் போல இருப்பதினாலே, மனதிலே அமைதி உண்டாவதில்லை. ஆனந்தத்தினால்தான், மனதில் அமைதி உண்டாகிறது. நினைத்த காரியத்தைச் செய்து முடித்து, வெற்றி பெறாவிட்டால், ஆனந்தம், சந்தோஷம் உண்டாகவே உண்டாகாது. காரியம் சிறிதாயினும் சரியே, பெரிதா யிருந்தாலும் சரியே!

ரோமாபுரியைப் போல, செழுமையில் கொழுத்தது கார்த்தேஜ் என்ற நகரம். இது இரண்டாயிரம் வருஷத்துக்கு முன், நேர்ந்த விஷயம். அதைச்

சொல்லுகிறேன். கார்த்தேஜுக்கும் ரோமாபுரிக்கும் ஓயாத சண்டை. ஒன்று மற்றொன்றைத் தலைகீழாய் அழுத்திவிடவேண்டும் என்று கங்கணம் கட்டிக் கொண்டிருந்தன. இரண்டு நாடுகளிலும் வீரர்களுக்குக் குறைவே இல்லை. ஆனால் இரண்டு நாடுகளுக்கும் தீராப் பகை, ஓயாப் போர்.

கார்த்தேஜில் ஹாமில்கார் என்று ஒரு அரசர் இருந்தார். அவர் மகா தீரர். திறமை வாய்ந்த போர் வீரர். அவர் சாகும் தறுவாயில் இருந்தார். அவருக்கு, ஹன்னிபால் என்று ஒரு இளங் குமாரன். வயது பதினைந்து இருக்கும். பையனைக் கிட்ட அழைத்து வைத்துக்கொண்டு, ஹாமில்கார் சொல்லுகிறார்: 'அப்பா, குழந்தை! கார்த்தேஜுக்கு ஜன்ம விரோதி ரோம். இதை ஒருநாளும் நீ மறக்கலாகாது. மறக்க மாட்டேன் என்று சத்தியம் செய்!'

ஹாமில்கார், தமது பையனைப் பயமுறுத்துவது போல், ஏன் சத்தியத்தை வாங்கிக்கொள்ள வேண்டும்? ஹாமில்கார் செய்தது நான் தலைப்பில் குறித்திருக்கிறேனே 'கட்டை வேகும், இல்லாவிட்டால்' என்று, அந்த இனத்தைச் சேர்ந்ததாகும். இப்பேர்ப்பட்ட பிடிவாதம் இல்லாவிட்டால், மனிதனுடைய வாழ்வு செல்லாக் காசு கூடப் பெறாது. கார்த்தேஜின் பொது லட்சியத்தைத் தாமாகப் பாவித்து, ஹாமில்கார் பேசியிருக்கிறார்.

எந்தக் காரியத்திலும் பட்டும் படாமலிருக்கும் மிருதுவான உணர்ச்சிகளையும் ஆசைகளையும்கொண்டு வாழ்க்கை நடத்தவேண்டும் என்று எண்ணுவது தவறு. நீரை விட்டுப் பெருக்கின பால் என்ன கதியாகின்றதோ, அது போலவே, அற்பத்தனமான

உணர்ச்சிகள் அதிகப்பட்டு நிற்கும் வாழ்வு பயனுள்ளதாயிருக்காது. 'காயப்படுத்த ஆசை கொண்டவன், அடிக்க பயப்படுவானே?' என்று இங்கிலீஷில் கேலி செய்வதுண்டு. மகத்தான காரியங்களுக்கு, மகத்தான பிடிவாத உணர்ச்சிகளே அஸ்திவாரமாகும். ஆற்றிலொருகாலும் சேற்றிலொருகாலும் வைத்துக் கொண்டு, உபதேசம் செய்பவர்கள் வீணர்கள், கோழைகள்.

நாம் பிடித்த காரியத்தைச் சாதிக்காவிட்டால், பெண்கள் அழகாகச் சொல்லுவது போல, நம் நெஞ்சு ஒருநாளும் வேகாது. சுடுகாட்டிலே நமது கட்டைகள் வேகவேண்டுமானல், நாம் கொண்ட சங்கற்பத்தை நிறைவேற்றத்தான் வேண்டும். அர்த்தமில்லாத மௌனமும் ஆகாயப் பந்தல் பேச்சும் பயன்படமாட்டா. நெஞ்சு வேகாது என்ற எண்ணத்தைக் கொண்டுதான், சுடுகாட்டை நினைத்துக்கொள்ளலாம். ஆனல் சுடுகாடு சொர்க்கத்துக்கு வழி என்று எண்ணி ஏமாந்து போகவேண்டாம்.

சுடுகாடு சொர்க்க வழியானல், சொர்க்கத்திலே இப்பொழுது நிற்கக்கூட இடமிருக்காது. கால் கடுக்க சொர்க்கத்தில், வியர்க்க வியர்க்க சோம்பிக்கொண்டு நிற்பதைக் காட்டிலும், நம்முடைய அருமையான மண் உலக நரகமே மேலானது. இதற்கு, சாகப் பயப்படுதல் என்று அர்த்தமில்லை. நெஞ்சு வேகும்படியாக சாகவேண்டும் என்பது அர்த்தம். சுடுகாட்டுத் தத்துவம் பேசுவதா யிருந்தால், இனிமேல், நெஞ்சு வேகிற தத்துவம்தான் பேசவேண்டும்.

நெஞ்சு வேகவேண்டுமே என்று பெண்கள் சொல்லுவதிலேதான் அர்த்தமிருக்கிறது. ஆபத்து

ஸன்யாஸ கோழைத்தனத்திலும், பொறுப்பற்ற வார்த்தையிலும் வாழ்க்கையிலும், சுடுகாட்டு வைராக்கியத்திலும், தொட்டால்-சுருங்கி - உணர்ச்சிகளிலும், சாரமே கிடையாது. உண்மையாக, மனதில் இருக்கும் ஆசையை, பிடிவாதமாக வெளிக் காண்பித்து; வாழ்வை உயர்த்தி, நெஞ்சு வேகும்படியான சாவைக் கண்டு, சுடுகாட்டுக்குப் போவதுதான் சாரம்.



## 19. கதம்பப் பேச்சு

தாங்க முடியாத பாரத்தை வைத்தால், கல்தூண் வளைந்து கொடுப்பதில்லை. அது முறிந்து போகிறது, உடைந்து பிளந்து போகிறது. மனிதர்களுடைய மூளையோ, ஏற்க முடியாததைக் கக்கிவிடுகிறது. அப்படிக் கக்குகிற சமயத்தில், மனிதன் சோர்வடைந்து, தூங்கப் போகிறான்; அல்லது கடினமாயில்லாத விஷயத்தை எடுத்துக்கொண்டு, பேசத் தொடங்குகிறான்.

கடல் மணல்வெளி, எல்லோருக்கும் கொண்டாட்டம். நாள் முழுதும் வேலை பார்த்தவர்கள், காற்றை அனுபவித்துக்கொண்டு, சோர்வைப் போக்கிக்கொள்ளுகிறார்கள். குழந்தைகள், பலவகைகளில் மனத்தைச் செலுத்தி விளையாடுகின்றன. கவியோ, கடலிலும் காற்றிலும் அலையிலும் ஈடுபட்டு, தனது நரம்புகளைத் திருத்திக்கொண்டு, ஆவேசத்தில் ஆழ்கின்றான். ஸ்திரீகளுக்கு, பரந்த மணல்வெளி சிறிது காலத்துக்கு விடுதலை சந்தர்ப்பம்.

பெரிதிலே சின்னது ஒட்டிக்கொள்வது இயற்கை. மகத்தைக் கண்டு, பரவசமாவது சகஜம். பரந்த தன்மை எங்கு வியாபித்துக் கிடக்கின்றதோ, அங்கு அல்பத்தனம் தலைகாட்டுவதில்லை. இந்த மாதிரி சமயங்களில், உற்சாக மேலீட்டால், சம்பந்தமில்லாமல் பேசுவது இயற்கை. இத்தகைய பேச்சொன்றை விஸ்தாரமாக எழுதினால், விசித்திரமாயிருக்கும். பேசினவர்கள்கூட, இதைக் கண்டு திகைத்துப் போவார்கள்.

புருக்கள், கரும் புள்ளிகளைப் போல, ஆகாயத்தில் சில சமயங்களில் பறக்கும். அதுவும் மேக சஞ்சார மிருந்தால், நெற்றியில் சாந்துப் பொட்டு வைத்தது போல, இந்தக் கறும் புள்ளிப் புருக்கள், ஆகாய வீதியில் தோன்றும். ஆனால் இந்தப் புருக்கள், அப்படியே தரித்துப் பறப்பதில்லை. சடசடவென்று இறக்கைகளைத் தட்டினால் போதும், சின்ன தென்னை மர மட்டத்துக்கு, ரொம்ப சீக்கிரமாக வந்துவிடும்.

மனிதர்களுடைய மனதும் இப்படித்தான். உயரப் பறக்கும்; கீழே திடீரென்று வரும். மறுபடியும் மேலே எழும். பட்டென்று, சரிந்து கீழே வந்துவிடும். மேலேயும் கீழேயும் 'லோடன்' அடித்துக்கொண்டிருக்கிற மனதை, ஒரே இடத்தில் லயிக்கும்படியாகச் செய்வது கஷ்டம். ஒரே வர்ணத்தை, நீண்ட காலம், கண் பார்த்துக்கொண்டிருக்க முடியாது. மனதுக்கும் இத்தகைய தொல்லையுண்டு.

இதை எந்த வேலையுடன் பொருத்திவைத்துப் பார்த்தாலும் இதன் உண்மை கெடாது. கணக்குக் கூட்டுவது முதல், கவிதை எழுதுவது வரையில், குப்பை வாருவது முதல், ஆகாய விமானம் கட்டுவது வரையில், எந்த வேலையை எடுத்துக்கொண்டாலும், அதிலே, துளியாவது சிருஷ்டி அம்சம் இருக்கத்தான் செய்கிறது. சிருஷ்டி சமயத்தில், ஜீவராசிகள் ஏகாக்கிர சித்தத்துடன் இருப்பது இயற்கை.

பேச்சும் ஒருவகை வேலைதான். பேச்சு வேலையிலே, மட்ட ரக சிருஷ்டியும் உண்டு; உயர்ந்த ரக சிருஷ்டியும் உண்டு. குடிசை கட்டுவது சின்ன வேலையென்றும், மாளிகை அமைப்பது பெரிய வேலையென்

றும் எண்ணுவது தவறு. அழகை, பெரிய உருவத்தைக் கொண்டு களிப்பதில்லை. ஒன்றரைச் சாண் குழந்தை ஆறு அடி மனிதனைவிட எவ்வளவோ மடங்கு அதிகமான அழகுடன் இருக்கிறது. அமைப்பின் நுட்பத்தைப் பொறுத்தது அழகு.

கட்டு விடாமல் உறுதியுடன் இருக்கும் பொருளிலும், பேச்சிலும் பசை அதிகமாக நிறைந்து நிற்கின்றது. அத்தகைய பசையைப் பொறுத்தது அழகு. தெரிந்தோ, தெரியாமலோ, இந்த அழகு— சிருஷ்டி - உண்மையைத் தெளிவாக எடுத்துச் சொல்லும் கட்டுரையிலே, மனம் நீண்ட காலம், கவ்விக் கிடப்பதில்லை. அதே உண்மையை, சிறு துளிகளாக, பல விடங்களில் புகுத்தி, கதையாகச் சொன்னால், சிறிதளவு, கவனம் கெடாமலிருக்கிறது. கதை கேட்பதிலும் அலுப்பு உண்டாகிறது. கண்ணுக்கும் வேலை வேண்டியிருக்கிறது. எனவே, ஸ்வாரஸ்யமான கதையைக் காட்டிலும், நாடகம் மனிதனுக்குக் கவர்ச்சி கொடுக்கிறது. ஆனல், ஆணி அறைந்தது போல, மனம் லயித்துப்போக வேண்டுமானல், சாகித்திய அழகுடன், சங்கீதம் கலந்த பாட்டுப் பாட வேண்டும்.

மனம் லயிப்பதற்கு, எல்லாவற்றையும்விட சிறந்த சாதனம் வேலைதான். மனதுக்குப் பிடித்த வேலையை, ஒருவன் செய்துகொண்டிருந்தால், வெளியுலகம் என்ற ஒரு சாமான் இருப்பதாகவே அவனுக்கு நினைவு இருப்பதில்லை. வேலை என்றால் என்ன? அதிலே, ஏன் மனம் லயித்துப் போகவேண்டும்? வேலை என்பது அழகு சிருஷ்டி. தனித் துண்டுகளாக சிதறிக் கிடப்பனவற்றை, ஒன்று சேர்த்து, பொருந்த

வைத்து, அவைகளுக்கு ஒரு உருவம் உண்டாக்குவது தான் வேலை.

வேலையிலேதான், மனித வர்க்கம் ஈடுபட்டிருக்கிறது. ஆனால், நீண்ட காலம் சிருஷ்டி வேலையிலேயே, ஈடுபட்டிருப்பது மனிதனுக்கு முடியாத காரியம். சின்னக் குழந்தைகள், தாங்கள் கட்டின மணல் வீடுகளை, அழகு பார்த்து, மறுபடியும் கலைத்துவிடுகிறது போல, மனிதனும் தன் சிருஷ்டியைக் கலைத்து விடுகிறான் அடிக்கடி.

கடந்த இரண்டு சட்ட மறுப்பு இயக்கங்களையும் கவனித்தால், இதன் உண்மை விளங்கும். இந்தியர்களின் மனதைக் குவியச் செய்தது, சட்ட மறுப்பு இயக்கம். அதாவது, சட்டமறுப்பு இயக்கம் இந்தியர்களை புதிய சிருஷ்டி வேலையில் கொண்டுபோய்த் தள்ளிற்று. இந்தியர்களும் அந்த வேலையில் ஈடுபட்டார்கள்.

ஆனால், அந்த சிருஷ்டி வேலையில், நீடித்த காலம் லயித்து நின்று, உழைக்க முடியவில்லை. காரணம் என்ன? சிருஷ்டி வேலை புதிது என்ற காரணமில்லை. எப்பொழுதுமே சம்பாதித்துக்கொண்டிருப்பது முடியாத காரியம். அதைச் செலவு செய்யும் தன்மையும் மனிதனிடம் இருக்கிறது. இது ஒரு விளையாட்டுத்தனம் என்று கேலி செய்வதில் லாபமில்லை. இயற்கையைப் பழிப்பதில், என்ன பயன்?

'ஆகாயத்திலே தோன்றுகிற அற்புத விசித்திரம் தான் என்ன!' என்று குதூகலத்துடன் பேசும் பொழுதும், அதை வர்ணிக்கும் பொழுதும், பக்கத்திலிருப்பவர்கள், தாங்கள் அறியாமலே, அதில் ஈடுபட்டுப் போய்விடுகிறார்கள். மெய் மறந்தும் போய்விடு

கிறார்கள். சுருதி மீட்டப்பட்டது போலிருக்கும் நரம்புகள், அந்த நிலைமையிலேயே இருக்க முடிவ தில்லை. 'நேற்று, அந்த நாடகத்துக்குப் போயிருந்தீர் களா?' என்று ஒரு கேள்வியைக் கேட்டு, நரம்புக் கூட்டம் லயித்துப் போயிருந்ததை, விரைவில் கெடுத்துவிடுகிறான்.

நியூடனைப்பற்றி ஒரு கதை சொல்வதுண்டு. ஸயன்ஸில் அவர் அற்புதமான உண்மைகளைக் கண்டு பிடித்திருக்கிறார். சாப்பிடுகிற நேரமே திட்டமாக கிடையாது அவருக்கு. சாப்பிட அவருக்கு அவருடைய பட்லர் நினைவு மூட்டவேண்டும். கோழி முட்டை யைத் தாமே சமைத்துச் சாப்பிடுவதாக, அவர் பட்ல ரிடம் சொல்லிவிட்டு, கடிகாரத்தைத் தண்ணீரில் போட்டு கொதிக்கவைத்துக்கொண்டு, கையிலிருக்கிற கோழி முட்டையைக் கடியாரமாகப் பாவித்துக் கொண்டு ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருக்கிறார்.

கோழி முட்டையை வேகவைத்து, க டி யா ர ப் படி அதை இறக்கவேண்டிய நியூடன், காரியத்தை மாற்றிச் செய்ததைப் பற்றி, சிந்தனை சிரமம் இல்லாத சின்னப் பையன்கள் விழுந்து விழுந்து சிரிக்கலாம். ஆனால் நியூடனைப் போல, மனம் லயித்துப் போனா லன்றி, இயற்கையில் பொதிந்து கிடக்கும் நுட்பமான உண்மைகளைக் கண்டுபிடிக்க முடியாது. ஒரு முனைப் பட்ட மனதை வளர்ப்பதுதான் கல்வியின் நோக் கம்; கவிகளின் நோக்கமும்.

* * *

போருக்கு ஆயுதம் ஒருவகையில் தேவை என் பது உண்மை யென்றாலும், பேடி கையிலிருக்கும் ஆயுதத்தினால், ஒருவருக்கும் பிரயோஜனமில்லை.

மனோபாவம் சரியான நிலைமையில் இல்லாதவரையிலும், கையாளுகிற எந்தச் சாதனத்தாலும், நன்மை உண்டாகாது. மேதாவிகளாயிருந்தால், விஷத்தையும் மருந்தாக மாற்ற முடியும். எனவே, நாம் எல்லோரும் அடிப்படையாகச் செய்யவேண்டிய வேலை மன வளர்ச்சி, மனோவிகாச வேலைதான்.

*　　　　*　　　　*

துருப்பிடித்துப்போன மனதை வைத்துக் கொண்டு, சிறிய காரியத்தைக் கூட, சரியாகச் செய்து முடிக்க முடியாது. பெரிய காரியங்களிலிருந்து மனம் கக்கி நழுவி விழுவது, நாம் உணவை வாந்தி எடுப்பது போல. வாந்தி எடுப்பது உடம்புக்கு எப்படிக் கூடாத காரியமோ, அது போலவே, பெரிய விஷயங்களில் லயிக்காமல், மனம் கக்கி நழுவப் பார்ப்பது. இது, வேலை யில்லாமல் வளர்ந்ததாலும், பொறுப்பை ஏற்காததாலும் ஏற்பட்ட தீய பயனாகும்.

*　　　　*　　　　*

எழுத்திலே மகாத்மா காந்தியின் எழுத்து உயர்ந்தது என்று ஏன் சொல்லுகிறோம்? எழுத்து தெளிவாயிருக்கிறது என்ற காரணம் இருக்கட்டும். அவருடைய எழுத்து அவருடைய லயித்துப் போன மனதை நன்றாக வெளிக் காண்பிக்கிறது. அது மட்டுமா? நம்முடைய மனதையும் லயித்துப் போகும்படியாகச் செய்து, நமக்கு ஊக்கத்தையும், உறுதியையும் ஒருங்கே ஊட்டுகின்றது. மனம் லயிக்கவும் மகத்தான காரியங்களைச் செய்யவும்தான் நாம் பாடுபட வேண்டும்.

## 20. லெனின் - காந்தி

இப்பொழுது, லோகத்திலே இருக்கிற அரசாங்கங்கள் யாவும், ருஷியாவோடு உறவு கொண்டாட 'நான், நீ' என்று முந்திக்கொண்டு வருகின்றன. பத்து வருஷங்களுக்கு முன்னால், ஒரு குஷ்டரோகி, ஒரு திண்டத்தகாதான், ஒரு வியபசாரி, ஒரு கொலைகாரன் — இவர்களைப் பற்றி மனிதர்கள் எப்படி வெறுப்புடன் பேசுவார்களோ, அது போலவே, ருஷிய அரசாங்கத்தைப் பற்றிப் பேசி வந்தார்கள்.

ருஷியப் புரட்சியும் போல்ஷிவிக்க அரசியல் திட்டமும், வாயில் வைத்து பேசப்படாத சங்கதிகள் போல, பாவிக்கப்பட்டன. இந்தப் புரட்சிக்கும் திட்டத்துக்கும் காரணர் நிகொலாய் லெனின் அவர்கள். நல்ல பாம்பைப் பார்த்தால் எவ்வளவு பயமோ, அவ்வளவு பயம் லெனின் பெயரைக் கேட்டால்.

போல்ஷிவிக்க அரசியல் திட்டம் சரியா, இல்லையா, அது உலகத்துக்குத் தேவையா, இல்லையா என்பதைப் பற்றி, இப்பொழுது நான் ஆராயவில்லை. லெனின் என்பவர் எப்படிப்பட்டவர், அவருக்கும் காந்திக்கும் குண விசேஷங்களில் ஏதேனும் ஒற்றுமை உண்டா என்பதைக் கவனிப்பதுதான் தற்போதைய வேலை.

லெனினுடைய வாழ்க்கை விவரங்களை அரைகுறையாகப் படித்த போதிலும், ஒரு சங்கதி மட்டும் தெளிவாகத் தெரிகிறது. அவர் ஒருபொழுதும் நெஞ்சம் கலங்கினதாகத் தெரியவில்லை. சாதாரணமாக, நம்மில் எவரேனும், புதிய ஊருக்குப் போவதா

யிருந்தால், பாதையிலே எத்தனை பேர்களை வழி கேட்கிறோம்! எத்தனை தடவைகள் வழி கேட்டாலும், சந்தேகம் விடுகிறபாடில்லை.

சிறிய சங்கதிகளிலேயே, இவ்வளவு சந்தேகம் மனிதர்களுக்கு இருக்கும் பொழுது, வாழ்க்கையையே புதிதாக அமைக்கவேண்டிய சந்தர்ப்பங்களில் இத்தகைய பெரியார்களுக்குத் துளி கூட சந்தேகமே ஏற்படுவதில்லை. இது அதிசயம் என்று சொல்லலாம்.

தோல்விக்கு மேல் தோல்வி நேர்ந்துகொண்டேயிருந்தால், நாம் கையாளும் முறை சரிதான் என்று நிச்சயமாய்ச் சொல்லும்படியான திடபுத்தி நமக்கு ஏற்படுமா? புரட்சிக்காக லெனின் உழைக்க ஆரம்பித்த காலம் முதல், போல்ஷிவிக்கப் புரட்சி தோன்றிய காலம் வரையில், அவருக்கும் அவரது கட்சியார்களுக்கும் தோல்வியைத் தவிர, ஜயமே கிடையாது என்று சொல்லலாம்.

தோல்வி யென்றால் வெறும் தோல்வியா? தேசப்பிரஷ்டம், தனிக்காவல், சிறைவாசம், தூக்குமேடை, சொத்துப் பறிமுதல் — எல்லாம் சேர்ந்துகொள்ளுகின்றன. புரட்சியின் தேவையை உணராத பெரும்பான்மை ருஷியர்கள் லெனினையும் அவரது சகாக்களையும் வாய்கொண்ட மட்டும் திட்டவும் செய்தார்கள்.

லெனின் ருஷியாவில் இருந்த காலம் மிகவும் சொற்பம். வெளி நாடுகளில் அவர் மிகுதியும் வசித்து வந்தார். ஜீவனோபாயத்துக்கு வழியில்லை. வயிற்றுப்பாடே திண்டாட்டத்தி லிருந்தபொழுது தேச வேலைக்கு அவரிடம் பணம் இருக்குமா? இங்

தத் தொல்லேகளே அவர் சமாளித்தது ஆச்சரியத்தி லும் ஆச்சரியம்.

இதனிடையே, தேச விடுதலேக்காகக் கையாளப் பட்ட வழிகளில் அவருக்கும் ஏனேய சுதந்திர வீரர்களுக்கும் அபிப்பிராய பேதம். இந்த நெருக் கடியைத்தான் பெரும்பாலோரால் பொறுக்க முடி யாது. எதிர்கட்சியாளுேடு, அபிப்பிராய பேதம் ஏற்படுவது இயற்கைதான். அதை யாருமே பொருள் படுத்துவதில்லே. ஒரு கட்சிக்குள்ளாகவே, அபிப் பிராய பேதம் வந்துவிட்டால், அதைக் காட்டிலும் பயங்கரமான நிகழ்ச்சி வேறு எதுவும் கிடையாது.

குடும்பக் கலகம் ஏற்பட்டால், அந்தக் குடும்பம் உருப்படுமா? குடும்பத்திலே சொத்து உரிமையும் செலவு செய்யும் பாத்தியமும் யாரிடம் இருக்கிறதோ, அவர் சொற்படி மற்றவர்கள் கேட்பார்கள். குடும் பத்திலே, உறவு பாசம் வேறு இருக்கிறது. கட்சித் தலேவன் கதி, குடும்பத் தலேவனுடைய கதியல்ல. பத்துப் பேர்கள் சேர்ந்து கூப்பாடு போட்டால்தான், ஒருவன் தலேவனுக முடியும். கட்சிச் செல்வாக்கை இடிக்காமலும், சரியான சாதனத்தைக் கைக்கொண் டும், கட்சியை உடைக்காமலும் காரியம் செய்வது தலேவனுடைய பொறுப்பு.

அதுவும் தோல்விக் காலத்தில், கட்சி உடைந்து போகாமல் பார்த்துக்கொள்ளுவது ரொம்ப கஷ்டம். கட்சியைச் சேர்ந்த சில்லறைப் பேர்வழிகள், தங்கள் மனம்போனவாறு, தலேவனேத் தூற்றுவார்கள். 'உங்களுடைய பிடிவாத அகம்பாவத்தால், நாம் தோற்றுப்போனேம். கொக்குக்கு ஒன்றே மதி என்று சொல்லுவது போல், நீங்கள் பேசுகிறீர்கள். காரிய

மும் செய்கிறீர்கள். எங்களுக்கு இது கட்டிவராது' என்று அவர்கள், தலைவனை கண்டபடி யெல்லாம் ஏசுவார்கள்.

இந்த சமயங்களில், சாமர்த்தியவாதம் செய்து, கட்சி சகாக்களை சமாதானப்படுத்த முடியாது. மனதிலே விகாரம் ஏற்பட்டுவிட்டால், எந்த நல்ல கட்சி வாதத்தையும் தூள்தூளாக உடைத்துவிடலாம். இந்த நெருக்கடி சந்தர்ப்பங்களில், தலைவனுக்குத் துணை நிற்பது எது? அவனுடைய புத்தி விசேஷமல்ல. அவனுடைய குணவிசேஷம், அவனுடைய முகவிலாசம், அவனுடைய தளராத நம்பிக்கை, அவனுடைய பரந்த காருண்யம், அவனுடைய அஞ்சா நெஞ்சம். இவை யாவும் லெனினுக்கு துணை நின்றன.

ஒவ்வொரு போராட்டத்துக்கும் பிறகு, லெனின் என்ன செய்யப்போகிறார் என்பது அவருடைய சகாக்களுக்குக்கூட நேரே தெரிவதில்லை. ஒரு சமயம் சட்டசபை பகிஷ்காரம் வேண்டும் என்பார் லெனின். அந்த திட்டத்தை, தர்க்க சாஸ்திர விதிப்படி பூர்த்தி செய்வதற்காக அவருடைய சகாக்கள் பெரிதும் பாடுபடுவார்கள். 'பகிஷ்காரம், பகிஷ்காரம்' என்று கட்சி கூச்சல் போட்டுக்கொண்டிருக்கும். திடீரென்று சட்ட சபை புகவேண்டும் என்பார் லெனின். இந்த மனிதனுக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறதா என்று அவர் சகாக்கள் எண்ணுவார்கள்.

புரட்சி சாஸ்திரப்படி காரியம் செய்யவேண்டுமென திட்டம் கோலுபவர்களுக்கு லெனினுடைய உபதேசம் பிடிப்பதில்லை. அவர்களில் சிலர், கட்சியைவிட்டு விலகிக்கொள்ளுவார்கள். லெனினுடைய தீர்க்க தரிசன யோசனைகளை அவருடைய பிடிவாத

அகம்பாவத்தின் விளைவுகள் என்று எண்ணி மனம் நொந்து போனவர்கள் அநேகர்.

வேலையில்லாத காலத்திலெல்லாம், வேலை யில்லையே என்று அவர் சகாக்கள் மனம் புழுங்குவார்கள். லெனின், வேலைத்திட்டம் போட்டு, அதை அமுலுக்குக் கொண்டுவருகையில், அவரோடு யாருமே வேலை செய்ய முடிவதில்லை. இரவு பகல், ஆகாரம் ஓய்வு என்ற விவகாரங்கள் மனித வாழ்வில் இருப்பதாகவே லெனின் எண்ணிக்கொள்ளுவதில்லை. எல்லோரும் அயர்ந்து போய்விடுவார்கள். லெனின் மட்டும் சோர்வு அடைந்ததே கிடையாது. அப்பொழுதும் அவர் அவருடைய சகாக்களைக் கண்டு அலுத்துச் சலித்துக்கொள்ளுவதில்லை.

எப்பொழுது பார்த்தாலும், லெனினுக்கு, ஏழை எளியவர்கள், தொழிலாளர்கள், திக்கற்றவர்கள், ஸ்திரீகள்—இவர்களைப் பற்றித்தான் கவலை. 'நம்முடைய கட்சி வெற்றி பெறவேண்டுமானால், எளியவர்களும், ஸ்திரீகளும், இளைஞர்களும் அதில் ஏராளமாகச் சேர்ந்து உழைக்கும்படியாக நாம் செய்ய வேண்டும். இவர்களை அலட்சியம் செய்யவே கூடாது. இவர்களை அலட்சியம் செய்யும் ஏனைய கட்சிகள் அடி வலுவில்லாமல் தவிக்கிறதை நீங்கள் பார்த்திருக்கிறீர்கள்' என்று லெனின், அவருடைய சகாக்களுக்கு எழுதியிருக்கிறார்.

சென்ற ஐரோப்பியப் போர் காலத்தில், 1916-ம் வருஷ முடிவில், ருஷியப் புரட்சி ஆரம்பித்தது. புரட்சியை ஆரம்பித்தவர்கள் வேறு கட்சியார். லெனின் கட்சியாருக்கு செல்வாக்கு அதிகம் கிடையாது. அவர்கள் சிறுபான்மை. அந்தச் சமயத்தில்

லெனின் காண்பித்த திரத்தை சொல்ல முடியாது. லெனினுடைய பெயர் கெடும்படியாக, 'அவர் ஜெர்மன் ஒற்றன்' என்று எதிர் கட்சியார் பிரசாரம் செய்து, அவரைப் பிடித்துக் கைது செய்யும்படி உத்தரவிட்டார்கள்.

ருஷியாவை விட்டு வேற்று நாடுகளில் மறைந்து வாழவேண்டும் என்று லெனினுக்கு அவரது சகாக்கள் புத்தி சொல்லிப் பார்த்தார்கள். லெனின் அசையவில்லை. அதுவரையிலும் மறைவிலிருந்த லெனின், 'வந்தது வரட்டும்' என்று பகிரங்கமாக வெளியே வந்து வேலை செய்யத் துவக்கினர். நான்கு மாத காலத்துக்குள், தமது கட்சியை வலுப்படுத்தி, அரசாங்கத்தைக் கைப்பற்றி, போல்ஷிவிக்க புரட்சியை நிலைக்கச் செய்து, உலகமே பிரமிக்கும்படி செய்தார். சகாக்கள் சோர்வடைந்துபோன சமயத்தில், சிங்க கர்ஜனை செய்த லெனினுக்கு, தைரியம் எங்கிருந்து வந்தது?

கட்சிக்குள் பிளவுகள் அதிகமா யிருந்த காலத்தில், லெனினுடைய சகா ஒருவர், 'நீங்களே தனியாக நின்று, எல்லாவற்றையும் செய்யவேண்டு மென்று உங்கள் கருத்தா? எல்லோரையும் வெருட்டி அடித்து விடுகிறீர்களே!' என்று கேட்டார் லெனினை.

லெனின் பதில் சொன்னதாவது: 'சில சந்தர்ப்பங்களில், பொதுஜனங்கள் (சகாக்கள் உள்பட) ஏதேதோ ஒரு காரணத்தை முன்னிட்டு, போராட்டத்திலிருந்து விலகிக்கொள்ளுகிருர்கள். அந்தச் சமயத்தில் தனித்து நின்று கொடியைக் காப்பாற்றுதவன் தலைவன் அல்லன், தளகர்த்தன் அல்லன். கொடியின் தூய்மையைப் போற்றிக் காப்பாற்றவேண்டிய பொறுப்பு, சில சமயங்களில் ஒரே ஒருவனைச் சாரும்.'

லெனின் என்பதற்குப் பதிலாக காந்தி என்று வைத்துப் படியுங்கள். காந்தியின் பாட்டு பேச்சையும் மனதில் வைத்துக்கொள்ளுங்கள். குண விசேஷங்களில், இரண்டு பேருக்கும் எவ்வளவு ஒற்றுமை என்பது தெளிவுபடும். லெனின் — காந்தி, இருவரும் சாஸ்திரத்துக்குக் கட்டுப்படாத காரிய மேதாவிகள்.



## 21. பெண்புத்தி, பின்புத்திதான் !

*வீட்டிலுள்ள பழக்கமே நாட்டி லுண்டாம்,*
*வீட்டினிலே தனக்கடிமை பிறரா மென்பான் ;*
*நாட்டினிலே நாடோறு முயன்றிடுவா னலிந்து சாவான்;*
*காட்டிலுள்ள பறவைகள் போல் வாழ்வோமப்பா.*

— *பாரதியார்*

தமிழிலே, ப்ராஸம் ரொம்ப ஜாஸ்தி. தமிழுக்கு வசனநடை புதிது. எனவே, ப்ராஸம் போட்டுப் பாடின பாட்டுகள் அதிகம். ப்ராஸம் போட்டுப் பாடுகிற பாட்டுகளிலும் பழமொழிகளிலும் உண்மை இருக்கவேண்டும் என்பது சாமான்யர்களின் நினைப்பு. இந்த நினைப்பு தவறு. ப்ராஸத்திலே ப்ராஸம்தான் உண்டு. அதிலே உண்மை இருக்கவேண்டுமென்பது இல்லை.

'எண்ணறக் கற்று, எழுத்தற வாசித்தாலும், பெண்புத்தி பின்புத்திதான்' என்று ஒருவர் நீட்டி முழக்கிக்கொண்டு பாடிவிட்டுப் போய்விட்டார். பாடியவருக்கு, இதைப் பாடிய பொழுது நிலைமை எப்படி யிருந்ததோ, தெரியாது. உடல்நிலை மனநிலை இரண்டையும் கவனித்தல் வேண்டும்.

* * *

பட்டினத்து அடிகளுக்கு, அவரது இளம் பிராயத்தில் விலைமாதரின் உறவு அதிகம். மோகப்பிராந்தியில் சிக்கிக்கொண்டு தவித்த பட்டினத்தார், விலைமாதர்களிடம் தமக்கிருந்த அனுபவத்தைக் கொண்டு, பெண் இனத்தையே மிகவும் கேவலமாகக் கூறிவிட்டார். ஆரம்பிக்கும் பொழுதே, 'பெண்ணாகி வந்த

தொரு மாயப் பிசாசு' என்று கடுமையாக வார்த்தைகளைக் கொட்டிவிட்டார்.

* * *

பட்டினத்தாரைப் போலவே, வேறொருவர், பெண்களைப் பற்றி கேவலமாகப் பாடியிருக்கிறார். அதைத்தான் மேலே குறிப்பிட்டது. மிஸ் மேயோ, இந்தியர்கள் அனைவரையும், சமுதாயமாக, கேவலமாய்த் திட்டி எழுதிவிட்டாள். அவள் எழுதினது தவறு என்று எல்லோரும் கண்டித்தார்கள். மேலே குறிப்பிட்ட புலவரின் வார்த்தைகளைக் கண்டிக்க, யாருக்கும் மனம் வரவில்லை.

அந்தப் புலவர் - உண்மையிலேயே அவர் கவி அல்லர் - கூறியிருப்பது உண்மையா? உண்மையாயின் அதற்கு அத்தாட்சிகள் என்ன? அவருடைய வாய்ப் பிரமாணம், எழுத்துப் பிரமாணம் ஒன்றுதான் அத்தாட்சி போலும்! 'நான் சொல்லுகிறேன்; நீங்கள் கேட்டுத்தான் ஆகவேண்டும்' என்று, அரசியலில் சர்வாதிகாரிகளைப் போல, புலவர்கள் தங்களைப் பாவித்துக்கொள்ளுகிறார்களோ, என்னவோ?

பெண்புத்தி பின்புத்தி என்ற முடிவுக்கு வர, யார் எவ்வாறு பரிசோதனை செய்து பார்த்தார்கள் என்பது யாருக்குமே தெரியாது. 'அந்த ஒடிந்த கொம்பு மாடு அழகு' என்று ஒரு முரடன் சொல்லவேண்டியது, அதை 'ஆமாம்' போட்டு மற்றவர்கள் ஆமோதிக்கவேண்டியது. இது கிராமத்திலே நடக்கிற சம்பவம். இதைப் போலவே நடந்திருக்கின்றன, பெண்களைப் பற்றிய பேச்சுகள் யாவும்.

யாருக்கு அன்பு இருக்கிறதோ, அவர்களைக் கண்டால், மற்றவர்களுக்கு பயமிருப்பதில்லை. அன்பு

கொண்டவர்கள எதையும் பெரிது படுத்திக்கொண்டு நிஷ்டூரம் செய்வதில்லை. யாரையும் குறை கூறும் மனமும் அவர்களுக்கு இருப்பதில்லை. எனவே, அவர்கள் மற்றவர்களின் கண்களில் அற்பமாக,எளிதான பொருளாகத் தோன்றுகிறார்கள். அது உலக அனுபவம்.

மோட்டார்காரை நிறுத்தும் ராமமூர்த்தியின் பக்கத்தில் காந்தியை நிறுத்திப் பார்த்தால், ராமமூர்த்தியின் உடல் வலிமைதான் சாமான்யர்களின் மனதில் அழுத்தமாகப் பதியும். அது மட்டுமா? காந்தியை ஏளனம்கூடச் செய்வார்கள். 'காந்தி மகாத்மா என்று சொல்லிக் கொண்டார்களே, அவரால் மோட்டாரைக் கூட நிறுத்த முடியவில்லையே!' என்று சற்று அவமதிப்பாகப் பேசவும் கூடும்.

ஆண் பெண் சங்கதியிலே, ராமமூர்த்தி - காந்தி உபமானம் எல்லா வகைகளிலும் பொருந்தும். ஆணுக்கு உடல் வலிமை அதிகம் என்பது உடனே ஒப்புக்கொள்ளவேண்டிய விஷயமாகும். சுமையைத் தூக்குவதில், நெடுந் தூரம் நடப்பதில், நாள் முழுவதும் கடினமான வேலை செய்வதில், அடிதடியில் ஆணுக்கு நிகராகமாட்டாள் பெண். எதையும் மனதிலே வைத்துக்கொண்டு உருகுவதில், ஆண் தோற்கடிக்க முடியாது பெண்ணை.

எவனொருவன் தன் மனக்குறையை வெளிவிட்டுச் சொல்லாமல், சகித்துக்கொண்டிருக்கிறானோ, அவனை மடையன் என்றும், கீழ்ப்பட்டவன் என்றும் மற்றவர்கள் எண்ணுவது சாதாரணம். அழுத பிள்ளைதான் பால் குடிக்குமாமே! இந்தப் பழமொழி அவர்களுக்குப் பக்கபலமா யிருக்கும் பொழுது, அவர்கள் என்னதான் பேசமாட்டார்கள்?

இங்கிலீஷ்காரர்களை நம்பி உழைத்துக்கொண்டே வந்தால், ஸ்வராஜ்யம் தானுக வரும் என்று ஏமாந்து கொண்டுவந்த மிதவாதிகளைப் போல, பெண்களும் ஆண்களை நம்பி நம்பி இதுவரையிலும் உழைத்து தங்களுடைய சுதந்திரங்கள் யாவையும் இழந்து நிற்கிருர்கள். இதுதான் அவர்களுடைய பின்புத்தியாகும்.

பெண்கள் இந்த மாதிரி நடந்துகொண்டது தவறு என்பதைக் குறிப்பிடும் பொருட்டு, பெண் புத்தி பின்புத்திதான் என்று மேற்சொன்ன புலவர் பாடியிருப்பாராயின், அதை சந்தோஷத்துடனும் வந்தனத்துடனும் ஏற்றுக்கொள்ளுகிறேன். இயற்கையாகவே, ஆணுக்குப் பெண் மட்டம் என்ற பொருளிலேதான் புலவர் பாடியிருக்கிருர்.

எந்த வகையில், ஆணுக்கு மட்டம் பெண் என்று தெரியவில்லை. எந்த வகையில், பெண்புத்தி சின்ன புத்தி என்று தெரியவில்லை. எந்த குணத்தில், பெண் ஆணுக்குச் சளைத்தவள் என்று தெரியவில்லை. பெண்களின் குண விசேஷங்களைப் பஞ்ச காலத்தில்தான் பார்க்க முடியும். தரித்திர காலத்தில், பெண் காட்டும் சகிப்புத் தன்மையைப் போல, ஆண் ஒருநாளும் காண்பிக்க முடியாது.

மேலும் நீண்ட காலமாக, ஆணுக்கு அடிமை பெண். இந்த நாட்டில் அடிமையை ஏளனம் செய்வதில் என்ன லாபம்? இங்கிலீஷ்காரர்கள் இந்தியர்களைக் கேவலமாக மதிப்பதைப் போலிருக்கும். ஆண்கள் பெண்களை, தாங்களறியாமலே, தங்கள் முரட்டுக் குணங்களாலும் செயல்களாலும், அடிமைகளாக்கி விட்டார்கள். மேன்மேலும் பெண்களைக் கேவலமாகப் பேசுவது, முட்டாளின் தன்மையாகும்.

நான் என் நண்பர்களிடம் சொல்லுவதுண்டு. ஆணுக்கும் பெண்ணுக்கும் எல்லா அறிவுகளும் அனுபவங்களும் பொதுவாகும். ஆனால் ஒரே ஒரு அனுபவம் ஆணுக்குக் கிடையாது. அதுதான் கர்ப்ப அனுபவமாகும். எனவே, பெண் ஆணைக் காட்டிலும் ஒரு வகையில் உயர்ந்தவள்; அது இயற்கையிலேயே, பெண்ணுக்கு ஏற்பட்ட லாபமாகும். இந்தச் சிறு லாபத்தைப் பொறுக்க முடியாமல் ஆண் பெண்ணை அடிமையாக்கினனோ என்று சந்தேகிக்கும்படியாக ஆண் காரியம் செய்கிறான்.

பெண் பொருளைச் சேமித்து வைக்கிறாள்; குழந்தைகளை வளர்க்கிறாள், குழந்தைகளை உலகத்துக்குக் கொண்டு வருகிறாள்; பெண், ஸன்னியாசத்தில் ஆசை வைத்து, குடும்பத்தைக் காலி செய்து விடுவதில்லை. பெண், கிடைத்ததைக் கொண்டு, ஜீவனம் நடத்துகிறாள். பஞ்சத்தின் கொடுமையையும் புருஷனுடைய கொடுமையையும் ஒருங்கே பொறுத்துக்கொள்கிறாள். ஆனால், வாய்மட்டும் கொஞ்சம் அதிகம். இதற்காக, பெண்களைப் பொதுவாக ஏசி ஏளனம் செய்வது ரொம்ப தப்பிதம்.

எனக்குத் தெரிந்த வரையிலும், நாம் பெண்ணை இழிவாகப் பேசி, இழிவாக நடத்தினதினாலேதான், நாம் எல்லோரும் இந்தக் கேவலமான அடிமைத்தனத்துக்கு ஆளானோம் என்பது என் முடிவான தீர்மானம். பெண் ஆணுக்குத் துணைவி என்ற உதவி போய்விட்டது. பெண்கள் ஆணுக்குப் பெருஞ் சுமையாகிவிட்டார்கள். அவர்கள் பொறுப்பைப் பங்கு போட்டு, வேலை செய்வதுதான் புத்திசாலித்தனம். எல்லாப் பொறுப்புகளையும் அவைகளைத் தழுவிய

அதிகாரங்களையும் ஆணே ஏற்று, சுகித்து இருக்க வேண்டும் என்ற எண்ணம் ஒன்றே நம்மை அடிமைகளாகச் செய்துவிட்டது.

பொறுப்பு ஒன்றே மனிதர்கள் வளர்வதற்குத் தேவையான சாதனம். கண்டபடி திட்டுகிற ஒருவனிடம் பொறுப்புக் கொடுத்துப் பார்த்தால், அவன் விரைவில் மாறிவிடுவான். பொறுப்புத்தான், மனிதர்களின் மேலோட்டமான தன்மையை மாற்றி, அவர்களைச் சக்தி படைத்தவர்களாய்ச் செய்வதாகும். இந்தப் பொறுப்பை, நாம் பெண்களிடமிருந்து பறிமுதல் செய்தது தவறு. இந்தத் தவறுக்குத் தவருய், இங்கிலீஷ்காரர்கள் நமக்குப் பொறுப்பில்லாமலடித்துவிட்டார்கள்.

நம்முடைய அடிமை நிலையில், இதுவரையிலும் பெண்கள் என்ன பாடுபட்டிருப்பார்கள் என்பதை உணர்வதற்கு நமக்கு சந்தர்ப்பம் இப்போது ஏற்பட்டிருக்கிறது. இப்பொழுதும் அந்த சந்தர்ப்பத்தை நழுவ விட்டுவிட்டு, 'பெண்புத்தி பின்புத்தி' என்று அவலமாய்ச் சொல்லிக்கொண்டு போதல் தவறு. பெண் ஆணுக்கு 'சரி, நிகர், சமானம்' என்பதை உணரவேண்டும்.



## 22. ஊர்கூடி செக்குத் தள்ளுதல்

ஊர்கூடி செக்குத் தள்ள முடியுமா என்று கேட்கிறார்கள். ஊர் கூடின பிறகுதான், செக்குத் தள்ள வேண்டும் என்று காத்திருப்பவர்களின் காரியம் கைகூடாது. புரோகிதருக்காக அமாவாசையும் காத்திருப்பதில்லை. 'ஊர்கூடி செக்குத் தள்ளவா?' என்பது அருமையான பழமொழி.

மனித வருக்கத்துக்கு நோயும் எமனும் விரோதிகள். மனித வருக்கம் ஒற்றுமைப்பட்டு, ஒன்று சேர்ந்த பிறகுதான், நோயையும் எமனையும் ஒழிக்கப் பாடுபடவேண்டும் என்று சொல்லுவது அறிவின்மையாகும். நோய்தானே எமன், எமனைத் தனித்துப் பேசவேண்டுமா என்று கேட்கலாம்.

புலி அடித்துச் சாவதும், கிலி பிடித்துச் சாவதும் ஒன்று? புலியும் கிலியும் ஒன்றுமா? நோய் என்பது புலியைப் போல. கிலிதான் எமன். நேரான சமயத்தில், தக்க சந்தர்ப்பத்தில், புலியை அழிக்கவேண்டும்; கிலியை வெருட்டித் துரத்தவேண்டும். இதைப் போலவே, செக்குத் தள்ளுவதற்காக ஊர் கூட்டுகிற வேலை.

ஒன்றிரண்டு பேர்களால் செய்ய சாத்தியப் படாத சங்கதியை, செக்கு என்று பெயர் கொடுத்து அழைக்கிறோம். செக்குத் தள்ளுவதற்கு, செய்ய வேண்டிய முதற் காரியங்கள் என்ன? செக்குத் தள்ளுவதாக, இரண்டொருவர் கூப்பாடு போட்டுக் கொண்டு, செக்கைத் தள்ள முயன்றால், மற்றவர்கள் சேர்ந்துகொள்வார்கள்.

இரண்டொருவர் தனியாகச் செக்குத் தள்ளும் விந்தையைப் பார்த்து ஏளனம் செய்து, மற்றும் சிலர் கைகொடுத்து ஒத்தாசை செய்வார்கள். சிலர் அநுதாபத்தினுல் ஒத்தாசை செய்ய முன்வருவார்கள். வேறு சிலர், பலர் செய்கிற வேலையில், இயற்கையாகவே கலந்துகொள்வார்கள். செக்கு எந்த இடத்துக்குப் போகவேண்டுமோ, அந்த இடத்துக்குப் போய்ச் சேர்ந்துவிடும். இதுதான் செக்குத் தள்ளுகிற வேலையின் முறையும் ரகசியமும்.

இந்தப் பழமொழியின் உட்கருத்தை அறியாமல், ஊர்கூடித்தான் செக்குத் தள்ளவேண்டும், தள்ள முடியும் என்று மனப் பிராந்தி கொண்டு வாழ்கிருர்கள். இந்தியர்களுக்குள் ஒற்றுமை ஏற்பட்டால், சுயராஜ்யம் தானுக வரும், இங்கிலீஷ்காரர்கள் நிச்சயமாய்க் கொடுத்துவிடுவார்கள் என்று இர்வின் பிரபு (இப்பொழுது அவர் ஹாலிபாக்ஸ் பிரபு ஆகிவிட்டார்) சொன்னுல், அதை ஆராயாமல், 'ஆமாம்' என்று எல்லோரும் பல்லவி பாடுகிருர்கள்.

இது வெறுங் கதை. செக்குத் தள்ளுவதற்கு ஊரிலே யிருக்கும் எல்லோரும் தேவையில்லை. குழந்தைகள், வயோதிகர்கள் தேவையில்லை. நோயாளிகள் தேவையில்லை. உடம்பில் வலுவில்லாதவர்கள் தேவையில்லை. ஸ்திரீகள் அநேகமாய்த் தேவையில்லை. இவர்களை நீக்கிப் பார்த்தால், ஊரிலே மிஞ்சுபவர்கள் யார்? தேக வலுவும் தைரியமு முள்ளவர்கள்தான் மிஞ்சுவார்கள். இவர்களிலேகூட, எல்லோரும் தேவையில்லை. செக்கு ஊரிலுள்ள எத்தனை பேர்களால் தள்ளப்படுகிறது என்ற விவரம் இப்பொழுதேனும் தெரிகிறதா?

சின்னது பெரிதில் அடக்கம். குடும்பங்கள் வகுப்பில் அடக்கம். புத்திமான்கள் மேதாவிகளுக்குள் அடக்கம். சிறிய உணர்ச்சி கொண்டவர்கள், பெரிய உணர்ச்சி கொண்டவர்களுக்குள் அடக்கம். அநுபவம் இல்லாதவர்கள், அநுபவசாலிகளின் சொற்களைக் கேட்டு நடப்பார்கள். இது இயற்கை. எனவே, பொறுப்பு யார் தலையிலே அதிகமாகச் சுமந்து நிற்கிறது? தங்களைப் பெரியவர்கள், உயர்ந்தவர்கள் என்று யார் யார் எண்ணிக்கொண்டிருக்கிறார்களோ, அவர்கள்தான் அதிகமான பொறுப்பை ஏற்க வேண்டும்.

கடலில் அலை ஓய்ந்த பின்னர், ஸ்நானம் செய்வது என்பது எப்படி முடியாத காரியமோ, அவ்வளவு முடியாத காரியம், இந்தியா முழுதும் ஒற்றுமைப்பட்ட பிறகுதான் சுயராஜ்யம் அடையவேண்டும் என்பது. கலியாணத்தில் அனுபவமில்லாதவர்கள் கலியாணம் செய்துகொள்ளக் கூடாது என்று யாரேனும் சொன்னால், அது கனிந்த அசட்டுத்தனம், அல்லது அயோக்கியத்தனம் என்று சொல்ல, நம்மில் எவரும் பின்வாங்குவார்களா?

போலண்டு தேசத்தை, ஜர்மனி, ருஷியா, ஆஸ்திரியா மூன்றும் சேர்ந்து, நூற்றைம்பது வருஷங்களுக்கு முன்னர் பங்கு போட்டுக்கொண்டன. போலண்டு மக்கள் அந்நியர்களின் ஆளுகையின் கீழ் இருக்கும் வரையில், அவர்கள் ஒன்றுசேர முடியவேயில்லை. போலண்டின் விடுதலைக்காகப் பாடுபட்ட பலர் போலண்டு தேசத்தை விட்டு அகலவேண்டியிருந்தது. இந்த ஒரு சிலரின் மூலமாகத்தான், சென்ற ஐரோப்பியப் போர்க் காலத்தில், போலண்டு

விடுதலை பெற்றது. அதுவும் ஜயித்த வல்லரசுகளின் தயவினாலும், ஜர்மனியின் பேரில் அவைகளுக்கிருந்த பொறாமையாலும்.

'போலண்டு நாட்டாரே! நீங்கள் ஒற்றுமைப் பட்டு, ஒருமுகமாக, உங்களுக்கு வேண்டுவனவற்றைக் கேளுங்கள். நாங்கள் கொடுக்கத் தயாரா யிருக்கிறோம். உங்களுக்குள் சக்தியும் ஒற்றுமையும் இல்லாதது உங்கள் குறை. அதற்கு நாங்கள் என்ன செய்வோம்?' என்று ஜர்மனி, ஆஸ்திரியா, ருஷியா சொன்னால், அதில் எவ்வளவு உண்மையைக் காண முடியும்?

இந்தியாவிலே ஒற்றுமை இல்லை என்பது உண்மை. ஒற்றுமை இருப்பின், நமது நாடு அந்நியர் ஆட்சியின் கீழ் இருக்காதல்லவா? இதைப் பெரிது படுத்திக் கூறுகிறார்கள் இங்கிலீஷ் ராஜதந்திரிகளும் அவர்களுடைய சகாக்களான இந்திய ராஜபக்தர்களும். ஒற்றுமைக் குறையை அழுத்திக் கூறுவது ஆளுவோர்களின் வழக்கம். அதை மற்றவர்கள் ஆமோதிப்பதுதான் ஆச்சரியமா யிருக்கிறது.

ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் ஒற்றுமை இல்லை என்கிறார்கள். இங்கிலாந்தில் மேரி ராணியார், எலிஸபெத் ராணியார் காலத்தில், ரோமன் கத்தோலிக் கிறிஸ்தவர்களும் பிராடஸ்டண்டு கிறிஸ்தவர்களும் ஒருவரை ஒருவர் பொசுக்கிக்கொண்டு, கொன்றுகொள்ளவில்லையா? ரோமன் கத்தோலிக் கிறிஸ்தவர்கள் தலையெடுக்க முடியாமல், பின்னர் பிராடஸ்டண்டு கிறிஸ்தவர்கள் சட்ட திட்டங்கள் ஏற்படுத்திக்கொள்ளவில்லையா? என்றாலும், சுய ராஜ்யம் வந்தால், முஸ்லிம்களை ஹிந்துக்கள் நசுக்கி

விடுவார்கள் என்று நியாயம் பேசுவதைப் போல, மேற்சொன்ன பரம்பரைகளைக் கொண்ட இங்கிலீஷ் காரர்கள் சொல்லுகிறார்கள். இதற்கு மற்றவர்கள் 'ஆமாம்' போடுகிறார்கள்.

சுமார் எண்பது தொண்ணூறு வருஷங்களுக்கு முன் கூட, ரோமன் கத்தோலிக் இனத்தைச் சேர்ந்த இங்கிலீஷ்காரர்களும், பாரம்பர்யமாய் இங்கிலாந்தில் வாழ்ந்துவந்த இங்கிலீஷ் யூதர்களும், அரசியலில் பெரிய பதவி வகிக்க முடியாமலிருந்தது. இது ரொம்ப நியாயமான சரித்திரக் கொள்கையோ என்று இந்தியன் எவனும் இப்பொழுது இங்கிலீஷ்காரனைப் பார்த்துக் கேட்க முடிகிறதா?

எந்த நாட்டிலும் தேச முற்போக்குக்காகவும் தேச விடுதலைக்காகவும் உழைப்பவர்கள் சிறுபான்மை யோர்கள். அவர்கள் எவ்வளவுக் கெவ்வளவு தியாகம் செய்யத் தயாரா யிருக்கிறார்களோ, அதைப் பொறுத்து நிற்கிறது நாட்டின் ஒற்றுமை. அயர் லாந்தின் சரித்திரத்தை இதற்கு உதாரணமாகச் சொல்லலாம். ஒரு மாக்ஸ்வீனி உண்ணு விரதம் பூண்டு, இங்கிலீஷ் சிறையில் மாண்டார். அயர்லாந் தின் ஒற்றுமை வலுவடைந்தது.

ஊர் கூடின பிறகுதான் செக்குத் தள்ள முடியும் என்ற எண்ணத்தை மறந்து, செக்குத் தள்ளுவதற்கு எப்படி ஊரைக் கூட்டவேண்டும் என்ற யோஜனை யில், நம்மவர் இறங்கவேண்டும். ஊர் கூட்டும் ரக சியம் மேலே கூறப்பட்டது. சரித்திரத்தை ஆவ லோடு படித்தாலும், அந்த ரகசியம் தெரியும். செக் கைத் தள்ளி, எண்ணெய் ஆட்ட நம்மவர்கள் எண் ணங் கொண்டாலொழிய, தற்போது எண்ணெய்

ஆட்டுகிறவர்களின் மூலமாய், இந்தியர்களுக்குத் துளி எண்ணெயும் மிச்சம் ஏற்படாது.

நம்ம செக்கை நாம் தள்ளாமல், யார் செய்வது? பிறர் தள்ளி, அதை ஓட்டினால், அதன் லாபமும் பயனும் அவர்களைத்தானே சேரும்! இதைத் தெரிந்து கொள்ளாமல், செக்கை ஆட்டுபவர்களிடம், தலைக்குக் கொஞ்சம் எண்ணெய் கேட்கும் பிச்சைத் தொழிலை, யார் மேற்கொண்டாலும், அது வெறுக்கத் தக்கதாகும். துளி எண்ணெயைப் பிச்சை வாங்குபவர்கள், மற்றவர்களின் தலைகள் அவரைப் பந்தலைப் போல இருக்கின்றன என்பதை மறக்கலாமா? இன்று செய்ததன் பயனை, இன்றைக்கே அநுபவிக்க முடியாவிடினும், நாளைக்கோ, நாளை மறுநாளோ அநுபவிக்கத்தான் வேண்டும். பிச்சைத் தொழில், என்றைக்கும் கேவலமான தொழில். லோகத்தில், கௌரவப் பிச்சை, பயமுறுத்திப் பிச்சை என்பது இருக்கலாம். அவைகளும் கேவலமானவைதான்.



## 23. நவாப் நடை

வங்காளிகள் சிறு கதை யொன்று சொல்லு வார்கள். கல்கத்தாவில் ஒரு நவாப் இருந்தாராம். அவர் 'தர்பார் நவாப்' அல்ல. அவர் 'பிஞ்சின்' பெருமையில் வாழ்ந்து வந்தார். தினசரி மாலையில் அவர் கால் ஆறுவதற்காக பேடா போவது வழக்கம். அந்த வழக்கத்தின்படி, ஒரு நாள் மாலையில் நவாப் அவர்கள் கல்கத்தா வீதி யொன்றில் பவனி வந்து கொண்டிருந்தார். இந்த சமயத்தில் அவரது திரு மாளிகை தீப்பிடித்துக்கொண்டது. செய்தியை எஜமானனுக்கு அறிவிக்க, வேலைக்காரன் விரைந் தோடி வந்தான். 'எஜமானே, அரண்மனையில் தீ!' என்றான். நவாப் தலையை அசைத்தார்.

சிறிது தூரம் நவாப் போயிருப்பார். மீண்டும் வேலைக்காரன் வியர்க்க ஓடி வந்தான். 'ஐயோ, தீ! எல்லாம் சாம்பராய்ப் போய்விடும் போலிருக்கிறது!' என்றான். முன்னைவிடக் கம்பீரமாய் நவாப் தலையை அசைத்தார். வேலைக்காரனுக்கு அங்கே நின்று எஜமானிடம் தர்க்கம் செய்ய நடுக்கம். மீண்டும் அரண்மனைக்கு ஓடினான்; மீண்டும் திரும்பி ஓடி வந்தான். 'எஜமானே, எல்லாம் அழிந்து தொலைந்து போய்விட்டது!' எனக் கதறினான். 'அடே, அடி முட்டாளே! ஏதோ இரண்டு சுள்ளிகள் எரிந்து விட்டதற்காக, நான் என் மூதாதைகளின் நடையை அலட்சியம் செய்து தள்ளிவிட்டு, அவசரப்பட முடி யுமா? ஒரு நாளும் முடியாது!' என்று நவாப் அவர்கள் திருவாய் மலர்ந்தருளினார். இது நடந்த கதை என்று

வங்காளிகள் சொல்லுகிருர்கள். இது பொய்யாக இருக்க முடியாது. ஏன்?

இந்த நவாப் நடை நாடெங்கும் பரவியிருக்கிறது. அது நுழையாத பொருள் இல்லை; நுழையாத சந்தர்ப்பமில்லை; நுழையாத தத்துவமில்லை; நுழையாத பேச்சே இல்லை. நமது நாடு கேவலமான நிலையிலிருக்கிறதே என்று எவரேனும் சொல்லத் துணிந்தால், 'நவாப் நடை'யில் உடனே பதில் வருகிறது. 'கோபுரத்தை பொம்மைதான் தாங்குகிறதோ? எம்பெருமான் இருக்கிருன், பார்த்துக் கொள்வான்' என்று நவாப் நடைத் தத்துவம் பேசுகிருர் ஒரு கிழவர். 'ராமன் ஆண்டாலென்ன, ராவணன் ஆண்டாலென்ன?' என்கிருள் ஒரு கூனிக் கிழவி. சீதையை ராவணன் தூக்கிக்கொண்டு போனுன் என்று ராமாயணக் கதையைச் சொல்லும் பொழுதும், கேட்கும்பொழுதும், அந்தக் கூனிக் கிழவிக்குக் கண்ணில் தண்ணீர் வராம லிருப்பதில்லை. இது 'நவாப் நடை' மோஸ்தர் அழுகை. அதாவது சாரத்தை மறந்துபோய், சாயலைப் படம் பிடித்து நெஞ்சு நோவதாகும்.

'ஒரு நாட்டைத் தனித்து நேசிக்கும் பக்தி, மிகுதியும் குறுகிய நோக்கம் கொண்டது. அத்தகைய பக்தி உலக சகோதரத்துவத்தை ரொம்ப பாதிக்கும்' என்று ஒரு இளைஞன் சரமாரியாக வாண வரிசை விடுகிருன். 'ஆமாம்' என்று ஒத்து ஊதுகிருள் 'பவுடர்' முக சுந்தரியும். இவைகளும் 'நவாப் நடை' தோரணையில் சேர்த்திதான். தியாகமில்லாத தேச பக்தி வீண் என்ருல், 'அநாகரிக காலத்தில் தியாகம் வேண்டும் என்பது ஒருவாறு பொருத்தமா யிருக்க

லாம்; நாகரிக காலத்திலே, சொல் நய வாதத்தின் மூலமாயே காரியத்தை சாதித்துவிடலாம்' என்று ஒரேயடியாய்ச் சாதிக்கிறார் கனம் சீனிவாச சாஸ்திரியார். இதுவும் 'நவாப் நடை'தான்.

'சிறிய சிறிய நாடுகள் எல்லாம் செழித்து, சுதந்திரத்துடன் இருக்கின்றனவே; நம் நாட்டுக்கு மட்டும் ஏன் இந்தக் கதி?' என்றால், உலகம் பலவிதம் என்று சிலர் வேதாந்தம் பேசுகிறார்கள். உலகம் பலவிதம் என்ற சூத்திரத்துக்கு, இந்தியாதான் இலக்கியமாக இருக்கவேண்டுமா? இவ்வாறு கேட்டால், 'பிறர் கெட்டுப்போவதைக் காட்டிலும் நாம் கெடுவது ஒரு வித தியாகமல்லவா?' என்று சாமர்த்திய வாதம் செய்துவிட்டது போல் சிலர் கொக்கரிக்கிறார்கள். இதுவும் நவாப் நடை பேச்சுத்தான்.

நவாப் தமது மூதாதைகளைப் பின்பற்றி நடந்ததில் யாருக்குமே ஆட்சேபம் கிடையாது. மூதாதைகள் ராஜ்யம் ஆண்டார்களே என்றால், அந்தச் சமயம் தலைகுனியக் கூடாது, சொறியவும் கூடாது. கொள்ளுக்கு வாயையும் கடிவாளத்துக்கு வாலையும் காட்டும் குதிரையை நாம் வாங்குவோமா? அதை வாங்காதது மல்லாமல், 'ஏன் தண்டத் தீனி போட்டு வளர்க்கிறாய்?' என்றும் கேட்போம்.

நவாப் நடையை இந்தியர்களுக்குப் பெரிதும் பழக்கிக் கொடுத்த ஆண்டவனுக்கு ஒரு விண்ணப்பம். 'இந்த வீணையை ஏன் படைத்தாய்?' என்று யாரோ ஒருவர் பாடியிருக்கிறார். நாம் வேறு சுருதியில் அமைப்போம்: 'கடவுளே! இந்த நவாப் நடைக்கு அற்ப ஆயுள் அளிக்கும்படிக்கு சித்தம் கனிவாயாக!'

## 24. வாழ்வு பெருக்கும் மதி

வீட்டுக்கு ஆதாரம் அஸ்திவாரம். வாழ்வுக்கு ஆதாரம் சக்தி. 'ஆதாரம் சக்தி என்றே அருமறைகள் ஓதும்.' எனவே, சக்தியற்ற வாழ்வு எதற்காக? கைக் குத்துச் சண்டை வலிமையா? பாரதியார் சக்தியுடைய தோற்றத்தின் வடிவங்களையும் உயிர் நாடிகளையும் விதம் விதமாக வர்ணிக்கிறார். காலமே தூக்கம் கலைந்து எழுந்ததும், தியானம் செய்யலாம் போல, அவ்வளவு அழகாக, சக்தியை வரைந்திருக்கிறார் :

துன்ப மில்லாத நிலையே சக்தி
தூக்க மிலாக்கண் விழிப்பே சக்தி
அன்பு கனிந்த கனிவே சக்தி
ஆண்மை நிறைந்த நிறைவே சக்தி
இன்பம் முதிர்ந்த முதிர்வே சக்தி
எண்ணத்து இருக்கும் எரியே சக்தி
முன்பு நிற்கின்ற தொழிலே சக்தி
முக்தி நிலையின் முடிவே சக்தி.

மேலே சொல்லப்பட்ட நிலைகளில், ஒரு நிலையேனும் தமிழர்களின் உள்ளத்தில் நிலைத்திருக்குமாயின், வியக்கத் தக்க பயன்களை வாழ்விலே காண முடியாதா? சொல்லிலே வெறுப்பும், சோம்பலிலே விருப்பும் காண்பிக்கும் தமிழர்களுக்குப் பாரதியார் ஏது உரைக்கின்றார்?

சோம்பர் கெடுக்கும் துணிவே சக்தி
சொல்லில் விளங்கும் சுடரே சக்தி
தீம்பழம் தன்னில் சுவையே சக்தி
தெய்வத்தை எண்ணும் நினைவே சக்தி

பாம்பை யடிக்கும் படையே சக்தி
பாட்டினில் வந்த கனியே சக்தி
சாம்பலைப் பூசி மலைமிசை வாழும்
சங்கரன் அன்புத் தழலே சக்தி.

பரமசிவன் திரிபுரம் எரித்த சிரிப்பை அன்புத் தழல் என்று பாரதியார் சித்திரித்திருப்பதைச் சிந்தனையில் ஆழ்த்தி, கற்பனை செய்து பாருங்கள். ஹிந்துக்களின், இந்தியர்களின் சாரமான தத்துவம் அந்தச் சித்திரத்தில் படர்ந்து கிடக்கின்றது. அந்த சாரத்தை மறைத்துக்கொண்டு கிடக்கும் சக்கையை - தோலியைத்தான் - நாம் எல்லோரும் நமது தினசரித் தத்துவப் பேச்சில் தூவி வருகிறோம். பாரதியாரின் 'அன்புத் தழல்' நமது சக்கைப் பேச்சை சக்திப் பேச்சாக என்று மாற்றப் போகின்றதோ?

வாழ்வு பெருக்கும் மதியே சக்தி
மாநிலம் காக்கும் வலியே சக்தி
தாழ்வு தடுக்கும் சதிரே சக்தி
சஞ்சலம் நீக்கும் தவமே சக்தி
வீழ்வு தடுக்கும் விறலே சக்தி
விண்ணை யளக்கும் விறலே சக்தி
ஊழ்வினை நீக்கும் உயர்வே சக்தி
உள்ளத் தொளிரும் விளக்கே சக்தி.

இந்தப் பாட்டைப் படித்து ஆவேசம் கொள்ளாத தமிழன் இருக்க முடியாது. பிர்ரஸ் என்று ஒரு மன்னன் இருந்தான். அவன் கிரேக்கர்களுக்கு அரசன். ஸிஸிலி என்ற தீவை ஆண்டவன். மகா பராக்கிரமசாலி. நூதனமாக இரண்டு சாதுர்யங்களை அவன் கண்டுபிடித்தான். போருக்குத் தயாராக இருக்கும் படையை அணிவகுப்பதில் அவன் சாதுர்ய

மான யுக்தியைக் கண்டுபிடித்தான். மேனுட்டு யுத்த சாஸ்திரத்திலே அதற்கு 'பிர்ரஸ் அரண்' என்று பெயர். அதே பிர்ரஸ் நாட்டியத்தில் ஒரு நூதனத்தைக் கண்டான். அதற்கு 'பிர்ரஸ் நடனம்' என்று பெயர். கிரேக்கர்கள் சுதந்திரமிழந்து, அடிமைகளாக வருந்துங் காலையில், பைரன் என்ற ஆங்கிலக் கவி கிரேக்கர்களின் பரிதாப நிலையில் இரக்கங் கொண்டு, 'ஏ கிரேக்கர்களே! உங்களுடைய போர் வீரர் பிர்ரஸ் போர்த் தொழிலிலும் நாட்டியத்திலும் நூதனங்களைக் கண்டாரே! உங்களிடம் அந்த நாட்டியம் மட்டும் இருக்கின்றதே! ஆனுல் பிர்ரஸ் அரண் எங்கே போயிற்று? அடிமைகளே! அது என்னவாயிற்று?' என்று ஆத்திரத்துடன் கேட்கிருர்.

தமிழர்களை பைரன் வேறு வகையில் கேட்கலாம். 'ஏ, தமிழர்களே! தாளம் தழுவிய அல்லது தள்ளிய சதிர் ஒன்றை மட்டும் விடாது பிடித்துக் கொண்டு தொங்குகின்றீர்களே, உங்களுடைய "தாழ்வு தடுக்கும் சதிர்" எங்கே போயிற்று?' என்று பைரன் கேட்டால், தமிழர்கள் என்ன பதில் சொல்லுவார்கள்? கையைப் பிசையும் கதி நமக்கு வரலாமா? வாழ்வு பெருக்கும் மதி எங்கே? மாநிலம் காக்கும் வலி எங்கே? தாழ்வு தடுக்கும் சதிர் எங்கே? சஞ்சலம் நீக்கும் தவம் எங்கே? வீழ்வு தடுக்கும் விறல் எங்கே? எங்கே? எங்கே? எதிரொலியேனும் கேட்கின்றதா?

## 25. தமிழில் நாடகப் பஞ்சம்

வங்காளி பாஷைக்குச் சரியான இலக்கணம் அமைந்து சுமார் எண்பது வருஷங்கள் இருக்கலாம். (வங்காளி பாஷைக்கு இலக்கணம் அமைத்துக் கொடுத்தவர் பண்டித ஈசுவர சந்திர வித்யாஸாகர்.) எனவே, வங்காளி பாஷை புதுப் பணக்காரனைப் போல் இருந்தாலும், வங்காளி பாஷையில் நூற்றுக் கணக்கான அழகான நாடகங்கள் இருக்கின்றன. கும்பமுனியான அகஸ்தியர் வாழ்ந்த தமிழ் நாட்டிலே நல்ல நாடகமே இல்லை. நேற்று வந்தவன் தாலிகட்ட, காத்திருந்தவன் ஏமாந்த கதையாக அல்லவா போய் விட்டது?

தமிழனிடத்தில் எனக்கு மிகுந்த பயம். வாழ்வுக்கு நூதனமாக ஒன்று அவசியமாகத் தேவை என்று நீங்கள் சொன்னால், 'அட பாவமே! நீங்கள் கேட்கிற சாமான் இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்னாலேயே பிடித்து இருக்கிறதே! அது உங்களுக்குத் தெரியவில்லை. நாடகந்தானே வேண்டும்! நல்லது. சிலப்பதிகாரம் நாடகந்தான். மணிமேகலை நாடகந்தான். கம்ப ராமாயணம் நாடகந்தான். நள வெண்பா? அதுகூட நாடகந்தான். அவைகளை நாடகக் கண்ணால் பார்க்கவேண்டும்' என்று தமிழ் அறிஞர்கள்கூடச் சிலர் எனக்கு உபதேசம் செய்திருக்கிறார்கள். 'சற்று முன் பிறந்த கழுதைக் குட்டியைக்கூட, கற்பனைக் கண்ணால், நாடகமாகப் பார்க்க முடியும்' என்று இவர்களிடம் சொன்னாலோ?— வம்பு வளரும்; வாய் வலிக்கும்.

டிக்கட் இல்லாத தெருக் கூத்தை, சூரியன் உதய மாகி நெடு நேரம் வரைக்கும் அலுக்காமல் பல நூற் ருண்டுகளாகப் பார்த்து வந்தவர்களின் சந்ததிகள் நாம். 'மத்தளத் தோசை கிணுக்கிண்ணு' என்று கட்டியக்காரன் கூத்தில் செய்த விகடத்தைக் கேட்டு, பிரம்மானந்த மடைவார்கள் நமது மூதாதைகள். விகடம் இன்னதென்று தெரிந்ததோ? மத்தளத்து ஓசை, மத்தளத் தோசை,—இது விகடம். மத்தளத் தோசையை உண்டு வளர்ந்ததனுல், உருப்படியான நாடகத்தில் நமது மூதாதைகளுக்கு நாட்டம் செல்லவில்லை போலிருக்கிறது.

கபட நாடக சூத்ரதாரி என்று கிருஷ்ண பகவா னுக்கு ஒரு செல்லப் பெயர் உண்டு. கிருஷ்ணனிட மிருந்து, நமது நாட்டார் கபட நாடகத்தை மட்டுந் தான் கற்றுக்கொண்டதாகக் காணப்படுகிறது. நமக்கு வெறும் நாடகம் போதாதா? கபட நாடகம் எதற் காக? வங்காள மஞ்சளில் ஆசைவைத்து, சாதா மஞ்ச ளையும் இழந்த ஆசைக்காரப் பெண்ணைப் போல, நம் முடைய கதி ஆகிவிட்டது. 'ஓடு மீன் ஓட உருமீன் வருமளவும் வாடி யிருக்குமாம் கொக்கு!' மயான வைராக்கியத்தில் மனமில்லாமல் புகுந்துகொண்டு, மேற் சொன்ன கொக்கைப் போல, நாம் வாடி யிருப் போமானுல், நமக்குப் பெரு வாழ்வு எங்கிருந்து தோன்றும்? பெரு வாழ்வு உணர்ச்சி நமது ஜன சமூ கத்தினிடையே பரவிப் பெருகாவிடின், நமது நாட் டில் நல்ல நாடகம் தோன்றவே தோன்ருது.

நாடக மேடையில் நடிப்பு தமிழ் நாட்டில் எப் படி யிருக்கிறது என்பதைப் பற்றிப் பின்னுல் பேசிக் கொள்வோம். இப்பொழுது எழுத்தில் நாடகத்தைப்

பற்றி விசாரணை. அருணாசலக் கவிராயர் எழுதிய ராம நாடகம், குறவஞ்சி நாடகம், மார்க்கண்ட நாடகம், அரிச்சந்திர நாடகம், பிரகலாத சரித்திரம், கம்ஸ வதம் — இவைகள் நமது மூதாதைகள் பார்த்து அநுபவித்து வந்த நாடகங்கள். இவைகளில் இரண்டொன்றைத் தவிர, எல்லா நாடகங்களும் எழுத்தில் இருக்கவில்லை. சில எழுத்தில் இருந்தாலும், அவைகள் பாட்டுமயம், சங்கீதமயம். பேசுகிற பாஷையில் எல்லோருக்கும் விளங்குகிற வசன நடையில் இருந்தால், தமிழ் இலக்கியத்தின் தனிப் பெருமை போய்விடும் என்று பெரியவர்கள் எண்ணினர்களோ, என்னவோ? பெரியவர்கள் பிறந்தார்கள், இருந்தார்கள், இறந்தார்கள். இந்த மூன்று வார்த்தைகளுக்குள், சுருக்கமாகவும் அழகாகவும், கவலை சிறிதுமில்லாமல் தங்கள் வாழ்வை அமைத்துக்கொண்ட பெரியார்களைப்பற்றி, யார் என்ன பேச முடியும்?



## 26. கூத்து மாறி நாடகமானது

ஒரு பொருள் இல்லாததற்குக் காரணம் அது இல்லாத காரணம்தான். அதைப் பற்றி வெகு நுட்ப மாய்ப் பேசுவதும் பெரும்பாலும் முடியாத காரியம். நல்ல நாடகம் எழுத்தில் இல்லையே என்று வருந்து வதும் பயனற்ற காரியம். எழுத்தில் இல்லாத, ஆனால் வழக்கத்தில் மட்டும் இருந்துவந்த நாடகங்கள் செவ்வனே நடத்தப்பட்டு வருகின்றனவா? அதுவும் சுகமில்லை.

ஆகாய வெளியின் கீழ், தெருக் கூத்தாகத் திகழ்ந் தது, கொட்டகை அடைப்புக்குள், சீன்கள் சகித மாக, நாடக உருவம் படைத்தது. யாராலே தெரி யுமா? இது, அசல் தமிழனது முயற்சி அல்ல. தஞ்சா வூரிலே கோவிந்தசாமி ராவ் என்ற மராட்டிய கன வான் இருந்தார். அவர் போலீஸ் இன்ஸ்பெக்டர் வேலை பார்த்துவந்தார். பென்ஷன் வாங்கிக்கொண் டதும், அவருக்கு நாடகப் பித்துப் பிடித்தது. அவ ருடைய தனிப் பித்து, தமிழ் நாட்டின் பொதுப் பித்தாக இப்பொழுது விளங்குகின்றது. சுந்தராம் பாள் நடிக்கும் நாடகங்களில் டிக்கட் கிராக்கியாகி, கிடைப்பது அருமையாகப் போய்க்கொண் டிருந்தது கோவிந்தசாமி ராவின் முயற்சியின் பயனாகும்.

பழைய நாடகங்களில், துவக்கத்தில் சூத்ரதார், விகடன் வந்து பேசிய பின்னர், மோகன ராஜா-மோகன ராணி வந்து, கிஞ்சின் ஆட்டம் ஆடி, சிருங் கார ரசம் ததும்பி வழியும் பாட்டுகளைப் பாடி

மறைவது என்ற சபைக் கட்டு வேலையைக் கண்டு பிடித்தவர் கோவிந்தசாமி ராவ். சீன்கள், பாட்டு, பேச்சு முதலியவைகளும் அவருடைய சரக்குகளே. கோவிந்தசாமி ராவ் அவர்களின் காலத்தில், அவராலும் மற்றவர்களாலும் தயார் செய்யப்பட்ட ஆக்டர்களில் சிறந்து விளங்கியவர்கள் சுந்தர ராவ், ரங்கஸ்வாமி அய்யங்கார், கலியாணராமய்யர், கோவிந்தசாமி பிள்ளை. முதல் மூன்று பேர்களும் ஸ்திரீ வேஷம் போட்டுக்கொள்பவர்கள்.

நாடகம் எழுத்தில் இருந்து, ஒரு கிரமமான அளவுக்குள் இருந்தால்தான், நாடக பாத்திரங்களின் சம்பாஷணைக்கு ஓர் எல்லை உண்டு. அத்தகைய எல்லையில்லாமற் போகவே சமயோசிதமாய்ப் பேசும், நடிக்கும் வழக்கத்துக்குத் தேவை ஏற்பட்டது. இந்த சமயோசித சம்பாஷணையில் தேர்ந்தவர்கள் சுந்தர ராவும் கோவிந்தசாமி பிள்ளையும். ஓரடிப் பதம் அந்தக் காலத்தில் ரொம்ப மயக்கம். அதிலே கோவிந்தசாமி பிள்ளை ரொம்ப மேதாவி. மேற் சொன்ன நான்கு ஆக்டர்களுக்கும் ரொம்ப நல்ல தொண்டை. சமயோசித ஆக்டிலே மிகத் தேர்ந்தவர் கோவிந்தசாமி பிள்ளை.

அரிச்சந்திர நாடகம் மயான காண்டத்தில், யார் நன்ருய் ஒப்பாரி வைத்து அழமுடியும் என்பதைப் பற்றி இவர்களுக்குள் கடுமையான போட்டி. இந்த அழுகையைக் கேட்பதற்கு, பத்து மைல் இருபது மைல் தூரத்திலிருந்து கட்டுசாதம் கட்டிக்கொண்டு போய், இரவு முழுதும் கண்விழித்து, இரண்டு தடவைகளும் நடந்த கிராமவாசிகளை, நான் எப்படி உங்களுக்குப் படம் பிடித்துக் கொடுக்க முடியும்? வழி

யிலே, சுந்தரராவின் முகாரி, ரங்கஸ்வாமி அய்யங்காரின் சாவேரி, கலியாணராமய்யரின் தோடி, கோவிந்தசாமி பிள்ளையின் மோகனம் — இவைகளைப் பற்றி இவர்களுக்குள் கடுமையான சண்டை. எதிர் கட்சிக்காரர்கள் ஒரு மாசம் வரையில் பேசிக்கொள்ள மாட்டார்கள். நீங்கள் இப்பொழுது எளிதாக நாடகம் பார்ப்பதற்கு, இந்த வழிச் சண்டைதான் காரணம் என்று உணர்ந்தால், இதைப் பழங் கதை என்று தள்ளிவிட மாட்டீர்கள்.

சீன்களையும், பக்க வாத்தியங்களையும்,நாடக பாத்திரங்களின் உடைகளையும் சீர்திருத்தி, நாடகத்தைக் கவர்ச்சியடையும் வண்ணம் செய்த பெரிய பாக்கியமும் புண்ணியமும் காலஞ்சென்ற கன்னய்யா நாயுடு அவர்களைப் பெரிதும் சேர்ந்ததாகும். மணிப் பிரகாரம் நாடகத்தைத் துவக்கி, ஆக்டர்களை ஒரு ஒழுங்குக்குள் கட்டுப்படுத்தி, குறிப்பிட்ட நேரத்துக்குள் நாடகத்தை முடிக்கவேண்டும் என்ற ஆவல் முப்பது வருஷங்களுக்கு முன் கிடையாது. மயான காண்டத்தில், சந்திரமதி லோகிதாசனை மடியில் வைத்துப் புலம்ப ஆரம்பிக்கும் பொழுது கோழி கூவிவிடும். சுந்தரராவின் கொட்டகையில் மயான காண்டமும் சதாரமும் அநேகமாய் காலையில் ஆறரை மணிக்குத்தான் முடியும். இந்த அபத்தத்தை அடியோடு தொலைத்தவர் கன்னய்யா நாயுடு. ஆனால் நடிகர்களின் ஆக்ட் சாமர்த்தியத்தை அவரால் வளர்த்து, செழிக்கச் செய்ய முடியவில்லை. அவருடைய செழுமைக் காலத்தில், நாடகக் கொட்டகையில், அதிகமாக ஒப்பாரியும் காதில் நாராசமாகத் துளைக்கவுமில்லை.

## 27. 'அப்பொழுதே சொன்னேனே!'

நமது பண்டைக் காலத்து வேத ரிஷிகளைக் கூட, பெரிய தீர்க்கதரிசிகளாய்ச் சொல்ல முடியாத' படிக்கு, பல பல தீர்க்கதரிசிகள், நமது நாட்டில் சில நூற்றாண்டுகளாகத் தோன்றி வருகிறார்கள். இவர்களுக்குப் பொதுவாக, ஒரு திருநாமம் அளிக்கலாம். இவர்கள்தான் 'அப்பொழுதே சொன்னேனே!' என்கிற மகான்கள்.

ராம நாம பஜனை வேண்டும் என்கிறார் காந்தி. ஆனால் மேற்கூறிய மகான்கள், சதா, 'அப்பொழுதே சொன்னேனே!' என்று ஜபித்த வண்ணமாய்க் காலம் கழித்து வருகிறார்கள். இவர்களைப் பார்த்தவுடனே அடையாளம் கண்டுபிடித்துக்கொள்ள விரும்புகிறவர்களுக்கு, சில உபாயங்களைச் சொல்லுகிறேன். தேவையும் இஷ்டமும் இருக்குமிடத்தில் பரீட்சை செய்து பாருங்கள். நன்றாகப் பலிக்கும். ஆனால் தபால் பில்லைகளும் வந்தனக் கடிதங்களும் எனக்குத் தேவையில்லை.

இவர்களில் பலர் சுக்கிராசாரியார்களாக இருப்பார்கள். கண் முகத்தில் இருக்கும்; ஆனால் பார்ப்பதற்கு மற்றவர்களின் கண்கள் வேண்டும். இவர்கள் வார்த்தையில் எப்பொழுதும் வக்கிரம் (கோணல்). ஒருவித அசட்டுத் தொண்டைக் கனைப்பு இவர்களுக்கு சர்வ சாதாரணம். இவர்கள் சிரித்தால் சிரிப்பில் நைப்பு, நயம், காந்தம், கவர்ச்சி முதலியன இருக்கவே இருக்காது. வாயைத் திறந்து, பற்களை நன்றாக வெளிக்காட்டி, இரண்டு காதுகள் வரையில் உதடுப் பிராந்தியங்களைக் கொண்டு செலுத்தும்

அரிய செயலுக்குச் சிரிப்பு என்று இவர்களின் கூட்டத்திலே பெயர். சொல்லுகிறவனை விட்டு, மற்றவனிடத்தில் கண் அடித்து, பேசுகிறவனை அவமானப் படுத்தும் அபார வேலையில் ஈடுபட்டிருப்பவர்கள் இவர்கள்.

உலர்ந்த சுக்கிலேனும் சிறிது ஈரத்தைக் காணலாம்; ஆனால் இவர்களுடைய உணர்ச்சியில் ஈரமே இருக்காது. ஈரமிலா நெஞ்சத்தார் என்று எவரேனும் சொன்னால் மார்பிலே சடைசடையாகப் படர்ந்திருக்கும் தங்கள் கேசபாரத்தைச் சாட்சி கூறுவார்கள். சமயம் வந்தால் தப்பித்துக்கொள்ளக் கூடிய சொல் பிரயோகப் பழக்கம் இவர்களுக்கு எளிதிலே ஏற்பட்டிருப்பதாகும்.

சிறிய ஏற்றச் சால் தொந்தியும், இடம் விட்டுப் பெயர மனமில்லாத தன்மையும் இவர்களது சிறப்பு இலட்சணங்கள். எப்பேர்ப்பட்ட பெரிய மனிதர்களையும் பெரிய இயக்கங்களையும் குரலின் உதவியைக் கொண்டு பொடியாக்கும் ஆற்றலைப் பழக்கிக் கொண்டவர்கள். உலகத்திலே செய்யும் முயற்சிகள் யாவும் பலிக்கின்றன அல்லது பலிக்கவேண்டுமென்பதுண்டா? எனவே, இவர்கள் பாடு கொண்டாட்டம். நிகழ்ச்சியைக் கேட்ட மாத்திரத்தில், ‘அப்பொழுதே சொன்னேனே!’ என்று இவர்கள் பாணப் பிரயோகம் செய்வார்கள். இதைக் கேட்டதும் பல வீரர்கள் பொறிதட்டிப் போகமாட்டார்களல்லவா?

வழியில் போகிறவர்களையெல்லாம் இவர்கள் வம்புக்கு இழுப்பார்கள். பூமிக்கும், மற்றெல்லா உயிருள்ள வஸ்துக்களுக்கும் சலனம் உண்டு, ஆனால்,

நமது நவீன தீர்க்கதரிசிகளுக்குச் சலனம் என்ற சங்கதியே தெரியாது. சலனம் இருந்தால் உடம்பு நலுங்கிப் போய் விடுமல்லவா? எத்தனை பேர்களோ இடறி விழுந்து இறந்து போயிருக்கிறார்களே! எத்தனையோ பத்திரிகைகளிலே அவைகள் கொட்டை எழுத்தில் வந்திருக்கின்றனவே! அவைகள் இவர்களுக்குத் தெரியாதா?

'ஏண்டா, பொன்னு இந்த வருஷம் நெல் வியாபாரம் செய்தானே, பீஸ் கிழித்துவிட்டானோ, (நஷ்டமாயிற்றா என்பதற்கு இவர்களுடைய பதப் பிரயோகம்) ஏட்டிலே மிச்சமோ?' என்பார்கள் இவர்கள். தெரியாத்தனமாய், பொன்னு 'ஆமாம்' என்று சொல்லிவிட்டானோ, 'அப்பொழுதே சொன்னேனே, கேட்டியா? காலம் சம்பல் என்றேனே!' என்று கொக்கரிப்பார்கள். பொன்னு லாபம் என்றாலோ, 'நான் தான் அப்பொழுதே சொன்னேனே!' என்று இவர்கள் கட்டி யழுவார்கள். சிரிப்பார்கள் என்று சொல்லியிருக்கலாம், பரவாயில்லை.

'அனந்தன் பெண் அறுத்துவிட்டது' என்று கேட்டவுடன், 'அப்பொழுதே சொன்னேனே, இந்த வருஷம் கலியாணம் வேண்டாமென்று, கேட்டாரா?' என்பார்கள் இந்த மகான்கள். சோமுவின் மருமகன் கடை வைத்து ஆயிரம் ஆயிரமாய்ச் சம்பாதிக்கிறான் என்று சொன்னால், 'காமுவைச் சோமுவுக்குக் கலியாணம் செய்து கொடுக்கிற பொழுதே சொன்னேனே!' என்று இவர்கள் உறுமுவார்கள் வயிற்று எரிச்சலுடன்.

வரதனுக்கு இரண்டு வருஷம் கடின காவலும் ஆயிரம் ரூபாய் அபராதமும். 'அவனுக்கு அப்பொ

ழுதே சொன்னேன்: “மாட்டிக் கொள்ளாதே. சர்க்கார் பலவான். பலிக்காது, பலிக்காது, பலிக்காது. காந்தி வந்தாலென்ன, அவன் தாத்தா வந்தாலென்ன, பலிக்காது!” என்று இந்தப் பயல்களுக்கு அப்பொழுதே சொன்னேனே!’ என்பார்கள். ‘காந்திக்கும் இர்வினுக்கும் ஒப்பந்தம். வரதன் அபராதம் தள்ளுபடி. மூன்று மாதத்துக்குள் அவன் விடுதலையாகிவிட்டான்’ என்று எவரேனும் சொன்னால், ‘எனக்குத் தெரியுமே! காந்தி மகான். அவரால் ஆகாத காரியமே கிடையாதே! சத்தியாக்கிரஹமோ, கொக்கோ! காந்தி காலத்தில் சர்க்கார் ஜபம் பலிக்காது என்று அப்பொழுதே சொன்னேனே!’ என்பார்கள் இத்திருக்கூட்டத்தார்கள்.

பெருக்கிக்கொண்டே போவதில் பயன் என்ன? ஸாம்பிள் கொடுத்தாய்விட்டது. வாழ்கிறவன் வீட்டிலும் சரி, வீழ்கிறவன் வீட்டிலும் சரி, பட்சபாதமில்லாமல், இவர்கள், ‘அப்பொழுதே சொன்னேனே!’ என்ற பல்லவி ஒப்பாரியுடன் மாரடித்துக் கொள்வார்கள். திரிகாலத்தையும் உணர்ந்ததாக எண்ணி இறுமாந்து, எப்பொழுதும் ஜயித்தவன் கட்சிக்கு ஒத்து ஊதுவார்கள். தோற்றவன் காதிலே சாவு சங்கு ஊதுவார்கள்.

## 28. 'அழகா யிருக்குன்னு!'

இந்தச் சொற்களை நாம் எல்லோரும் கேட்டிருக்கிறோம். பெரும்பாலும் இவைகளை உபயோகிப்பவர்கள் நமது பெண்மணிகள். இந்தச் சொல் பாணப் பிரயோகம் செய்து, ஆண்பிள்ளைகளின் உயர்ந்த இலட்சியங்களைப் படீர் என்று உடைத்துவிடுகிறார்கள் பெண்கள். இந்தச் சொற்களின் வலிமையையும் இவைகளின் பிறப்பிடத்தையும் கண்டு அஞ்சாத ஆண்மகன் இருப்பானோ என்பது சந்தேகம்.

ராஜாத்தியும் சுந்தரமும் மனைவியும் புருஷனும். அவர்கள் பேசிக்கொள்வதை நீங்கள் கேட்டிருக்கிறீர்களா? கேட்டால் ரொம்ப ரஸமாயிருக்கும். சுந்தரம் சொல்லுகிறான்: 'கேளு! இன்று சாயந்திரம் கடற்கரைக் கூட்டத்தில் ஒன்று கேட்டேன். என் மனதை அது மிகுதியும் கவர்ந்தது. நமது பெண்கள் தைரியமாய் முன்னுக்கு வரவேண்டும். ஆணுடைய பலத்தால் மட்டும் ஒரு தேசம் செழிக்க முடியாது. எந்த முயற்சியிலும் பெண்களும் சம பங்காளர்களா யிருந்தாலொழிய ஜன சமூகம் முன்னேற முடியாது. என்ன அழகான யோசனை!' இதற்கு ராஜாத்தி முகத்தை ஒரு புறமாக வைத்துக்கொண்டு, 'நீங்கள் சொல்லுகிறது அழகாயிருக்கு' என்று யோசனையின்றி, பதில் சொல்லுகிறாள். உடனே, சுந்தரத்தின் தீர்மானம் பொடிப் பொடியாய் நொறுங்கிப் போகின்றது.

பின் ஒரு சமயம் சுந்தரம் குதூகலத்துடன் ராஜாத்தியைப் பார்த்துச் சொல்லுகிறான்:

'புஸ்தகத்தைப் படித்தேன். இப்ஸன் என்ற மேதாவி எழுதிய நாடகம் அது. அந்த நாடகத்துக்கு "பொம் மையின் வீடு" என்று பெயர். ரொம்ப ரஸமான நாடகம். படிக்கப் படிக்க இனிப்பா யிருக்கிறது. ஆண்களுக்கு என்னென்ன பாத்தியங்க ளிருக்கின் றனவோ, அவைகள் எல்லாம் பெண்களுக்கும் இருக்க வேண்டும் என்கிறார் இப்ஸன். என்ன அழகான நாடகம்!' ராஜாத்திக்குக் கோபம். 'வெள்ளைக்கார ருடைய புஸ்தகத்தைப் படித்துவிட்டீர்களோன்னே, ரொம்ப அழகாயிருக்கு! இனிமேல் என்ன குறைவு!' என்று ராஜாத்தி இடைக் குத்துக் குத்துகிறாள். ராஜாத்தியின் 'அழகாயிருக்கு' முன்னே, மேதாவி இப்ஸன் எவ்வாறு பேர் சொல்ல முடியும்?

காந்தியின் சுற்றுப் பிரயாணம். சுற்றுப் பிரயா ணத்தில் பிரசங்கம். பிரசங்கத்தைக் கேட்கிறான் சுந்தரம். அவனுடைய மன உற்சாகத்தை அளவிட முடியாது. வீட்டுக்குத் திரும்புகிறான். கொஞ்சம் நாழிகை யாகிவிட்டது. பயந்துகொண்டே சுந்தரம் வீட்டுக்குள் நுழைகிறான். 'ஸினிமாவுக்குப் போயி ருந்தீர்களோ?' என்று ராஜாத்தி பேச்சில் முதலடி அடிக்கிறாள். 'இல்லை, காந்தி மகான் பிரசங்கம். என்ன அபூர்வமான பிரசங்கம்' என்கிறான் சுந்தரம். 'பிள்ளை குட்டி, சொத்து சுதந்திரம், குடித்தன வேலை — இவை யொன்றும் காந்திக்குப் பிடிக்காது. எல்லோரும் ஜெயிலுக்குப் போனால் அவருக்குப் போதும். அவர் பிரசங்கத்தைக் கேட்டீர்களோன் னே, இனிமேல் உருப்படுகிறதுதான்! அழகாய்த்தா னிருக்கு!' என்று ராஜாத்தி ஜோராய் இழைக் கிறாள். காந்தியும் சுந்தரத்தின் உற்சாகமும் இருந்த

விடம் தெரியாமல் திடீரென்று மறைந்துபோவதை யாவரும் பார்க்கலாம்.

ஸ்ரீமதி ஸரோஜினி நாயுடு சென்னைக்கு வருவதாக வதந்தி. ராஜாத்தி ஸரோஜினி தேவியைப் பார்க்கவேண்டும் என்பது சுந்தரத்தின் ஆசை. ஆசையை மெள்ள மெள்ள, சுந்தரம் தீனக் குரலில் மனுப் போடுவதைப் போலத் தெரிவித்துக்கொள்கிறான். பதில் என்ன வரும் என்று அவனுக்குத் தெரியும். இருந்தாலும் நிஷ்காமிய கருமத்தைப் போல அவன் செய்கிறான். 'பொம்மனாட்டி பிரசங்கம் எனக்கு வேணுமா? உங்களுக்குத்தான் புத்தி கெட்டுப் போயிருக்கு. எனக்கும் கெடணுமா? அழகாயிருக்கு!' என்று அழுத்தம் திருத்தமாக ராஜாத்தி உபதேசம் செய்கிறாள். சுந்தரத்தின் உயர்ந்த உணர்ச்சிகள் யாவும் பறந்துபோகின்றன.

நமது வீடுகளில் 'அழகாயிருக்கு' என்ற சூத்திரம் ராஜ்யபாரம் செய்து வருமளவும் நமக்கு என்ன குறை! ஸர் ஹாரி ஹேக் அவர்களுக்குத்தான் என்ன குறை!



## 29. வாழ்வுக்கு நாடகம் கண்ணுடி

நாடகம் என்பது என்ன? கையை, காலை ஆட்டியும், முகத்தை நீட்டியும், குரலைக் குலுக்கியும் விஸ்தரித்தும் எவரேனும் பேசினுல், ‘என்ன, நாடகம் ஆடுகின்ருய்?’ என்று நமக்குள் சகஜமாய்க் கேலி செய்வது நமக்கு யாவருக்கும் தெரியும். நாடகம் என்ருல் இதுதானு? இது அல்லவாயின் வேறு என்ன? எதற்காக நாடகம் வேண்டும்? எப்போப் பட்ட நாடகம் வேண்டும்? அதை எவ்விதம் நடிக்க வேண்டும்? நாடகத்தினுல் மனிதருக்கு லாபமா, நஷ்டமா? நாடக சம்பந்தமாக, இவைகள் சில கேள்விகள். இவைகளில் இரண்டொன்றைப் பற்றி இங்கு யோசிப்போம்.

மனிதனின் பழைய வாழ்வைப் படம் பிடித்துக் காண்பிப்பது நாடகம்; தற்கால வாழ்வைச் சித்திரமாகக் காண்பிப்பது நாடகம்; எதிர்கால வாழ்வைக் கற்பனை மூலமாய்க் காண்பிக்க முயலுவது நாடகம். மனிதனுக்குத் தன் முகமும் தெரியாது, தன் முதுகும் தெரியாது. கண்ணுடி பார்த்தால் கூடச் சரிவரத் தெரியாது. ஒவ்வொரு மனிதனும் பிறருடைய முகத்தையும் முதுகையும் பார்த்துத்தான், அவைகளின் அமைப்பை நன்ருய்த் தெரிந்துகொள்ள முடியும். முகம் என்பது அறிவுக்குக் குறி; முதுகு சக்திக்கு அடையாளம். அர்ஜுனன் முதுகு அழகன் என்பதைக் கேட்டிருப்பீர்கள். போரில் முதுகு காட்டாததே முதுகுக்கு அழகு என்றும் சொல்லுவார்கள்.

முதுகின் வலிமையையும் முகத்தின் பொலிவையும் பொறுத்தது மனித வாழ்வு என்று ஏன் சொல்லக் கூடாது ?

தன் முகம் எப்படி ஒருவனுக்குத் தெரியாதோ, அதுபோலவே, தன் குற்றமும் குறையும், சக்தியும் பலவீனமும் ஒருவனுக்குத் தெரியாது. இவைகளைப் பிறர் மூலமாய்த்தான் தெரிந்துகொள்ள முடியும். தன்னுடைய பேச்சு கொச்சைப் பேச்சு என்பதைப் பிறர் பேசுவதிலிருந்துதான் ஒருவன் தெரிந்து கொள்ள முடியும் ; அல்லது தன்னுடையது அழகுப் பேச்சு என்பதும் பிறர் பேச்சிலிருந்துதான் ஒரு வனுக்குப் புலப்படும். எனவே, ஒவ்வொருவரும் பிற ரைக் கண்டுதான் தங்களைத் திருத்திக்கொள்ள முடி யும். ஜாம்பவான் பேச்சிலிருந்து ஹனுமான் தமது வலிமையை உணர்ந்தார் என்ற கதையை நாம் எல் லோரும் கேட்டிருக்கிறோம்.

மனிதர்களுக்கு இன்பமும், இனிப்பும், படிப்பும் ஊட்டுவது நாடகம். தன் மனதையும் உருவத்தை யும் நேரிலே பார்க்க முடியாத மனிதன் அவைகளை நாடக பாத்திரங்களின் மூலமாய், நாடக மேடையில், சங்கீத, திரை அலங்காரச் சேர்மான மத்தியில், குறு கிய காலத்தில், துள்ளுகிற பாஷை நடையழகில் — அவைகளை நன்றாகப் பார்க்கிறான். பார்த்ததும் நெஞ் சிலே குதிக்கிறான் ; அல்லது பெருமூச்சு விடுகிறான் ; அல்லது சளசளவென்று பேசத் துவக்குகிறான். அதா வது, ஏதோ ஒரு வகையில், அவன் உடலிலும் உள்ளத்திலும் மாறுதல் அடைகிறான். வேறு பாஷை யில் சொன்னால், இதையே மனிதன் தன்னைத் தானே பாக்கும் முயற்சி என்றும் சொல்லலாம்.

நான் புரியாதபடி பேசுகிறேன் என்று கோபம் கொள்ளலாகாது. நாடகத்தின் தத்துவத்தைச் சொன்னேன். அனுபவத்தைப் பார்ப்போம். சதா மனைவியோடு சண்டைபோடும் மனிதனுக்கு, குடும்பச் சண்டையின் கேவலம், ஆபாசம் நன்ருகத் தெரிவதில்லை. இவன், குடும்பச் சண்டை நாடகம் ஒன்றைப் பார்த்தால், எத்தனையோ வகைகளில் லாபமடையக் கூடும். வீட்டுக்கு வந்ததும் மனைவியைத் திட்டத் துவக்கினுல்,நாடக மேடைக் குடும்பச் சண்டை அவன் கண் முன்னே நின்று நாட்டியமாடும். பிறகு சண்டை போட அவனுக்கு மனம் வருமா? ஒரு நாடகத்தைப் பார்த்தவுடனே மனிதர்கள் யாவரும் திருந்திப் பயனடைந்துவிடுவார்கள் என்று சொல்லுவதற்கில்லை. இருந்தாலும் சிறிதேனும் பயனுண்டு.

மனித வாழ்வின் சீரையும் சீர் குலைவையும் பெருக்கிக் காண்பிக்கும் பூதக் கண்ணுடியாக நாடகத்தைக் கொள்ளலாம். இந்த பூதக் கண்ணுடி என்ற நாடகம் இல்லாமையினுலேதான், தமிழர்கள் தங்கள் குணங் குறைகளைத் தெரிந்துகொள்ள முடியாமல் தேக்கமுற்று வாழ்ந்து வந்திருக்கின்றனர் என்பது என் அழுத்தமான எண்ணம். இது, எவ்வளவு வரையில் மெய் என்பதை இப்பொழுது நன்ருக யாரும் தெரிந்துகொள்ளலாம். நாடகத்தைப் பார்த்த நமது பெண்கள் — நன்மைக்கோ, தீமைக்கோ — எவ்வளவு தூரம் தங்கள் நடையுடை பாவனைகளில் மாறியிருக்கிருர்கள்! பெண்களைப் போலவே ஆண்களும்.

யோகி சதா காலமும் தியானத்தில் அமர்ந்திருக்கலாம். புலவன் தன் கண் கெட்டுக் குருடாகிற வரையில், ஏடுகளைப் புரட்டிக்கொண்டிருக்கலாம். விக்

ஞான சாஸ்திர ஆராய்ச்சியாளர்கள் கண்ணுடிகளை உடைத்து, குழாய்களைத் திருப்பித் திருப்பிப் பார்த்துப் பரக்கப் பரக்க விழித்துக்கொண்டிருக்கலாம். ராஜதந்திரிகள் பொய்க் குட்டையில் மூழ்கி மூழ்கி எழுந்திருக்கலாம். லோபி பணத்தைப் பார்த்துப் பார்த்து மகிழலாம். கந்து வட்டிக்காரன் கடன் வாங்கினவனது கழுத்தைத் திருகி, வட்டியும் முதலும் ஒன்றுக்கு மூன்ருக அபகரித்துக்கொண்டு மனம் களிக்கலாம். முடிச்சுமாறிகள், 'எப்பொழுது சிறை செல்லுவோம்' என்று ஏங்கி ஏங்கிப் பொழுதைப் போக்கலாம். ஆனுல் சாதாரண மனிதர்களுக்குப் பொழுது போக்கு வேண்டாமா? பொழுது போவதிலும், கொஞ்சம் இனிப்பும், சிரிப்பும், கோபமும் கலக்கவேண்டியது அவசியமே. இதற்கு நாடகம் எவ்வளவு தேவை? இந்தத் தேவையை நமது முன்னேர்கள் நன்ருகத் தெரிந்துகொள்ளவில்லையென்றே சொல்லவேண்டும்.

வாழ்வைப் பொறுத்து நாடகம் அமையும், நாடக பாத்திரங்கள் அமையும். தற்கால வாழ்வை நாடகத்தில் நன்ருக அமைக்க ஆசிரியர்கள் பயப்படுகிருர்கள். அதனுலேதான் வள்ளி திருமணம், கோவலன் சரித்திரம், பகவத் கீதை, சாரங்கதரன், சதாரம், தாரா சசாங்கம், நல்லதங்காள் சரித்திரம், கள்வர் தலைவர் முதலிய பெயர் மறந்துபோன நாடகங்கள் நாடக மேடையில் நடிக்கப்பட்டு வந்தன ; சில இன்றைக்கும் நடிக்கப்பட்டும் வருகின்றன. மேற்கூறிய நாடகங்களின் அமைப்பும் நடிப்பும் சற்றேனும் நாடகத்துக்கு ஒவ்வினவை யல்ல. உள்ளதற்குள், பின் கண்ட நாடகங்களைப் பாதகமில்லை என்று சொல்லலாம்.

லீலாவதி சுலோசனை, மனோஹரன், தாசிப் பெண், பிராமணனும் சூத்திரனும் - இவைகள் சம்பந்த முதலியார் எழுதிய நாடகங்கள். கிருஷ்ணசாமி பாவலர் எழுதிய 'பதி பக்தி' பரவாயில்லை. கோபால ரத்னம் மொழிபெயர்த்து அமைத்திருக்கும் 'ராஜ பக்தி' கொஞ்சம் குஷி. இவைகள் எல்லாவற்றிலுமே சம்பந்த முதலியாரின் 'தாசிப் பெண்' மிக உயர்ந்த நாடகம் என்பது என் கருத்து. அது நான் சிறையிலிருக்கையில் படித்தது. ஆனால் அதை நாடகமேடையில் நடித்துப் பார்க்கும் பாக்கியம் எனக்கு இன்னும் ஏற்படவில்லை.



## 30. 'அவன் மகனே, கோக்கோ!'

தனித்திருந்தால் தியானம், அல்லது யோகம், அல்லது கொட்டாவி, அல்லது — கற்பனைக் கெட்டிய வரையில் அடுக்கிக்கொண்டு போகலாம். இருவர் கூடினால் அது சபை. மூவர் சேர்ந்தால் அது மகாநாடு. நாலு பேர் கலந்துகொண்டால் அது உலகம். ஐந்து பேர்கள் கவ்விக்கொண்டால் அது சண்டை. அதுவே யுகப் பிரளயம். தும்மினால் வம்பு. கண்ணைக் கொட்டினால் ஒரு கற்பனை. பெருமூச்சு விட்டால் வேதனை. சுயராஜ்யத்தைப் பற்றிப் பேசினால், கைகலப்பும் குஸ்திச் சண்டையும்; போலீசாருக்கு உபத்திரவம்.

தனித்து ஒருவரா யிருக்கிற போதே இரண்டாயிரம் பேர்கள் முன்னே யிருக்கிறதாக எண்ணிக் கொண்டு, பலர் அலுக்காமல் சலிக்காமல் பிரசங்கம் செய்கிறார்கள். அவர்களுக்கு மூளைக் கோளாறு ஏதேனும் உண்டா என்று கவனித்துப் பார்த்தால், கோளாறும் காணப்படுவதில்லை. இவ்வளவு பிரசங்கமும் இரண்டாவது முகத்தைக் கண்டவுடனே எங்கேயோ ஓடிப் போகிறது. எஞ்சின் தேவைக்கு அதிகமான புகையை வெளியே விடுவதைப் போல, இவர்கள் செய்கிறார்களோ, என்னவோ? அவரவர் வேலை அவரோடு.

'வேலாயுதத்தின் மகனே, கொக்கோ!' என்கிறார்கள். பரம்பரைச் சைவத்தைச் சேர்ந்தவர்களுக்குக் கூட, கொக்கின் மேல் ஆசை வந்த கதை எனக்கு விளங்கவில்லை. பால் கொக்கைப் போல இருக்கும்

என்று விடுகதையிலே, பல்லைக் காட்டிப் பேசிய பையனைத்தான் எனக்குத் தெரியும். அவனிடம் சந்தேக நிவர்த்தி செய்துகொள்ளலாமோ என்ருல், பல்லைக் காட்டிவிட்டு இருந்தவிடம் தெரியாமல் அவன் ஓடி மறைந்துகொள்ளுகிருன். உங்களைத்தான் கேட்கிறேன், சொல்லுங்கள். 'வேலாயுதத்தின் மகனே, கொக்கோ!' என்பதற்கு அர்த்தம் என்ன? அது பிறந்து வளர்ந்த வரலாறு என்ன? தெரிந்தால் சொல்லலாம். அடிபிடி கட்டாயமில்லை.

பேச்சுக்கு நடுவே, ஆபாசப் பேச்சு ஒருவன் பேசினுல், இன்னுன் மகனே, கொக்கோ என்கிருர்கள். கொக்கின் நடவடிக்கைகள் யாவும் இவர்களுக்குத் தெரியும் போலிருக்கிறது. இல்லாவிட்டால்,அடிக்கொரு தரம் இவர்கள் கொக்கைச் சந்தியில் இழுத்து, சாட்சி வைக்கத் துணிவார்களா? இவர்கள் வாயில் அகப்பட்டு, உயிரோடு வெளிவரும்படியாக, கொக்கு, இந்த ஜன்மத்திலோ அல்லது ஜன்மாந்தரங்களிலோ என்ன பாபம், என்ன புண்ணியம் செய்ததோ!

தந்தை பட்ட கடனுக்கு மகன் பாத்தியப்படுவது இயற்கையே. மகனுடைய தப்பிதத்துக்குச் செத்த தகப்பனும் பாத்தியப்பட வேண்டுமா? 'அவன் மகனே, கொக்கோ!' என்கிருர்கள். மகன்தான் கொக்காகிருன், தகப்பனும் கொக்காகவேண்டுமா? தர்க்க சாஸ்திரத்துக்குப் பொருத்தமா யிருக்கலாம். ஆனுல் அரசு மரத்தைப் பிடித்த பிசாசு பிள்ளையாரையும் பிடித்துக்கொள்ள வேண்டும் என்பதில்லை. பிடித்துக் கொள்ளத்தான் வேண்டும் என்று என்பேரிலே எவரும் தாவா போடாமல், என்னைத் தயை செய்து மன்னித்துவிடலாம்.

சம்பாஷணைக் கிடையே, ரஸமாக ஏதேனும் பேச்சுத் தோன்றினாலும், தள்ள முடியாத இந்தக் கொக்கு, 'வந்தேன்!' என்று பொத்தென்று குதித்துவிடுகிறது. எனவே, இந்தக் கொக்கின் வேலை என்ன வரம்புக்குக் கட்டுப்பட்டது என்று விளங்கவில்லை. எந்தச் சந்தர்ப்பத்துக்கு ஏற்றது என்றும் சரிவரப் புலனாகவில்லை. ஒருவன் அலங்கார அணியணியாகத் திக்கினாலும், 'வேலாயுதத்தின் மகனே, கொக்கோ!' என்று சொல்லிச் சிரித்து, ரஸிக்கிறார்கள். ரஸிக்கிற சமயத்தில் அவர்களிடம் கொக்கின் வரலாற்றைக் கேட்பதும் தவறாகும். கொக்கின் பேரில் இருக்கும் அன்பு நம்மிடம் பாய்ந்துவிட்டால், என்ன செய்கிறது?

சாதாரணமாய்ப் பேசுகிற பேச்சைப் பற்றி, இவ்வளவு ஆராய்ச்சி எதற்காக என்று கேட்கலாம். அந்தக் கேள்வி பிறக்கிற வரையிலும்தான் என் பேச்சும் வெளிவரும். பத்திரிகையிலே இடம் இருக்கிறது என்று பத்திராதிபர் சொல்லும் வரையில்தான் என் பேனாவும் ஓடும். பொழுது போக்குக்கு என்று எழுதினாலும், கொக்கின் வரலாறு கொஞ்சம் தெரிந்தால் நல்லது. பிறகு உங்களிஷ்டம்.

## 31. பரத நாட்டியத்தில் ஒரு குறை

எனக்கு ரொம்ப நாள் ஆசை. எதிலே? பரத நாட்டியம் பார்ப்பதிலே. சுமார் இருபது வருஷங் களுக்கு முன், அதை நான் அடிக்கடி பார்ப்பதுண்டு. பின்னாலே அதற்குக் கால தேச வர்த்தமானங்கள் இடம் கொடுக்கவில்லை. அதைப் பற்றி நான் கவலைப் பட்டதுமில்லை. காரணம் என்ன? நமது நாடு இப் பொழுது இருக்கிற நிலைமையிலும், நமது நாட்டாரின் தற்போதைய மனோ நிலையைக் கருதியும், பரத நாட்டி யம் பார்க்காததைப் பற்றி நான் வருந்தவேண்டிய தில்லை என்று அப்பொழுது நான் தீர்மானங் கொண் டேன். அந்த அபிப்பிராயத்தை மாற்றிக்கொள்ளக் காலமும் காரணமும் வந்துவிட்டனவா என்று ஆராய்ந்து பார்க்கும் பொருட்டு, சென்ற ஞாயிறன்று, சென்னை தம்புச் செட்டி வீதியில் அமைக்கப் பெற் றிருக்கும் 'கான மந்திர'த்துக்கு பால சரஸ்வதியின் நாட்டியத்தைப் பார்க்கச் சென்றிருந்தேன்.

'கான மந்திரத்'தில் காலி யிடமே இல்லை. இரண்டு பங்கு ஆண்பிள்ளைகளும் ஒரு பங்கு பெண் பிள்ளைகளும் வந்திருப்பார்கள். இருபத்து நான்கு வயதுள்ள இங்கிலீஷ் இளைஞன் ஒருவன் தமி ழனைப் போல் வேஷ்டி கட்டிக்கொண்டு, நாட்டியம் பார்க்க வந்திருந்தான். கனம் சீனிவாச சாஸ்திரி யார் வந்திருந்தார். கனம் நீதிபதி வெங்கடசுப்ப ராவ் தமது தர்ம பத்தினியுடன் விஜயம் செய்திருந்தார். வெள்ளைக்கார தம்பதிகள் இருவர் வந்திருந்தனர்.

கனம் சீனிவாச சாஸ்திரியாரோடு தமிழ்ப் பெண்ணைப்போல உடை தரித்துக்கொண்டு, வெள்ளைக்கார ஸ்திரீ ஒருவர் வந்திருந்தார். எத்தனையோ உத்தியோகஸ்தர்களும் வக்கீல்மார்களும் டாக்டர்களும் வந்திருந்தார்கள். ஒன்று விடாமல் புரண்டி எறிய பத்திரிகை நிருபர்களும் ஆசிரியர்களும் வந்திருந்தார்கள். கான மந்திரத்துக்கும் பால சரஸ்வதிக்கும் (வீணை தனத்தின் பேத்தி) உள்ள கிராக்கியையும் பெருமையையும் அதிமாய் வர்ணிக்க வேண்டுமா?

அங்கு கூடியிருந்தவர்களுள் நூற்றுக்குத் தொண்ணூற்றேழு பேர்கள், என்னைப் போல, நாட்டிய சாஸ்திரம் அறியாதவர்கள். கானத்தையும் ந்ருத்திய அபிநயத்தையும் அனுபவிப்பதற்கு, எங்கள் கண்களும் காதுகளும்தான் கருவிகள். என்னைப் பற்றிச் சொல்லிவிட்டால், அது அவர்களையும் பற்றிச் சொன்னதாகத்தான் ஆகும். சில்லறை வித்தியாசங்கள் சில இருக்கலாம். எதிலும் பூரண ஒற்றுமை இருக்க முடியாது என்று உங்களுக்குத் தெரியாதா? நான் கண்ட காட்சியையும் எனது அனுபவத்தையும் சிறிது சொல்லுகிறேன். பொறுமையுடன் கேளுங்கள்.

முதலிலே எனக்கு நேர்ந்த ஆபத்து என்னவெனில், சர்வகலாசாலை லைப்ரேரியன் ஸ்ரீமான் எஸ். ஆர். ரங்கநாதன் எனக்கு அந்த ஆங்கில இளைஞனை அறிமுகப்படுத்தி வைத்து, அன்றைய நிகழ்ச்சி சம்பந்தமாக எல்லா விஷயங்களையும் அவருக்கு விளக்கமாக எடுத்துச் சொல்லும்படியாக என்னை வேண்டிக்கொண்டு, தமது ஆசனத்துக்குப் போய்விட்டார். நான் நாட்டியத்தைக் கவனிப்பதா, அல்லது

அந்த இளைஞனுக்கு வியாக்கியானம் செய்துகொண் டிருப்பதா? மேலும் அந்தப் பேர்வழியோ தானாகச் சந்தேகம் கேட்கிற ஆளாகத் தோன்றவில்லை. அவனை வம்புக் கிழுத்து வியாக்கியானம் செய்வதிலும் எனக்கு இஷ்டமில்லை. தெலுங்குப் பாட்டுகளிலே எனக்கு சிரத்தையும் கிடையாது. ஏன், பாட்டில் பாஷை புரிவதில்லை.

பரத சாஸ்திரத்திலே மூன்று அம்சங்கள். இது நானாகப் பிரித்தது. சாஸ்திரம் எப்படி 'முறையிடு கிறதோ' அது எனக்குத் தெரியாது. தாளத்தை ஒட்டி நாட்டியம். இதற்குக் கருத்தழகு தழுவிய பாட்டுத் தேவையில்லை. இதற்கு சுரமும் தாளமும் தேவை. நல்ல கைவரிசை, கால்வரிசைப் பழக்கம் அதிகம் இருக்கவேண்டும். சதிர், தாளத்துக்கும் சுரத் துக்கும் தப்பிப்போனால், பார்க்கிறவர்களின் மண்டை யில் அடி விழுந்தது மாதிரி இருக்கும். பாட்டிலே குறிப்பிடப்படும் கருத்துக் கேற்ற அபிநயம், அடுத்த படியாகக் கவனிக்க வேண்டிய சங்கதி. பாட்டிலே குழந்தையைத் தழுவி முத்தமிடுவதாகக் கூறப்பட் டால், அதை அபிநயச் செயலில், அபிநய ஜாடை யில், அபிநயக் குறிப்பில் காட்டவேண்டும். அபிநயத் துக்குப் பின்னே யிருப்பது **பா**வம். முத்தமிடுகிற உயிர் - **பா**வத்தை முகத்தில், தேகம் முழுவதிலும் காண்பிக்க வேண்டும். நாட்டியத்தையும் அபிநயத் தையும் சாஸ்திர முறை பிசகாமல் செய்துவிடலாம். **பா**வம் என்பது அவரவர் மனோதர்மத்தையும் யுக்தி சாமர்த்தியத்தையும் பொறுத்ததாகும். வித்வா னுடைய தனி மேதையை, கடைசியில் சொன்னதைக் கொண்டுதான் கணக்கிட முடியும்.

சிறு பையனும் எண்சுவடி வாய்பாட்டை, தலை கீழாய்ச் சொல்லிவிடுவான். கணக்கிலே வாய்பாட்டை உபயோகப்படுத்துவது அவனுக்கு சிரமம். ஆடுகிறதும், அபிநயம் பிடிப்பதும் பழக்கத்தால் எளிதிலே கைகூடக் கூடியவை. பாவம்தான் கஷ்டம். அதற்குச் சிறிதளவேனும் கவிதா ஆவேசமும், கற்பனு சக்தியும், மெழுகைப் போல உருகி ஒட்டிக் கொள்ளும் உள்ளமும் வேண்டும். இதைத்தான் இங்கிலீஷிலே (Artist) 'ஆர்டிஸ்ட்' கவிச் - சித்திரகாரன் என்கிறார்கள். தமிழில் நேரே எனக்கு வார்த்தை அகப்படவில்லை.

'கான மந்திரத்'தில் அன்று ஆடிய பாலசரஸ்வதி நல்ல கவிச் - சித்திரகாரி என்பதில் சந்தேகமில்லை. மன்மத பாணம் காதலியின் உடலில் பிரவேசம் செய்ததை, அவள் அபிநய பாவத்துடன் காண்பிக்கையில், சபையார் கலகலவென்று கைகளைக் கொட்டி உடல் பூரிப்பு அடைந்தார்கள். கனம் சீனிவாச சாஸ்திரியாரின் முகம் மலர்ந்தபடியே இருந்தது. பக்கத்திலிருந்த பாலக்காட்டு இளைஞன் ஒருவன், என் தொடையை, அவன் அறியாமலே ஒரு திருகு திருகிக் கிள்ளினான். அவன் கையோடு துண்டுச் சதை வந்து விடுமோ என்று சந்தேகப்பட்டேன். கூட வந்த நண்பர் ஒருவர், கால எல்லையையும், சபை நிகழ்ச்சியையும், சபையாரையும் சிறிதும் லட்சியம் செய்யாமல், என் முதுகின் பேரில் தாளம் போட்டுக் கொண்டே யிருந்தார். பார்த்த கண் பூத்துப் போகும் படியாக, சபையார் அனைவரும், பாலசரஸ்வதியை நோக்கிய வண்ணமா யிருந்தார்கள். 'ரொம்ப கெட்டிக்காரி!' என்றான் இங்கிலீஷ் இளைஞன்.

இதுவரையிலும், நான் சொல்லி வந்ததில் ஒருவருக்கும் கோபமாவது வருத்தமாவது வராது. இனிமேல்தான் எனக்கு மனவேதனை ; படிக்கிறவர்களுக்கும் கஷ்டம். அன்றைக்குப் பாடின பாட்டுகளிலே, மூன்று ரஸங்கள் இருந்தன. ஹாஸ்ய ரஸம், பக்தி ரஸம், சிருங்கார ரஸம். சோக ரஸம் இல்லை. வீர ரஸத்தைப் பற்றிச் சொல்லவேண்டியதே இல்லை. அதை இந்த நாட்டிலே, கார்த்திகைப் பிறையைப் போல, காணுவது அருமை. மற்ற ரஸங்களைப் பற்றி எவரும் கவலைப்படுவதுமில்லை. அவைகள் எழுத்தில் மட்டும் இருக்கின்றன. அனுபவத்தில் கிடையாது.

மேலே முதலில் மூன்று ரஸங்களைச் சேர்த்துச் சொன்னேனே, அவைகள் பாட்டிலும், அபிநயத்திலும் சிருங்கார ரஸமாகவே உருவம் பெறுகின்றன. பக்தியை, நாயக நாயகி பாவமாகப் பாவித்துப் பாடும் வரையில் அதற்குச் சிருங்கார ரஸ ஆபத்து உண்டு. தெய்வத்தன்மை பொருந்திய காதலை பாரதியார் வர்ணிக்கும் பொழுதே, ஆபாஸச் சிருங்கார ரஸத்தில் அவர் வீழ்ந்துவிட்டதாக காலஞ்சென்ற வீரர் வ. வெ. சு. அய்யர் சந்தேகித்து எழுதியிருக்கிறார்.

நம்மில் பெரும்பாலர் உடலும் உள்ளமும் வலிமை குறைந்து வாழ்ந்து வருகிறார்கள். இதைக்கூட ஆட்சேபிப்பவரும் இருப்பார்களா? சிருங்கார ரஸத்தின் மூலமாய் கலி யுகமும், நிலைத்த கெட்ட பெயரையும் வாங்கிக்கொண்டுவிட்டது. ஒருமனப்பட்டு, சோர்வில்லாமல் உழைத்துக் காரியங்களைச் செய்யும் வல்லமை நம்மவர்களிடம் இல்லை. சதா களைப்பும், சோர்வும், ஏக்கமும் நம்மிடத்தில் குடிகொண்டிருக்கின்றன. சங்கீதக் கச்சேரிகளிலோ, வித்வான்கள்

தமிழ்ப் பாட்டுகள் பாடுவதை கௌரவக் குறைவாக எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். தெலுங்கு, ஹிந்துஸ் தானி பாட்டுகள் நிறைந்த சங்கீத நாட்டியக் கச்சேரி களில் தமிழர்களுக்கு என்ன வேலை? அவர்களுக்கு என்ன புரியும்? அவர்களால் என்ன ஆனந்தத்தை அனுபவிக்க முடியும்?

நாட்டியக் காலத்தில், என் முதுகையும் தொடை யையும் பறிகொடுத்த பின்னரும், சபையார் மன்மத பாண அபிநயத்தைக் கண்டு ஆரவாரம் செய்த கோலாகலத்தைக் கண்குளிர நான் பார்த்த பின் னரும், சிருங்கார ரஸம் ஒன்றே நாட்டியத்தில் மிஞ்சிக் கிடப்பதை, நேரில் மீண்டும் ஒரு முறை, இருபது வருஷங்களுக்குப் பின்னர், சந்திக்க நேர்ந்ததன் பின் னரும், எதிலும் நிதான மிதவாத நிபுணரான, மகா புத்திசாலிக் கிழவரான கனம் சீனிவாச சாஸ்திரி யாரின் முக விலாசம் பட்ட பாட்டை நான் பார்க்கக் கொடுத்துவைத்ததன் பின்னரும், மகாத்மாவின் இருபத்தோரு நாள் உபவாசத் தவமும் பாலசரஸ்வதி யின் சிருங்கார ரஸ அபிநயத்தின் முன்னே பெயர் சொல்லாது என்று உறுதியான முடிவுக்கு நான் வரு வது முடியாத காரியமா? அடியேன் பேச்சு அம்பலம், இப்பொழுது ஏறும லிருக்கலாம். பரத சாஸ்திரம் ஒரு நாளும் அழிந்து போகாது. தற்போது சிருங்கார ரஸம் ததும்பும் பரத நாட்டிய அபிநயம் இப்பொழுது நாட்டுக்குத் தேவையில்லை. கூடாது என்பது எனது தாழ்மையான கருத்து. எனது பழைய அபிப்பிராயம் மாறவில்லை. காசு கொடுத்து டிக்கட் வாங்கினது தவறு. உங்களுக்கு என் மனதை வெளி விட்டுச் சொன்னதுதான் லாபம்.

# 32. கடவுள் இருக்கிறார்!

திக்கற்றவனுக்குத் தெய்வமே துணை என்கிறார் காந்தி. கடவுள் இருக்கிறார் என்று நிமிஷத்துக்கு ஒரு முறை நாம் எல்லோரும் சொல்லுகிறோம். இவ் விரண்டுக்கும் வித்தியாசம் உண்டா, இல்லையா? அடிக்கொரு தடவை நாம் ஏன் சொல்லவேண்டும்? நாம் இதைச் சொல்லும் பொழுது, நாம் இருப்பது திக்கற்ற நிலைமையா, தென்பு நிலைமையா?

கடவுள் இருக்கிறார் என்று அடிக்கடி நாம் ஊர்ஜிதப்படுத்தாவிட்டால், அவர் நிலை பெயர்ந்து போய்விடுவாரா? அல்லது இல்லாமலே அழிந்து போய்விடுவாரா? கடவுள் இருக்கிறார் என்று நாம் புலம்பும் தருணத்தையும் சந்தர்ப்பத்தையும் சோதித்துப் பார்த்தால், அது வெகு விநோதமா யிருக்கும்.

பக்கத்து வீட்டுக்காரன் மகன் ஐ. ஸி. எஸ். பரீட்சையில் தேறி, தன் பையன் முழு மண்டுவா யிருந்தால், ஒரு மனிதன், 'கடவுள் இருக்கிறார்' என்று வாய்க்குள்ளாகவே, பெருமூச்சு விட்டுக்கொண்டு முணுமுணுக்கிறான். அந்த முணுமுணுப்புக்கு என்ன அர்த்தம்? ஐ. ஸி. எஸ். பையன் முட்டாளாக வேண்டும், அல்லது அவனுக்குப் பைத்தியம் பிடிக்கவேண்டும் என்று அர்த்தமா? உருப்படாப் பிள்ளைக்குக் கடவுள் வழி காட்டவேண்டும் என்று பொருளா?

தடியன் ஒருவன் பலவீனனுடைய மனைவியை அடித்துக்கொண்டு போய்விடுகிறான். 'கடவுள் இருக்

கிறார்' என்று பலவீனன் ஊளையிடுகிறான். இந்த ஊளை எந்த இனத்தில் சேர்ந்தது? 'கடவுள் இருக்கிறார்; ஓடிப்போன இருவரையும் அவர் நிச்சயமாய்க் காப்பாற்றுவார்' என்று அவன் ஊளையிடுகிறானா? பறிகொடுத்துக்கொண்டே யிருப்பதற்குத் தனக்குப் பல மனைவிகள் வாய்ப்பார்கள் என்று ஆசையோடு அவன் உளறுகிறானா?

கொள்ளைக்காரர்கள் வீட்டில் நுழைந்து பலாத்காரம் செய்து எல்லோரையும் பயமுறுத்தி, சத்தம் போட வழியில்லாமல் கூட அடித்துவிட்டு, அகப்பட்டதை எடுத்துக்கொண்டு ஓட்டம் பிடிக்கிறார்கள். அப்பொழுது வீட்டிலுள்ளவர்கள், 'கடவுள் இருக்கிறார்' என்று கதறுகிறார்கள். தாங்கள் எடுத்துக் கொண்டு போன சொத்தை வழியில் யாரையேனும் பார்த்து, 'நாங்கள் கொள்ளையடித்தது தவறு. இவைகளைச் சொந்தக்காரர்களிடம் கொண்டு போய்ச் சேர்த்துவிடுங்கள்!' என்று கொள்ளையடித்தவர்கள் மனமிரங்குவார்கள் என்று சொத்தைப் பறிகொடுத்தவர்கள் எண்ணி, 'கடவுள் இருக்கிறார்' என்று சத்தம் போடுகிறார்களா?

அநியாய வியாஜ்யத்தில் ஒருவன் தோற்றுப் போகிறான். ஜயித்தவனுக்கு இடறு செய்ய அவனுக்கு வேறு வழியைக் காணோம். அப்பொழுது அவன்கூட, 'கடவுள் இருக்கிறார்' என்று உறுமுகிறான். இதற்கு என்ன அர்த்தம்? 'ஜயித்தவன் மண்ணாய்ப் போய்விட!' என்று அவன் சபிக்கிறானா? 'கடவுள் இருக்கிறார்; நான் செய்த அநியாயத்துக்கு மேற்கொண்டும் கூலி கொடுப்பார்' என்று மனம் கசிந்து உருகி, அவ்வாறு சொல்லுகிறானா?

இரண்டு பேர்க்குள் கைகலப்புச் சண்டை. ஒருவன் படீர் படீர் என்று சரமாரியாக அடி கொடுக்கிருன். மற்றவன் அவைகளே வாங்கிக்கொள்ளுகிருன். ஆனுல் வலி பொறுக்க முடியவில்லே. 'படவா! எல்லாவற்றிற்கும் கடவுள் இருக்கிருர்!' என்று பாணப் பிரயோகம் செய்கிருன். அடிபட்டவனுடைய **கைகளில்** இல்லாத கடவுளேப் பற்றி, அடி கொடுத்தவன் லவலேசமேனும் கவலேப்படப் போகிருனு? நெருக்கடிக்கு உதவி செய்யாத கடவுள் ஒருபொழுதும் நேரே வந்து பயமுறுத்தப் போவதில்லே என்று அவனுக்குத் தெரியும். அவன் கடவுள் 'பூச்சி'க்குப் பயப்படாமல், உல்லாசமாய், ராஜபார்ட்டு நடையுடன் செல்லுகிருன்.

கலியாண மூலமாய் ஒரு பெண் கண்ட பலன், கணவன் கை அடிதான். அவளுக்குத் தாலியும் மிச்சம் தான். கணவனே சிருங்கார லீலா விநோதனுய் விளங்குகிருன். அடியும், அந்திக் கொலு சந்திக் கொலுவாக, நாள்தோறும் அமைந்து இருக்கிறது. அவளும், 'கடவுள் இருக்கிருர்' என்று மனம் புழுங்கிப் புலம்புகிருள். இதனுல் கணவன் மனம் மாறும் என்று அவளுடைய நிஃனப்பா?

ஒவ்வொரு அவமானத்துக்கும் ஒவ்வொரு நஷ்டத்துக்கும், அவ்வப்போது வரவு செலவு கணக்குத் தீர்ப்பதிலேதான் ஒவ்வொருவருக்கும் ஆசை. இந்த ஆசையைச் சரிவரப் பூர்த்தி செய்ய வழி தெரியாதவன்தான், 'கடவுள் இருக்கிருர்' என்று பாவனேப் புலம்பல் புலம்புகிருன். இந்தப் புலம்பலுக்கு 'எதிரி ஒழியவேண்டும்' என்று ஒரே ஒரு அர்த்தம்தான் உண்டு. இவனே ஒழிப்பதற்கு, எதிரி கடவுளின்

உதவியை நாடவில்லை. எனவே மற்றவன் கடவுளைக் குறித்துப் புலம்புவதினால் என்ன லாபம்?

கடவுள் இருக்கிறார் என்று சொல்லி மனிதப் பொறுப்பை ஏய்க்கப் பார்ப்பது வீண்; ஏய்ப்பினால் கடவுள் ஏமாறுவதில்லை, உலகமும் ஏமாந்து போகவில்லை. கடவுளையும் உலகத்தையும் பாவனை பக்தியால் ஏமாற்றத் துணிந்தவன்தான் எமாந்து போகிறான். கடவுள் எங்கும் எப்பொழுதும் நிறைந்திருக்கிறார். அவருடைய வாழ்வுக்கும் ஆயுளுக்கும் பலவீனனது பாவனை வாழ்த்து தேவையே இல்லை.



## 33. கர்ம பலன்

கர்ம பலன் என்பது ஒரு ஆச்சரியப் படத்தக்க உண்மை. இந்த உண்மையை அனுபவத்தின் மூலமாய், எவ்வளவு வேண்டுமானாலும் சேகரித்துப் பார்க்கலாம். இது, மூளையும் முதுகெலும்பும் முறிந்து போகும் உண்மையல்ல. கடைந்து பிடித்த அனுபவத்தில் தேறாத உண்மை உண்மையே அல்ல. அதை உருளைக் கிழங்கு, மொட்டைத் தலை, நார்த்தம் பழம் என்று எந்தப் பெயரையும் கொடுத்து அழைக்கலாம். கர்ம பலன் என்ற உண்மையை, பெயர் மாற்றி அழைக்கவேண்டிய தேவையே இல்லை. அது வேஷம் போடுகிற உண்மையல்ல. அது சாசுவத உண்மை.

கர்மத்துக்குப் பலன் என்ன? தினை விதைத்தால் தினை முளைக்கும்; வினை (கர்மம்) விதைத்தால் வினை முளைக்கும். இவ்வாறு ஜனங்கள் சாதாரணமாய்ப் பேசிக்கொள்ளுவார்கள். இது உண்மைதான். கர்மத்துக்குப் பலன் கர்மம்தான் என்று சாதிக்கக்கூடும். ஆனால் வேறு சில பலன்கள் தோன்றுகின்றன. அவைகளை நாம் நேரே உணருவதில்லை.

கர்மத்துக்குப் பலன் ஜன்மம் (வாழ்வு); கர்மத்துக்குப் பலன் சரித்திரம்; கர்மத்துக்குப் பலன் ஞானம். அந்த மூன்று ஆச்சரியமான பலன்களை அறிந்துகொள்ளாமல், நாம் கர்ம பலன் என்று தலைமேல் கைவைத்து நொந்துகொண்டே புலம்புகிறோம். மகத்தான உண்மையைக் கூட, மதியீனத்தாலும், காலத்தின் கொடுமைப் பழக்கத்தாலும், மறந்துவிட

லாம். அந்த உண்மையில் மாசு மூடும்படி அடித்து விடலாம். அப்படித்தான் நாம் செய்துவிட்டோம்.

கர்மம் இல்லையானால், ஜன்மம் (வாழ்க்கை) ஏது? சரியோ, தவறோ, காரியம் செய்துகொண்டு போனாலொழிய, வாழ்வு கிடையாது. வாழ்வு வாழ விரும்புபவர்கள் காரியம் செய்யாமல் முடியாது. கர்மத்துக்குப் பலன் வாழ்வு என்றால் எத்தகைய வாழ்வை நாம் விரும்புகிறோமோ, அதற்குத் தக்க கருமத்தைச் செய்யவேண்டும். இது மிகவும் சாதாரணமான தர்க்க முடிவாகும். இதற்கு வேதாந்த அறிவும் மூடு மந்திர ஞானமும் வேண்டாம்.

எனவே, நமது வாழ்வு நாம் செய்யும் காரியங்களைப் பொறுத்திருக்கிறது. புறப்படுகிற இடம் தெரியும். போய்ச் சேருகிற இடம் தெரியும். வழியும் நன்றாகத் தெரியும். இந்த மூன்றும் நன்றாகத் தெரிந்த பின்னரும், வழி நடக்கச் சோம்பலாமா? நமது ஆசை வாழ்க்கைக்கும் பிறன் உழைக்க முடியுமா? அவன் உழைத்தால் அதன் பலனை அவன் தானே அனுபவிக்க முடியும்? நாமும் அனுபவிக்கலாம் என்று எதிர்பார்ப்பது மடமை அல்லவா?

சாதாரண மனிதன் செய்யும் கருமத்துக்கு, அவனே பலனை அனுபவிக்கிறான். கர்ம வீரர்களின் கர்மத்துக்குப் பலன் சரித்திரம். ராமனுடைய கர்மங்களுக்குப் பலன் ராமாயணம். ராமன் முக்தி யடைந்தாரோ, அல்லது அது அவருக்குத் தேவையோ, அதைப் பற்றி விவாதம் வேண்டாம். சரித்திரம் என்பதே, வீரர்களின் வாழ்க்கையின் வரலாறுதானே? தமிழர்களுக்குச் சொந்த சரித்திரம் வேண்டாமா? பரீட்சைக்காக, பட்டத்துக்காக, உத்தியோகத்தின்

நிமித்தம், அந்நியர்களின் சரித்திரத்தைப் படித்தால் மட்டும் போதுமா? கர்ம பலன் என்ற தத்துவத்தின் உண்மையை விஸ்தாரமாக விளக்கிக் காண்பிப்பது சரித்திரமாகும். இந்தப் பலன் நமக்குச் சொந்தத்தில் வேண்டாமா?

ருசியை அனுபவிக்காமல், ஆகாரத்தைச் சாப்பிட முடியுமா? கர்மங்களின் மூலமாய், வாழ்வின் இடம் அடைகிறதைப் போல, ஆகாரத்தின் மூலமாய், வயிற்றின் இடமும் அடைந்து போகும். வயிறு நிறைந்து போகும், உண்மைதான். ஆனால் ஆகாரத்தின் ருசியையும் கூடவே அனுபவிக்கிறோம். கர்மம் என்ற வாழ்க்கை - உணவின் ருசி ஞானமாகும். ஞானம் என்ற ருசிக்கு ஆசைப்பட்டுத்தான், பெரியார்கள் வினை ஆற்றியிருக்கிறார்கள். கர்மத்தின் பலனான ஞானத்தை முற்றிலும் தாம் அனுபவித்து, பிறருக்கும் உபதேச நல்லுதவியைச் செய்தவர் கண்ணன். கண்ணனுடைய கர்மங்கள் வாழ்வின் 'இண்டு இடுக்கு'களை மூடுவதற்காக அல்ல; ஞான ஒளியைப் பெறுவதற்காகவுமே.

கர்ம பலனை நம்பாதவன் வீணன். கர்ம பலனை நம்பினவனுக்குக் கடவுளின் கிருபா கடாட்சம் கூடத் தேவையில்லை. கர்ம பலனைப் படைத்த கடவுளிடமிருந்து, வேறு கிருபா கடாட்சத்தை ஏன் எதிர்பார்க்க வேண்டும்? வீணர்களுக்கு அன்ன சத்திரம் வைப்பவர் கடவுள் அல்ல. கடவுள் எல்லாம் தெரிந்தவர். அவர் மதியீனமான காரியம் செய்யவேண்டும் என்று நாம் அசட்டுத்தனமாய் எதிர்பார்க்கலாமா?

கர்ம பலனை நம்பினவன் விதிக்குப் பயப்பட மாட்டான். அவனுக்கும் விதிக்கும் சம்பந்தமில்லை.

அதிர்ஷ்டத்தைத் தொழுது கும்பிட மாட்டான். கர்மம் செவ்வனே செய்தால் விதி ஓடிப் போகும். அதிருஷ்டம் தானுக அழைக்காமலே வரும். கர்மத்துக்குப் பயந்தவனுக்கு அதிருஷ்டம் ஒருநாளும் கைகூடாது.



## 34. எதற்கும் பாட்டா?

தமிழ் நாட்டின் நாடக மேடையில் இப்பொழுது என்ன குறை காணப்படுகிறது? அதைப் பற்றி எல்லோரும் இப்படி வித விதமாய்ப் பேசுகிறார்களே, என்கிறீர்களோ? அள்ளாமல் குறையாது, சொல்லாமல் பிறவாது என்று சொல்லுகிறார்களே, அது ஏன்? குறை இருக்கிறது என்று எல்லோரும் சேர்ந்து சொன்னால் குறைதான். வெகு ஜன வாக்கு சத்திய வாக்கு அல்லவா?

நாடகத்திலும் நாடக மேடையிலும் என்ன குறைகள் என்கிறீர்கள். கதையின் ஸ்வாரஸ்யத்துக்காக, நாம் நாடகத்துக்குப் போவதில்லை. கதையை நாம் வீட்டிலேயே படித்துவிடலாம். நாம் ஏன் நாடகத்துக்குப் போகிறோம்? டிக்கட் வாங்கும் பொழுது இடிபடுவதற்கா? பீடி புகையை முகத்தில் அப்படியே வாங்கி விழுங்குவதற்கா? அர்த்தமில்லாத 'ஒன்ஸ் மோர்' சத்தத்தைக் கேட்பதற்கா? நண்பர்களுடன் வெற்றிலை, பாக்கு, புகையிலை, சோடா முதலிய ஆனந்தங்களை அனுபவிப்பதற்கா? இவைகளையே வேறு இடங்களில் அனுபவித்துவிடலாம்.

நாடகத்தின் முக்கிய லட்சணம் ஆக்ட் (நடிப்பு). இப்பொழுதோ, நாடக மேடையில் ஆக்டைப் பெரிதும் நாம் காண்பதில்லை. எல்லாம் பாட்டு மயம். வேட்டைக்குப் பாட்டு; விளையாட்டுக்குப் பாட்டு; புலம்பலுக்குப் பாட்டு; சிரிப்புக்குப் பாட்டு; காதலுக்குப் பாட்டு; யுத்தத்துக்குப் பாட்டு; பேச்சுக்குப்

பாட்டு. அது மட்டுமா? நாடகப் போக்குக்குப் பொருத்தமில்லாத பாட்டு. கோவலன் சரித்திரத் திற்கும் சித்த ரஞ்சன தாஸ் இறந்ததற்கும் என்ன சம் பந்தம்? வள்ளி திருமணத்திலே, தாதாபாய் நாரோ ஜிக்கு என்ன வேலை? இந்த மாதிரி சம்பந்தமில்லாத பாட்டுகள் பாடப்படுகின்றன. இப்பொழுதிருக் கிற நாடக மேடையை கான மந்திரம் (சங்கீதக் கச்சேரிக் கூடம்) என்று சொல்லலாம்.

பாட்டு இல்லாமல், நாடகம் நடிக்க முடியுமா என்று பலர் சந்தேகப்படலாம். இந்தச் சந்தேகம் விநோதமானது. பிழை திருத்த அட்டவணை இல்லா மல் புஸ்தகம் ஒன்று இருக்க முடியுமா என்று கேட் டால், நீங்கள் சிரிக்கமாட்டீர்களா? ஆக்டுக்குப் பாட் டுத் தேவையில்லை. ஆக்டு செய்யத் தெரியாதவர்கள் தான், சங்கீதத்தைக் கொண்டு நாடகத்தை வெள்ளை பூசி மெழுகி, மினுக்குப் பண்ணப் பார்ப்பார்கள். வீட்டிலே சங்கீதம் இழுத்துக்கொண்டேதான் நாம் பிறர் பேரில் கோபித்துக்கொள்ளுகிறோமா?

நாடகத்துக்கு அடியோடு சங்கீதம் தேவையில்லை என்பதற்கு நடந்த ஒரு சம்பவத்தைச் சொல்லுகி றேன். தஞ்சாவூருக்கு வடக்கே திருவையாறு என்ற ஊரில் ஒரு பள்ளிக்கூடம் இருக்கிறது. அந்தப் பள்ளிக் கூடத்தின் பழைய மாணவ சங்கத்தார், தங்கள் விழாக் காலத்தில், ஒரு மாதத்துக்கு முன்னர் **மோலீர்** என்ற பிரெஞ்சு நாடகாசிரியர் எழுதிய 'கருமி' என்ற நாட கத்தின் சில பகுதிகளை இங்கிலீஷில் நடித்துக் காட்டி னார்கள். இரண்டு மணி நேரத்துக்கு மேல் ஆக்டு; பாட்டு ஒன்றுமே கிடையாது. அந்த இரண்டு மணி நேரமும், நாடகத்தைப் பார்த்தவர்கள் இமைகொட்ட

வில்லை. நாடகக் கொட்டகையில் ஊசி விழுந்தாலும் காது கேட்கும். பிரம்மானந்தமான ஆக்ட். மாதிரிப் பாட்டுக்கூட இல்லாமல் நாடகம் எழுதலாம். நாடகம் நடிக்கலாம். திருவையாறு நிகழ்ச்சியைப் பார்த்தவர்கள் ஆட்சேபிக்க மாட்டார்கள்.

பெர்னார்டு ஷா நாடகங்களில் என்ன பாட்டு இருக்கிறது? கால்ஸ்வொர்தி எழுதியிருக்கும் நாடகங்களில் பாட்டு கிடையாது. ஸர் ஜேம்ஸ் பாரியின் நாடகங்களில் பாட்டு இல்லை. இவர்கள் எழுதியிருக்கும் நாடகங்களை, இனிப்பும் கவர்ச்சியும் குறையாமல், சேர்ந்தாற் போல ஆறு மாத காலத்துக்கும், அதற்கு மேலும், நடித்துக் காண்பிக்கிறார்களாம்! வெள்ளைக்காரர்களுக்கு சங்கீத மோகம் கிடையாதா? பாட்டில்லாத நாடகம் எழுதுவதற்கும் நடிப்பதற்கும் வெள்ளைக்காரர்கள் மட்டும் முக்கண் படைத்தவர்களா? நாட்டை ஆள நமக்குத் திறமை யில்லை என்று பலர் சொல்லுகிறார்கள். பாட்டில்லாத நாடகம் எழுதக்கூடவா, நமக்கு சக்தி கிடையாது?

பெர்னார்டு ஷா நாடகத்தை அம்பலத்தில் நடிப்பதற்கு முன், அறையில் நாற்பது தடவைக்கு மேல் ஒத்திகை நடத்தி, ஆக்டர்கள் தங்களைப் பழக்கிக் கொள்ளுகிறார்களாம்! நமது ஆக்டர்களுக்கோ ஒத்திகையே தேவையில்லை போலத் தோன்றுகிறது! நாடக மேடையில், சில பாட்டுச் சாக்குகளுடன் ஏறினால், அவர்கள் ஆக்டைச் சமாளித்துக்கொள்ளுவார்களாம்! என்ன டம்பமான எண்ணம்! அவர்கள் பேரிலும் குறை சொல்லுவதில் பயனில்லை. நாடகத்துக்குப் போகிறவர்களில் பெரும்பான்மையோர் பாட்டுக்கு ஆசைப்பட்டுக்கொண்டுதான் நாடகக் கொட்டகைக்

குப் போகிறார்கள். அவர்கள் விரும்புவது சிக்கன மான சங்கீதக் கச்சேரி, நாடக ஆக்ட் அல்ல. ஆக்டின் தேவையும் அருமையும் நம்மவர்களுக்கு இன்னும் பிடிபடவில்லை.



## 35. தேகம் அநித்தியம்

'தேகம் அநித்தியம்; இந்த மண்ணு நமக்கு சாசுவதம்? ஏன் ஆகாயக் கோட்டை கட்டுகிருய்?' என்று ஒருவர் மற்றவருக்குச் சமாதானம் சொல்லுவதை நீங்கள் பார்த்திருப்பீர்கள். எந்தப் பேச்சையும், எந்த முயற்சியையும் வழிமறித்துத் தடுத்துவிடும் 'தேகம் அநித்தியம்' என்ற சூத்திரம். உடல் நிலைக்காது — உண்மைதான். அதனுல் என்ன? 'கடவுள் இருக்கிருர்' என்பதற்குத் தங்கை (தம்பி என்றும் சொல்லலாம்) இந்த 'தேகம் அநித்தியம்'.

தேகம் அநித்தியம் என்று சதா பிதற்றும் முட்டாள், அந்த உண்மையைக் கண்டுபிடித்தவனல்ல. ஆனுல், அதைத் தவருன போக்கில், தவருன காலத்தில், பலவீனம் நிறைந்த கூக்குரலில் (குரலில் என்று எழுத எனக்கு இஷ்டமில்லை) இப்பொழுது சொல்லித் தவிக்கிருர்கள்.

தேகம் அநித்தியம் என்று முதன் முதலில் கண்டவர்கள், அந்த உண்மைக்கு இணங்க, உடனே தங்கள் பிராணனை விட்டுவிடவில்லை. அவர்களும் அவர்கள் சந்ததியார்களும் வேதம் ஓதினுர்கள். உபநிஷதங்களைப் படித்து, அவைகளைத் தழுவி வாழ்க்கை நடத்தினுர்கள். புராண இதிகாசங்களை எழுதினுர்கள். காவிய ரஸத்தை அனுபவித்தார்கள். நட்சத்திர மண்டலத்தைக் கணக்கெடுத்தார்கள். நாடகம் ஆடியும், பார்த்தும் களித்தார்கள். சங்கீதம் பயின்றுர்கள். சித்திரம் வரைந்தார்கள். சண்டைக்குச் சளைக்க

வில்லை ; பயப்படவுமில்லை. 'பெண்ணாகி வந்ததொரு மாயப் பிசா'சைக் கண்டு ஏளனம் செய்யவில்லை. நடுங்கவுமில்லை. 'பொங்கலோ பொங்கல்' என்று குடியானவர்கள் சொல்லுவதைப் போல, முற்காலத் தில் 'காதலோ காதல்' என்று கோஷம் செய்ததை, கம்பன், காளிதாஸன் மூலமாய்க் காணலாம்.

தேகம் அநித்தியம் என்று கண்ட பெரியார்கள் கோட்டைகளை ஏன் கட்டவேண்டும்? குளங்களை ஏன் வெட்டவேண்டும்? வைத்திய சாஸ்திரத்தை எதற்காகப் பயின்றார்கள்? வாகனங்களில் அவர் களுக்கு விருப்பு எதற்காக? பிரம்மாண்டமான கோயில்களை ஏன் கட்டினார்கள்? தங்க விக்கிரகங் களைப் போன்ற குழந்தைகளை ஏன் அவர்கள் பெற வேண்டும்? அவர்கள் கையாலாகாத கபோதிகள் அல்ல. 'இருந்த நாள் நம்முடையது ; மற்றெல்லா நாட்களும் எமனுடையது' என்று அவர்களுக்கு நன் றாகத் தெரிந்திருந்தபடியால், தங்கள் ஜீவிய தசைக் குள் என்னவெல்லாம் செய்து முடிக்கவேண்டுமோ, அவைகள் எல்லாவற்றிலும் அவர்கள் ஈடுபட்டு உழைத்தார்கள். நல்ல பேர் எடுத்தார்கள். கையைக் கட்டிக்கொண்டும், கொட்டாவி விட்டுக்கொண்டும், 'உடல் நில்லாது' என்று அவர்கள் உளறினதே யில்லை.

தேகம் அநித்தியம் என்று போலி வேதாந்தக் கூச்சல் போடும் ஆசாமிகளை நீங்கள் பார்த்திருக்கிறீர் களா? தேகம் நிலைக்கா தானபடியால், இன்றைய பொய்யை இன்றைக்கே கோர்ட்டில் சொல்லி, அதற் காகப் படிப் பணத்தையும் ஆனந்தமாய் இரண்டு கை களையும் நீட்டி வாங்கிக்கொள்ளுவார்கள். அவர்கள்

வரன்முறையின்றி, பொய்ச் சத்தியப் பிரமாணம் செய்வதில் வல்லவர்கள். நாளைக்கு என்று சாப் பாட்டை அவர்கள் ஒத்திப் போட மாட்டார்கள்.

தேகம் அநித்தியம் ; ஆகவே, ஒன்றுக்கு இரண் டாய்ப் பெண்டாட்டிகள் இருக்கட்டுமே என்பது அவர்களது முடிவு. அந்த இரண்டு பேர்கள் மாண்டு போய், தொந்தி தரையை அணுகி, தலை நரையை நாடினாலும், அவர்கள் நெஞ்சம் கலங்குவதில்லை. மூன்றாவது சம்சாரத்தை வீட்டில் வந்து குதிக்கும்படி செய்துவிடுவார்கள். 'குழந்தே, என் தொந்தியைக் கண்டு பயப்படாதே! நீ எனக்கு சம்சாரமாய் நேர வேண்டிய பிராப்தி இருந்தது. பகவான் ஆக்ஞை!' என்று பாதிப் பற்கள் செத்துச் சொத்தையாய்ப் போன வாய் நிறைய அவர்கள் அட்டஹாஸம் செய் வார்கள்.

. தேகம் அநித்தியம். எனவே, வம்பு பேசுவதை நிறுத்த முடியுமா? எமன் வந்தால் பொல்லாதவன், விடமாட்டான் அல்லவா? இவர்களுடைய பொறுப் பற்ற வம்புப் பேச்சுக்கு ஒருகால் எமன் பயப்பட் டாலும் பயப்படுவானோ என்னவோ! 'அந்தக் குட்டி யாரையோ இழுத்துக்கொண்டு ஓடிவிட்டாளாமே!' என்று ஒருவர் வம்பு பேசுவார். 'அந்த அநியாயத்தை ஏன் கேட்கிறாய்?' என்று இன்னொருவர் முடிப்பார். அந்தக் குட்டி தங்களில் ஒருவரை இழுத்துக்கொண்டு ஓடவில்லையே என்பது இவர்களுடைய அந்தராத்மா வின் நினைப்பு. தேக அநித்தியத்தின் வேலை பொல் லாத வேலை ; சொல்ல வொண்ணாத கொடிய வேதனை!

தேகம் அநித்தியம் ; 'இன்றைக்கு இருப்பாரை நாளைக்கு இருப்பர் என்று எண்ணவோ திட

மில்லையே?' நாளைக்கும் இன்றைக்கும் போகிற பிராணன்கள், பரலோக யாத்திரை வழியிலே, சண்டை போட்டுக்கொண்டு போகும்படியாகக் கூட இந்த அநித்திய வீணர்கள் ஊர்ச் சண்டைகளையும் ஜாதிச் சண்டைகளையும் கிளப்பிவிட்டுக்கொண்டே யிருப்பார்கள். தேகம் அநித்தியமே யொழிய, இவர்களின் கண்களில் எல்லா ஆபாசங்களும் நித்தியமாய்ப் படும். சத்தியம், தியாகம், வீரம், முயற்சி, உதவி, நல்ல சம்பாஷணை முதலியன இவர்களுக்கு நஞ்சு. தேக அநித்தியம் பேசுகிறவர்களின் தேகங்கள் மட்டும் திடீரென்று அநித்தியமாய்ப் போவதில்லை. காரணம் மட்டும் தெரியவில்லை.



## 36. காக்காய் பிடிக்கிற வித்தை

காக்கை என்பது இலக்கணம். காக்காய் என்பது பேச்சு. இலக்கணத்திலே, பல் உடைந்துபோய், புதுப் பல் பலர் கட்டிக்கொண்டதாகச் சொல்லுகிறார்கள். நமக்கு ஏன் அந்தக் கஷ்டம் வரவேண்டும்? இலக்கணக் காக்கை வேண்டாம். பேச்சு வழக்கக் காக்காயே போதும். காக்கை காக்காயாகப் பேச்சிலே நீளுவதால், நஷ்டமே கிடையாது. உச்சரிப்பும் நன்றாக வரும்.

காக்கை நல்ல பிராணி. கும்பகர்ணனைப் போல தூங்குகிறவர்களைக்கூட, 'கா, கா' என்று சத்தம் போட்டு எழுப்பிவிடுகிறது. காலையைத் தவிர வேறு வேளைகளில் காக்கை கூரையில் உட்கார்ந்து கத்தினால், விருந்தினர்கள் வருவதற்கு முன் எச்சரிக்கையாம். இது வயது சென்றவர்களின் நம்பிக்கை. நாம் என்ன செய்ய முடியும்? விருந்தினர்களின் வருகையை, அவர்களின் பந்துக்களின் வீடுகளை, பிசகாமல் தெரிந்துகொண்டு அறிவிக்கும் ஞானமும் கடமையும் காக்கைக்கு எப்படி ஏற்பட்டதோ, அது கடவுளுக்கும் காக்கைக்கும் தெரிந்திருக்கலாம். அல்லது நம் வீட்டுக் கிழவர்களைக் கேட்டுத் தெரிந்துகொள்ளலாமோ, என்னவோ?

'காக்கை எல்லாம் பெண் இனம்; அவைகளிலே ஆணே கிடையாது' என்று எல்லாம் அறிந்த சில தமிழர்களின் சித்தாந்தம். இந்தச் சித்தாந்தத்தை நிரூபிக்கும் பழமொழி ஒன்றையும் தயாராய்ச் செய்து

வைத்துக்கொண்டிருக்கிறார்கள். காக்கையைப் போல கறுத்த வலியன் கொட்டினால், பெண் காக்கைகள் கர்ப்பமாகும். இந்தத் தெளிந்த ஆராய்ச்சி முடிவுக்கும் எனக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. இருப்பதைக் கையாளுகிற வேலை மட்டும் என்னுடையது.

வலியனுக்கும் காக்கைக்கும் பிறப்பதாகக் கூறப்படும் காக்கைகள் ஜாதியில் இரு-பிறப்பாளர்கள், அதாவது துவிஜர்கள். துவிஜர்களிலே, காக்கை பிராமணனோ, க்ஷத்திரியனோ, வைசியனோ—இன்னதென்று எனக்கு என்னமாய்த் தெரிய முடியும்? ஸ்மிருதியைக் கரைத்துக் குடித்தவர்களுக்குத் தெரிந்திருக்கலாம். அதிவர்ணாச்ரமிகளான சந்நியாசிகளுக்குத் தெரிந்திருக்கலாம். எப்படி யிருந்த போதிலும், மனிதனைக் காட்டிலும் காக்கைக்கு எல்லா வகையிலும் மேன்மையுண்டு என்று பழந் தமிழர்கள் சொல்லுகிறார்கள். அதற்கு மேலும் அப்பீல் உண்டோ?

இப்பேர்ப்பட்ட அபூர்வப் பிறவியான காக்கையைப் பிடிப்பதென்றால் லேசான காரியமா? காக்கை பிடிக்கிறதையே தொழிலாகக் கொண்டிருக்கும் தமிழர்களுக்குப் பிடிப்பது பெரிய காரியம் அல்ல என்று நீங்கள் சொல்லலாம். நான் சொல்ல முடியாது. ஏன் என்றால், காக்கை பிடிப்பதிலே இரண்டு நிலைமைகள் உண்டு என்கிறார்கள். காக்கை பிடிக்கிற பைத்தியக்காரன், காக்கை பிடிக்கிற கெட்டிக்காரன் என்று இரு பிரிவுகளாக வகுத்திருக்கிறார்களாம். அந்த இரண்டு இனங்களிலும் நான் சேர்ந்தவனல்ல.

காக்கை பிடிக்கிற ஆராய்ச்சியில் — தொழிலில் அல்ல — தேர்ந்த பெரியார் ஒருவரிடம் என் சந்தேகத்தைத் தெரிவித்துக்கொண்ட போது, அவர் சிரித்தார். 'ஏன் சிரிக்கிறீர்கள்?' என்றேன். 'நீ பச்சைக் குழந்தை; உனக்கு அனுபவம் போதாது. காக்காய் பிடிக்கிற சாஸ்திரம் சமுத்திரத்தைக் காட்டிலும் விஸ்தாரமானது. ஆழமானது. அதைச் சுருக்கமாகச் சொன்னால் விளங்காது. விஸ்தாரமாய்ப் பேசினால் விகடம் என்று நீ நினைப்பாய்' என்றார். 'என்ன நேர்ந்தாலும் பாதகமில்லை. நீங்கள் சொல்லத்தான் வேண்டும். முழுதும் கேட்பதற்கு எனக்கு ஆசை' என்றேன்.

பொதுவாகச் சிலவற்றை, பெரியவர் சொன்னதாவது: 'பதட்டமில்லாமல் கேட்டுக்கொண்டு வா. இந்தியாவிலே நாற்றுக்கு ஒன்று குறைய நூறு பேர்களும் இங்கிலீஷ்காரர்களைக் காக்காய் பிடிக்கிறார்கள். ஆபீஸ்களிலே மேலதிகாரியை, கீழிருப்பவர்கள் யாவரும் காக்காய் பிடிக்க அரும் பாடு படுகிறார்கள். கிராமத்தார்கள் போலீசாரைக் காக்காய் பிடிக்கிறார்கள். வக்கீல்கள் நீதிபதிகளைக் காக்காய் பிடிக்கும் அவஸ்தையை நீ நேரில் பார்த்து ஆனந்தம் அடையவேண்டும். பணக்காரர்களை லோட்டாப் பேர்வழிகள் காக்காய் பிடிக்கிறார்கள். அழகுப் பெண்களை மைனர்கள் காக்காய் பிடிக்கப் பார்க்கிறார்கள். வெள்ளைக் காக்காய், கறுப்புக் காக்காய், சின்னக் காக்காய், பெரிய காக்காய், அழகுக் காக்காய், பணக்காரக் காக்காய் — காக்காய் பிடிக்கிறதில் எவ்வளவோ தினுசுகள் உண்டு. காக்காய் பிடிக்கும் புராணம் என்று ஒன்று எழுதினாலும் ரஸமாயிருக்கும்.'

'காக்காய் பிடிப்பது கூடாதா, முடியாதா?' என்றேன். பெரியவர் சொல்லுகிறார்: 'மிருகங்களிலே, கபடத்துக்குப் பெயர்போனது குதிரை. "குதிரைக் கவுடு" என்று அழகுபட ஜனங்கள் சொல்லுவதை நீ கேட்டிருப்பாய். பட்சிகளிலே ரொம்பக் கபடமுள்ளது காக்காய். மனிதனுடைய வலையிலே எல்லாப் பட்சிகளும் அகப்பட்டுக்கொள்ளும். ஆனால் காக்காய் மட்டும் எப்படியாவது தப்பித்துக்கொள்ளும். அதைப் பிடிப்பது முடியாத காரியம். எனவே, காக்காயைப் பிடிக்க முயலுவது பைத்தியக்காரக் காரியம். சந்தேகம் நிறைந்த ஜந்து காக்காய். சந்தேகமுள்ளவனை எதிலும் சிக்க வைப்பது ரொம்பக் கஷ்டம். அதனாலேதான் காக்காய் பிடிக்கப் பார்ப்பவனைக் காக்காய் பிடிக்கிற பைத்தியக்காரன் என்று அறிவு - உலகம் சொல்லுகிறது. பித்து நிறைந்த காரியம் செய்வது கூடுமா?'

மேலும் சொல்லுகிறார்: 'காக்காய் பிடிக்கிற மனிதர்கள் படும் பாட்டை நீ பார்த்திருக்கிறாயா? கப்பலோட்டும் மாலுமிக்குக்கூட அந்தப் பாடு இருக்காது. தாங்கள் பிடிக்கப் போகும் காக்காயின் மனதை, சந்து பொந்து விடாமல் ஆராயவேண்டும். சமயத்துக்காகக் காத்திருக்க வேண்டும். காக்காய்க்குக் கோபம் வரும்; அந்தச் சமயம் இவர்கள் பயந்து போனது போல நடிக்கவேண்டும். ஆனால் இவர்களின் லட்சியம் காக்காயின் கழுத்திலேதான் சதா இருக்கும். குயிலைக் காட்டிலும் தான் அழகாகப் பாட முடியும் என்று காக்காய் சொன்னால், இவர்கள் "ஆமாம்" போடவேண்டும். மயிலைக் காட்டிலும் அழகு என்றால், "ஆமாம்" என உடனே சொல்ல

வேண்டும். காந்தியைக் காட்டிலும் தீரன் என்ருல், "தடை என்ன!" என்று இவர்கள் சொல்லவேண்டும். "பாரதியாருக்கு என்ன பாடத் தெரியும்?" எனின், "அதற்கென்ன சந்தேகம்!" என்று முடிக்க வேண்டும். "ஆமாம் போடுகிற நீ முட்டாள்!" என்று காக்காய் சொன்னுல், "ஆமாம், ஆமாம்!" என்று தலைகுனிந்து வணங்கவேண்டும்.'

காக்காய் பிடிக்கிற சாஸ்திரத்தைப் பெரியவர் குறிப்பாக விளக்கிக் காட்டியது எனக்குப் போதும். உங்களுக்குப் போதாவிட்டால் பெரியவரைக் கேட்டுக்கொள்ளுங்கள். அவருடைய விலாசம் — இருங்கள், தேடிப் பார்த்து அனுப்புகிறேன். சம்மதந் தானே? சம்மதம் இல்லாவிட்டால், நான் என்ன செய்ய முடியும்?



## 37. ருசியும் பிடிப்பும்

நாடகம் பார்க்கப் போகிறவர்களுக்கு, வாழ்விலே ருசி யிருக்கிறது என்று சொல்லலாம். வாழ்விலே ருசியை இழந்தவர்கள், நடை - பிணங்களைப் போல், காரியம் செய்வார்கள். அவர்கள் செய்யும் காரியங்களில் அடிவலுவே இருக்காது. ஒரு கம்பை குழந்தையும் பிடிக்கிறது ; பலசாலி ஒருவனும் பிடிக்கிறான். எந்தப் பிடிப்பிலே வலு அதிகமா யிருக்கும்? மனிதன் செய்யுங் காரியங்களிலே அவனுக்கு இருக்கும் ருசியும் பிடிப்பும்தான் அவனுக்குப் போதுமான வல்லமையைக் கொடுக்கின்றன. குடித்தனத்திலே பிடித்தமில்லாதவள் வேசி. வேசியினால் வீடாவது நாடாவது உயருமா? வாழ்க்கையிலே பொறுப்பும் பிடிப்பும் வேண்டும். இவைகளைக் காட்சி மூலமாய் ஊட்டுவது நாடகமாகும்.

நாடகமே விமரிசையாகத் தோன்றாத காலத்தில், தமிழர்களுக்குத் தங்கள் குறைகளே கண்களில் பட்டதில்லை. நொண்டுகிறதில் இருக்கும் குறையும் அவலட்சணமும் நொண்டியைப் பார்த்தால்தான் தெரியும். மனித வாழ்வின் சுவையான அம்சங்களையும் சாரமில்லாத பாகங்களையும் ஒருங்கே சேர்த்துத் திரட்டிக் காண்பிப்பது நாடகம். ஒரு விபத்தில் எடுக்கப்பட்ட படம் நம்முடைய உள்ளத்தில் நன்கு தைத்துப் பதிகின்றது. அந்த விபத்தைப் பற்றிய பிரசங்கம் அவ்வளவாகப் பதிவதில்லை. வாழ்க்கையின் படம்தான் நாடகம்.

'கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்றார்கள் பெரியவர்கள். 'அங்கு இங்கு எனாதபடி எங்கும் பிரகாசமாய், ஆனந்த பூர்த்தியாய்' நிறைந் திருக்கும் கடவுளுக்குக் கோயில் எதற்கு? கோயில் கடவுளுக்காக அல்ல. கோயில் நமக்காக, மனிதர் களுக்காக. கடவுளைப் போலப் பரந்து நிற்பது வாழ்க்கை. வாழ்க்கையின் கோயில் வீடு. வீட்டைப் படம் பிடித்தது போலக் காட்டுவது இலக்கியம், நூல். இலக்கியத்திலே இனிப்புக் கொண்டது நாடகம். இதிலே சந்தேகமே கிடையாது.

வாழ்விலே எவ்வளவுக் கெவ்வளவு சத்து இருக் கிறதோ, அதற்குத் தகுந்தாற் போலத்தான், நாடகம் தோன்ற முடியும். கத்தரிக்காய் சாம்பார், சீரக ரஸம், மேல் வரும்படி, குமஸ்தா உத்தியோகம், ஒருவன் பேரில் மற்றவன் கோள் சொல்லுதல், நம்பிக்கை மோசம், சிருங்கார-ரஸ-பரத-நாட்டியம், கோர்ட்டு வியாஜ்யம், ராவ்சாகிப் பட்டம், மொச்சைச் சுண்டல், புளியோதரை வினியோகம், மோடி வைத்தல், பே யோட்டல், பெண் மேல் பெண் கலியாணம் செய்து கொள்ளுதல் — முதலியவைகளுக்குள் நமது வாழ்வு ஒடுங்கிப் போகுமானால், நல்ல நாடகம் தோன்ற முடியுமா? கேலி நாடகம் ஏன் தோன்றக் கூடாது என்று நீங்கள் கேட்கலாம். உங்கள் கேள்வியை மெச்சினேன். எல்லோரும் பாபிகளா யிருந்தால், யாரால் பாபத்தைக் கண்டிக்க முடியும்? மேலும், எத்தனை பாபங்களை அலுக்காமல் பார்த்துக் கண்டிப் பது? சக்தியுள்ளவனது பலவீனத்தை அனுதாபக் கேலி செய்ய முடியும். ஆனால், அந்தக் கேலியைப் பொறுப்பதற்குக்கூடப் பலவீனனிடம் சக்தி இல்

லாமற் போனல், அவனுக்கு மூக்குக்கு மேலே கோபம் வருகிறது. உடை கட்டிக்கொள்வது முதல் உத்தி யோகம் வரையில், எல்லாவற்றையும் பற்றி தமிழர்கள் சாஸ்திர மேற்கோளுடன் பேசுகிருர்கள். உடை மாதிரியைக் கேலி செய்தால், சாஸ்திரத்தை அவமான மாக, தூஷணையாகப் பேசுவதாக அவர்கள் எண்ணிக் கொண்டால், அந்தப் பாபத்தைப் போக்குவதற்கு, கங்கை முழுக்குக்கூடப் போதாது.

எதற்கெடுத்தாலும் சாஸ்திரம், ஜன்மாந்திர பலன், விதி என்று வெம்பி வதங்கும் தமிழர்களுக்கு இதுவரையிலும் நல்ல நாடகம் கிடைக்காதது பொருத்த முள்ளதே. நல்ல நாடகம் தோன்ருததே, அவர்கள் உள்ளத் தேய்வுடனும் ஓய்வுடனும் வாழ்வ தற்குக் காரணம் என்று சொல்லலாம். செடி முதலா, வித்து முதலா என்ற ஆராய்ச்சியைத் திண்ணை வம்பர் களுக்குப் பரிசுப் பேச்சாகக் கொடுத்துவிடுவோம். இரண்டும் முதல்தான். ஒன்றுக்கு மற்ருென்று வட்டியும் விளைவுமாகும்.

ஜாதிக் கொடுமையினுலும், விவேகம் சிறிதும் துளைக்க முடியாத மூட பக்தி சம்பிரதாயங்களாலும், இப்பொழுது, நாடக பாத்திரங்களை நன்ருய் அமைக்க முடிவதில்லை. நாடக ஆசிரியர்களுக்கு, இவைகளை அடித்துப் பேசுவதற்குப் போதிய துணிவு ஏற்பட வில்லை. நாஸ்திகன், மதத் துரோகி, போக்கிரி, சமூகத் துவேஷி என்ற பட்டங்கள் வருமோ என்று நாட காசிரியர்கள் அஞ்சுகிருர்கள். ஆசிரியர்கள் அஞ்சி அஞ்சிச் செத்த காலம் போதும். இனி அவர்கள் அஞ்சினுல், அவர்களுடைய அச்சம் தமிழர்களின் மரண வீழ்ச்சிக்கு உடந்தை என்பதில் சந்தேகமில்லை.

வீராவேசத்தை வளர்க்கும் நாடகம் எழுதினல், வெள்ளைக்காரர்களுக்குக் கோபம் வரும், சட்டம் ஆசிரியரின் தோளிலே சவாரி செய்யும் என்று பயந்து பிரயோசனமில்லை. தமிழர்கள் பயப்படுவதா யிருந் தால், அவர்கள் பயப்பட வேண்டிய பொருள் களின் ஜாப்தாவை ஒரு பெரிய புஸ்தகமாக எழுதி விடலாம். பயந்தவனுக்கு உலகத்திலே சுகம் ஏது? கௌரவம் ஏது? கண்ணியம் எங்கிருந்து வரும்? நல்ல ஆகாரத்தை விரும்பும் நமது உடலை, பயத்துக்கு ஆகாரமாய் சமர்ப்பிக்கவா நாம் இந்த ஜன்மம் எடுத்தோம்? பயத்தையும் ஏக்கத்தையும் போக்கக் கூடிய நாடகம் தேவை.



## 38. எதற்கும் மனசே காரணம்!

மனதுதானே காரணம்! இது ஒரு ஆச்சரிய மான சொல் அடுக்கு. வெள்ளைக்காரர்கள், குண்டு, துப்பாக்கி, பீரங்கிகளைக் கொண்டு, தற்காப்புத் தேடிக் கொள்ளுகிறார்கள். வெள்ளைக்காரர்களுக்கு, தங்கள் விரோதிகள் ஒழிந்தாலொழிய, தூக்கம் வருவதில்லை. விரோதத்தின் உண்மையான காரணத்தை அவர்கள் ஒளிப்பதுமில்லை, மறப்பதுமில்லை. மனம்தானே கார ணம் என்று பொய்ச் சமாதானம் செய்துகொண்டு, எந்த இழிவான நிலையையும் வாழ்க்கையில் ஏற்றுத் திரிவதில்லை.

மனப் பிராந்தி என்பது மகத்தான தத்துவ உண்மை. (பிராந்தி என்பதைக் குடிக்கக்கூடிய வஸ்து வாக எண்ணவேண்டாம்.) மனப் பிராந்திக்கு ஒரு கதை உண்டு. குருட்டு இருட்டிலே, ஒருவன் வழி நடந்துகொண்டிருந்தான். அவன் போய்க்கொண் டிருக்கையில், வழ வழப்பான ஒன்றை மிதித்தான். ஏதோ கவ்வினது போல், அவனுக்குத் தோன்றிற்று. இருட்டா யிருந்தபோதிலும், சரசர வென்று பாம்பு பக்கத்தில் ஓடினதையும் பார்த்துவிட்டான்.

நடந்தது இவ்வளவுதான். முடிவு என்ன? அவன் இறந்துபோனான். இந்த மாதிரி சம்பவங்கள் நாட்டில் நேர்ந்திருப்பதாக, பெரியவர்கள் சொல்லுகிறார்கள். மனிதன், பாதையில் போகையில் என்ன நடந்தது என்று பார்ப்போம். அவன் வழவழப்பான பழு தையை மிதித்தான்; காய்ந்த மாங்கொட்டையின் பேரில் அவன் கால் வாய்க்கவே, அது அவன் காலைக்

கவ்விக்கொண்டது. பாம்பை அவன் கண்ணுல் பார்த்துவிட்டான். நடந்தது இதுதான். ஆனுல் அவன் இறந்தது உண்மை.

அவன் பாம்பு கடித்து இறக்கவில்லை; அவன் மாண்டுபோனதற்கு, அவன் மனதுதானே காரணம். அவன் மரித்தது பாம்பின் விஷத்தால் அல்ல; அவன் இறந்தது அவனுடைய மனதின் விஷத்தால், விஷமத்தால். மனது ஒன்றே மனிதனை ஆட்டிவைக்கிறது என்ற உண்மையை, ஆயிரக் கணக்கான நிகழ்ச்சிகளின் மூலமாய், நமது பெரியவர்கள் கண்டார்கள். மனதுதானே எல்லாவற்றிற்கும் காரணம் என்பதை உலகத்துக்குச் சொன்னுர்கள்.

இந்த மகத்தான உண்மை பிறந்த லக்கினத்தில் கோளாறு இருந்ததோ என்னவோ, அது இப்பொழுது மிகவும் சீரழிந்து நிற்கிறது. வெற்றியோ தோல்வியோ, வாழ்வோ தாழ்வோ, இன்பமோ துன்பமோ, சுகமோ கஷ்டமோ, பெருமையோ சிறுமையோ, அழகோ அவலட்சணமோ — இவை யாவும் ஒவ்வொருவர் உள்ளத்திலும் இருக்கிறது, வெளியில் இல்லை என்பதைக் குறிப்பிடுவதற்கு, மனம்தானே காரணம் என்று பெரியவர்கள் சொன்னுர்கள்.

மனிதனுடைய வெற்றிக்கு, வீர வாழ்வுக்கு, இன்பத்துக்கு, சுகத்துக்கு, பெருமைக்கு, நேர்த்தி உயர்வுக்கு, தைரியத்துக்கு, ஊக்கத்துக்கு, உழைப்புக்கு — இவைகளின் பொருட்டு மனம்தானே காரணம் என்று பெரியவர்கள் சொன்னுர்கள். நம்மவர்களோ, இவைகளை மறந்து, இவைகளின் எதிரிடைகளைக் கைக்கொண்டிருக்கிருர்கள். ஊக்கத்துக்கும் உள் வலிக்கும் தோன்றிய உண்மையை, எல்லா

இழிவு நிலைமைகளுக்கும் சமாதானம் சொல்ல, உப யோகித்து வருகிறார்கள். என்ன கேவலம்!

சக்தியைத் தூண்ட எண்ணிய உண்மை, எத் தகைய பலவீனத்தைப் பற்றியும் கவலை யில்லாமல் சமாதானம் சொல்லுவதற்காக உபயோகப்பட்டு வரு வதை, நீங்கள் பார்த்திருப்பீர்கள். ஞாபகமூட்டுகிற வேலைதான் என்னுடையது. ஒரு வார்த்தையின் அர்த்தத்தை உணர்ச்சியில் ஏற்றிக்கொள்ளாமல், அதை உபயோகப்படுத்துவதால் லாபமுண்டோ?

கலியாணம் என்றால் என்னவென்று ஒன்றுமே அறியாத சிறு பையன், தனக்குக் கலியாணம் என்று சொன்னால், உங்களுக்குச் சிரிப்பு வரத்தானே செய் யும். மனது என்பது என்னவென்று தெரிந்து கொள்ளாமலே, நாம், நிமிஷத்துக்குப் பல தடவைகள் 'மனது, மனது' என்று சொல்லுகிறோம். சின்னப் பிள்ளைகள், 'அறஞ் செய விரும்பு' என்று வாய்பாடு சொல்லுவதைப் போலச் சொல்லுவதற்கும், நம்மில் வயது நிறைந்த குழந்தைகள், 'மனதுதானே கார ணம்' என்று சொல்லுவதற்கும் என்ன வித்தி யாசம்?

'அந்தக் காரியத்தைச் செய்யவேண்டுமே; ரொம்பக் கஷ்டமாயிற்றே' என்று ஒருவனைக் கேட் டால் அவன் தயங்காமல், 'என்ன பிரமாதம்! மனது தானே காரணம்' என்று கூசாமல் சொல்லுகிறான். இப்படிச் சொல்லுகிறவன் பலசாலியோ என்று பார்த் தால், சொல்லுவதற்கு எனக்குக் கூச்சமா யிருக்கிறது. எல்லா பலவீனங்களுக்கும் அவன்தான் இருப்பிடம். கையாலே தொட்டு ஒன்றையும் செய்யாத கபோதி அவன்.

மனதுதானே காரணம் என்று தான் சொல்லி விட்டால், பூரண ஞானமும் தனது உள்ளத்தில் பொலிந்து நிறைந்திருப்பதாக அவன் எண்ணிக் கொள்ளுகிறான். இதைக் காட்டிலும் கேவலமான அசட்டுத்தனம் உலகத்தில் உண்டா? அபயம்கொடுத் தேன் என்று தைரியம் சொல்லவேண்டிய கையை, பிச்சை வாங்குவதற்கு உபயோகப்படுத்தலாமா? நம் முடைய பெருமை வாய்ந்த மூதாதைகளின் பெயர் கெட்டுப்போகும்படியாக, சொல்லிலும் செயலிலும் சக்தி தோன்றாதபடி நாம் நடந்துகொள்ளலாமா?

'சந்திர சூரியர்கள் நுழையக்கூடாத உன் அரண் மனையைக் காட்டிலும் சந்திர சூரியர்கள் சதா வாசம் செய்யும் எங்கள் ஓட்டைக் குச்சுக் குடிசைகள் உயர்ந்தவை' என்று பண்டைக் காலத்து அரசர்க ளிடம், நமது ஒப்பற்ற மூதாதைப் பெரியார்கள் சொன்னார்கள். அவர்களுடைய தைரியமும் மன வலிமையும் எங்கே? மனதுதான் காரணம் என்று, கைக்கும் வாய்க்கும் பற்றாத சம்பளத்தில் ஆசை கொண்டு, உளறும் நம்மவர்களின் அவல நிலை எங்கே? தெய்வத் தச்சன் செய்த ஏணி வைத்துப் பார்த்தாலும் எட்டாதே!

நம்மவர்களின் பலவீன வேதாந்தம் போலித் தத்துவம் உங்களுக்குப் பிடிக்கிறதா? எனக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவேயில்லை. விருப்புக்கும் வெறுப்புக்கும் மனதுதானே காரணம் என்று பொறுப்பும் கவலையுமில்லாமல் நீங்களும் சமாதானம் சொல்லிவிடுவீர்களோ?

'மனதுதானே காரணம்' என்று சொல்லுபவர் கள், சாப்பிடாமல் சும்மா இருந்துவிடுவார்களா?

அவர்கள் தூங்குவதில்லையா? தூங்குவதற்கும் பஞ்சணை மெத்தை வேண்டியிருக்கிறதே! அவர்களுக்குக் கலியாணம் வேண்டாமென்று அதை ஒதுக்கி வைத்து விடுகிறார்களா? பணம் எதற்காக? அவர்கள் மனதைக் கொண்டு கரை ஏறிவிடலாமே! அவர்கள் சொல்லுகிற சமாதானம் சுத்தப் பொய். தங்கள் சோம்பலையும் பலவீனத்தையும் திரை போட்டு மறைத்துக்கொள்ள இது ஒரு ஏற்பாடு. மனதின் வலிமையைக் கண்டுபிடிக்க முயலாத மாயச் சூதர்கள் இவர்கள். இருக்கிற வரையில் பிறருக்குச் சுமையாய் வாழ்ந்துவிட்டு, பின் வரும் சந்ததியார்களுக்குத் துன்ப மூட்டையைப் பெரிதாய்ச் சேர்த்து வைத்துவிட்டுப் பரலோகம் செல்லுபவர்கள்!



## 39. வீட்டோடு வாசல்

நம்ம ஜனங்கள் எப்பொழுதும் வீட்டோடு வாசல் என்று சொல்லிக்கொண்டிருப்பதை, அலுத்துப் போகும்படியாக, நாம் கேட்டுக்கொண்டிருக்கிறோம். வீட்டோடு வாசல் எப்பொழுதும் இருக்கும். வீட்டுக்குத்தான் வாசல் உண்டு. இவைகளை ஒப்புக்கொள்ள ப்ரிவி கௌன்சில் அப்பீல்வரை போக வேண்டியதில்லை. சந்தேகமிருந்தால் வீட்டு வாசலிலேயே தீர்த்துக்கொள்ளலாம்.

ஒரு மனிதனை நேரே பார்க்காவிட்டாலும், அவனுடைய தன்மையை அவன் பழகும் நண்பர்களின் மூலமாய்த் தெரிந்துகொள்ளலாம் என்பது உலகப் பிரசித்தம். ஒரு கூட்டத்தின் தன்மையை, அதனுடைய வழக்கப் பேச்சிலிருந்து தெரிந்துகொள்ள முடியும். ஒரு பானைச் சோற்றைப் பதம் பார்ப்பதற்கு ஒரு பருக்கைச் சோறு போதும் என்கிறார்களல்லவா? மனிதனுடைய தன்மையை அவன் பேச்சிலிருந்து அறிய முடியும்.

மதனகோபாலன், வேலைக்கு மனுப் பண்ணிக்கொள்ளுகிறான். தூர தேசத்திலிருந்து உயர்ந்த சம்பளத்துக்கு, அவனுக்கு ஒரு உத்தரவு வருகிறது. இரண்டு வேளைச் சாப்பாட்டுக்கு காணும்படியாக உள்ளூரிலேயே அவனுக்கு ஒரு வேலை கிடைக்கிறது. மதனகோபாலன் நிச்சயமாய் உள்ளூர் வேலையைத்தான் ஒப்புக்கொள்ளுவான். ஏன்? அது வீட்டோடு வாசல். இதற்கு யாரால் எதிர்வாதம் செய்யமுடியும்?

கோடை யிடிக்கு இரண்டு கல், கீழ் காற்றுக்குப் பத்துக் கல், குடும்பச் சண்டை அமர்க்களத்திஞல் அநேகம் கற்கள் சரிந்துபோய், அடை மழை காலத்தில் சுவரே சாய்ந்துபோஞல், வீடு கட்ட வழி இருக்காது. அப்பொழுதும் மதனகோபாலன் வீட்டோடு வாசல் என்ற ஜபத்தை நிறுத்த மாட்டான். கொல்லை மரத்தில் பணம் காய்ப்பதில்லை என்பது அவனுக்குத் தெரியும். இருந்தாலும் வீட்டோடு வாசல்!

வீட்டோடு வாசல் என்று சொல்லுகிருர்களே, அது திருப்தியால் ஏற்பட்டது என்று நினைக்கிறீர்களோ! இல்லை. இந்த வழக்க வார்த்தைகளுக்குக் காரணம் பயம், கோழைத்தனம். வீடு, சாக்கடை, எருமைக் கன்றுக்குட்டி, ஸ்நானம் செய்கிற ஆற்றின் துறை — இவைகளை மட்டும் தெரிந்துகொண்டு ஊர் வம்பு அளக்கிற பாட்டிமார்களின் நினைப்பு என்ன தெரியுமா? தங்கள் ஊருக்கு வெளியே காடு என்றும், அதிலே மனிதனை ஒரேயடியாய் அடித்துத் தின்னும் பயங்கர மிருகங்கள் வாழ்கின்றன என்றும் அவர்கள் நினைக்கிருர்கள். இந்த நினைப்புக்கு வீட்டோடு வாசல் பொருத்தந்தானே?

நடந்தால் மயக்கம் வரும்; ஓடிஞல் கால் முறியும்; கோலி ஆடிஞல் கை ஒடியும்; பந்து விளையாட்டிலே பொட்டிலே படும்; வண்டியில் ஏறிஞல் குடை கவிழ்ந்துபோகும்; ஆற்றில் நீந்திஞல் வெள்ளம் அடித்துக்கொண்டுபோகும்; அல்லது மடு பாதாள லோகத்துக்கு இழுத்துக்கொண்டு போய்விடும். இந்த மாதிரி பெரியவர்கள் நினைக்கிற வீட்டிலே குழந்தைகள் எப்படி வளரும்? மார்பிலே சீவன் இருக்கிறதோ இல்லையோ என்று சந்தேகம் கொள்ளும்படியாக வள

ரும் இந்தக் குழந்தைகளுக்கு 'வீட்டோடு வாசல்' பிடிக்காமல், வேறு யாருக்குப் பிடிக்கும்?

இதற்கு நேர் எதிரிடையாக, அந்நிய நாட்டில் குழந்தைகளை வளர்க்கிறார்கள். குழந்தைகள் பயப் படும்படியாக அவர்கள் வளர்ப்பதில்லை. ஆறு எதற் காக என்றால், நீந்துவதற்கு என்று குழந்தை பதில் சொல்லும். எந்தப் பொருளைப் பார்த்தாலும் அதன் பேரில் எப்படி அதிகாரம் செய்யலாம் என்று அந்நிய நாட்டுக் குழந்தைகள் யோசித்துக்கொண்டிருக் கும். நமது குழந்தைகளோ, எதைக் கண்டு பயந் தோடலாம் என்பதற்குச் சாக்குத் தேடுகின்றன. ஏன்? வீட்டோடு வாசல் பழக்கம்.

கையையும் காலையும் பத்திரமாய்க் காத்துக் கொள்ளவேண்டும் என்று நினைக்கிறவன், கையையும் காலையும் சேர்த்துக் கட்டிக்கொண்டு உட்கார்ந்து கொண்டிருந்தால், அவன் எண்ணம் நிறைவேறுமா? அவனை, எறும்புக் கூட்டங்களே அரித்துத் தின்று விடும். அவனுடைய கை கால்கள் சூம்பிப் போய் விடும். இது அனுபவம். உபயோகப்படுத்தாத பணம் பூதம் காத்துப் போகிறது என்கிறார்கள்.

அமெரிக்கா, இங்கிலாந்து, ஜப்பான் முதலிய தேசங்களிலிருந்து இந்தியாவுக்குப் பணம் தேட வருப வர்கள், தங்கள் வீட்டையும் வாசலையும் நினைக்காம லிருக்கிறார்களா? நமது 'வீட்டோடு வாசல்' புலி களைக் காட்டிலும் அந்நியர்களுக்குத் தங்கள் வீட்டு அபிமானம் ரொம்ப ஜாஸ்தி. தங்கள் வீடு செழிப்ப தற்காகத்தான் அவர்கள் இந்த நாட்டுக்கு வரு கிறார்கள்; வந்திருக்கிறார்கள்; இனியும் வரப் போகிறார்கள்.

பழைய காலத்தில், இந்த 'வீட்டோடு வாசல்' புளித்த ஏப்பம், நம்முடைய மூதாதைகளுக்கு இருந்ததில்லை. ஜயிப்பதற்கு இனியும் உலகம் இல்லையே என்று ஏங்குவதைப் போல, அவர்களுக்கு எங்கு போனாலும் ஜயத்துக்கு மேல் ஜயம். மண் உலகம் போதாமல், தேவலோகத்தையும் பாதாளத்தையும் அவர்கள் ஜயித்ததாகப் புராணம். அந்தக் காலத்தில் பாட்டிமார்கள் இருக்கவில்லையா ? அப்பொழுதும் வீடும் வாசலும் உண்டு. ஆனால் அமுக்குப் பிசாசுகளைப் போல இருக்கவில்லை.

எழுபதுக்கு மேல் வயதான பாட்டி வீடு முழுதும் தேடிப் பார்த்தாள். தனது அருமைப் பேரனைக் காணவில்லை. ஊர் முழுதும் தேடினாள். அப்பொழுதும் காணவில்லை. பல இடங்களுக்கு ஆட்கள் போனார்கள் ; பயனில்லை. பாட்டிக் கிழவி ஒரு வழி போனாள். புதர் வழி ; கல்லும் காடும் பாதையிலே. விழுந்தால் எலும்புகள் நொறுங்கிப் போகும். கவலை இல்லை. குழந்தையைத் தேடுவதில் அவ்வளவு ஆவல். கடைசியாகக் கருங் கற்களைத் துளைத்துக்கொண்டு, ஆகாய கங்கையைப் போலக் கடகடவென்று விழும் நீர்வீழ்ச்சியின் அருகாமையில், ஒரு பாறையின் பேரில், தனது அருமைப் பேரன் உல்லாஸமாய் வீற்றிருப்பதைக் கண்டாள்.

பாறை சரிந்து விழுமோ என்று பாட்டிக்குப் பயம். பையனுக்கு அதைப் பற்றிக் கவலையே கிடையாது. நீர்வீழ்ச்சியின் ஸ்வாரஸ்யத்தை அனுபவித்துக்கொண்டு, சிறிய சிறிய கற்களை விட்டெறிந்து விளையாடிக்கொண்டிருந்தான். சுருட்டி வாரி, பையனைக் கட்டி அணைத்துக்கொண்டு, 'நீ இங்கே

இருக்கலாமா? உனக்குப் பயமில்லையா?' என்று கேட்டாள். 'பாட்டி, பயம் என்றால் என்ன?' என்று பையன் கேட்டானும். பின் காலத்தில், பையன் கடற்படை வீரனானன் என்பது கதை. இந்தப் பையனுக்கு வீட்டிலும் வாசலிலும் அபிமானம் இல்லையா?

நமக்கு எல்லா சங்கதிகளும் 'வீட்டோடு வாசல்'தான். இதன் முடிவு என்ன தெரியுமா? நம்முடைய வீடு பாழாய்ப் போய்விட்டது! நமது நாடு நம்முடையதல்ல! தப்பிப் பிழைத்து ஓடுவதற்கு வாசலும் தெரியவில்லை! வேதத்திலே உயர்ந்த தத்துவ உண்மைகள் இருக்கலாம். ஆனால், வீட்டுத் தத்துவத்தைப் பொறுத்ததுதானே வாழ்வு? மலையிலே விளைந்தாலும் அது உலையிலேதான் சமைய வேண்டும்.

வாசலை மூடிவிட்டு வீடுகட்டினால்தான் இந்தப் பேச்சுத் தொலையும் போலிருக்கிறது! சக்தி யிருக்குமாகில் வீட்டையும் வாசலையும் எத்தனையோ வகைகளில் திருத்தி அமைத்துக்கொள்ள முடியும். சக்தியை இழந்தால், வீடும் சரி, வாசலும் சரியே — எல்லாம் தொலைந்துபோகும். வீட்டோடு வாசல் ஜபம் நமக்கு எதற்காக! வீட்டையும் வாசலையும் நம்மால் காப்பாற்ற முடியும். 'வீட்டோடு வாசல்' நம்மை ஒரு நாளும் காப்பாற்ற முடியாது. ஆயிரம் வருஷத்துச் சரித்திரத்தைப் படித்துத் தெளிந்துகொள்ளுங்கள்.

## 40. இந்தத் தேசம்....!

எதிர்பாராத ஆனந்தம். 'வருகிறேன், வருகிறேன்' என்று புலிப் பையனைப் போல் பலகாலும் பயமுறுத்திக்கொண்டிருந்த நண்பர் திடீரென்று வந்து தோன்றினர். சம்பிரதாய யோக க்ஷேமங்களைப் பற்றி விசாரிக்க, எங்களுக்கு எண்ணமே தோன்றவில்லை. மௌனம் எல்லா சம்பத்துகளுக்கும் சாதகம் என்ற அற்ப சிந்தனையால் அல்ல. மிதமிஞ்சி அன்பும் ஆவலும் குடிகொண்டிருக்கிற சந்தர்ப்பங்களில் சத்தத்துக்கு வேலையே கிடையாது.

மௌனம் உயர்ந்த பொருள்தான். ஆனால் அந்தச் செல்வம் நீடித்திருப்பதில்லை. நோட்டை மாற்றினால், ரூபாயாகவும் சில்லறையாகவும் மாறி, அப்படியே உருப்படியில்லாமல் செலவழிந்து போகிறது போல, மௌனத்தின் வலிமையும் பேசத் தொடங்கியதும் சிதைந்து போய்விடுகிறது. இருந்தாலும், பேச்சைப் பாராட்டுகிறார்கள். 'பேசாமடந்தையோ?' என்று மௌனத்தைக் கேலி செய்கிறார்கள். நல்லது பொல்லாதது தெரியாத உலகத்திலே, அதன் போக்கின்படி போனால்தான், பைத்தியம் என்ற பெயர் வாங்காமல் இருக்கலாம்.

அந்த ஆசையை ஒட்டியே, நண்பரும் நானும் மௌனத்துக்குத் துரோகம் செய்துவிட்டு, பேச்சுக்கு பக்தி செலுத்தத் துவக்கினோம். எங்களுக்குள்ளே போட்டி. யார் அதிகமாகப் பேசுகிறது என்பதற்காகப் போட்டியல்ல. யார் அதிகமாகப் பேசாமல் இருப்பது என்பதற்குப் போட்டி. ஆகவே, ஒருவர்

வாயை மற்றவர் பார்த்துக்கொண்டிருந்த வண்ண மாக, சிறிது சிறிது பேசினோம்.

கடைசியாக, அற்புதமான ஒரு செய்தியை அவர் சொன்னார். நான் ஆனந்த பரவசத்தால் திடுக் கிட்டுப் போனேன்.

'அப்பா வந்துவிட்டார்!' என்றார்.

'யார்! உங்கள் தகப்பனாரா? இருபது வருஷ மாகத் தேடியும் அகப்படாதவரா? என்ன அதிசயம்? எப்பொழுது வந்தார்?' என்றேன்.

'வந்து மூன்று நாளாச்சு, அவர் வந்த ஆனந்தத் தால், எல்லாம் மறந்துபோனேன். ஆபீசுக்குக்கூடப் போகவில்லை. லீவு எடுத்துக்கொண்டேன்.'

'அப்படியா? உங்கள் பையன் ராமு, தாத்தா வைப் பார்த்து என்ன சொல்லுகிறான்?'

'பேரனும் பாட்டனாரும் பேசிக்கொள்ளு கிறதை நீங்கள்தான் கேட்டு ரசிக்க முடியும். கட்டா யம் நாளைக்கு வீட்டுக்கு வாருங்கள்!' என்றார்.

நண்பரும் நானும் ஒரு ஊர்க்காரர்கள். அவரு டைய இருபத்தைந்தாவது வயதில், அவருடைய தகப்பனார் ரூ. 600 மாதச் சம்பளமுள்ள 'துப்பட்டி கலெக்டர்' வேலையை ராஜினாமா செய்துவிட்டு, 'நான் எங்கேயோ போகிறேன். என்னைத் தேட வேண்டாம்!' என்று துணுக்கு ஒன்றை எழுதி வைத்துவிட்டு, மறைந்து போனார்.

இப்பொழுது இருபது வருஷங்களுக்குப் பிறகு அவர் திரும்பி வந்திருக்கிறார் என்றால், அவரைப் பார்க்க யாருக்குத்தான் ஆவல் இருக்காது? ஒரு ரூபாய் சில்லறையை குபேர சம்பத்தாக மதித்து, அதை எண்ணி எண்ணிப் பார்த்து ஆனந்தமடைந்து

வரும் இந்த நாட்டிலே, அறுநூறு ரூபாய் வேலையை விடுவதென்றால், லேசான காரியமா? அப்பேர்ப் பட்ட மனிதர் வீட்டுக்கு மறுபடியும் திரும்பிவந்தார் என்றால், அதுவும் லேசானதா?

அவர் வந்திருக்கிற சேதியை நான் கேள்விப்பட் டாலே போதும், நான் போய்ப் பார்த்திருப்பேன்; நண்பரின் அழைப்புத் தேவையே இல்லை. எனவே, மறுநாள் நண்பரின் வீட்டுக்குப் போனேன். சரியான சமயத்தில்தான் போய்ச் சேர்ந்தேன். பாட்டனாரும் பேரனும் குஸ்தி போட்டுக்கொண்டிருந்தார்கள். கைக்குத்தல்ல; வாய்ப்போர்தான்.

என்னைக் கண்டதும், 'வா, அப்பா!' என்று உப சரித்தார். நண்பர் இல்லை. பேரன் ராமு, பக்கத்தில் ஒரு பத்திரிகையை மடியில் வைத்துக்கொண்டு, பெரியவரின் வாயைப் பார்த்துக்கொண்டிருந்தான்.

'ரொம்ப வருஷமாச்சு, பார்த்து!' என்றேன்.

'பார்க்காமல் போனால், அப்படித்தான் வருஷங் கள் வளர்ந்துகொண்டே போகும்' என்று பெரியவர் குறும்பாகச் சொன்னதும், ராமு களுக்கென்று சிரித்து விட்டு, சிரித்தது தவறு என்று திடீரென முடிவுக்கு வந்த மாதிரி வாயை இறுக மூடிக்கொண்டான்.

'எப்படியோ, மறுபடியும் பார்க்கக் கொடுத்து வைத்ததே!' என்று சன்னக் குரலிலே, உபசாரம் பேசினேன்.

அவர் மறைந்து போகும் பொழுது, அவருக்கு வயது நாற்பத்தைந்து. இப்பொழுது அறுபத்தைந்து என்று சொல்லவேண்டியதில்லையே! வெள்ளிப் பனி முடி! வெள்ளிப் பனி தாடியும்கூட! துவைத்துக் கட்டிக்கொண்டிருக்கும் தாவள்யமான கதர் வேஷ்டி

கள். செக்கச் செவே ரென்று சிவந்த மேனி. கருணை யும், குறும்பும், குதூகலமும் தாண்டவமாடும் கண் கள். காலின் மேல் கால் போட்டுக்கொள்ளும் காந்தி ஆசனம். பதுமையைப் போல வீற்றிருக்கும் இயல்பு. அபயமளிப்பது போலிருக்கும் கைகள். சிரிப்பை அடக்கிக்கொண்டிருக்கும் உதடுகள். பொதுவாக கம்பீரமான தோற்றம்.

இவ்வளவும் சேர்ந்திருந்தால், பக்கத்தில் ராமு அட்டஹாசமாக, சமமாக உட்கார்ந்துகொண்டிருந் தாலும், நான் பெரியவரை நமஸ்காரம் செய்யாமல் இருக்க முடியுமா?

'அப்பா! நமஸ்காரத்தை நிறுத்து. தாடிக்கும் நரைக்கும் நமஸ்காரம் என்று ராமு மனதுக்குள் ளாகவே கேலி செய்தாலும் செய்வான். வெள்ளைக் காரர்களைக் கும்பிட்டால், அது அவன் கண்ணில் நியாயமாகப் பட்டாலும் படும்' என்று பெரியவர் மெதுவாக ராமுவின் வாயைப் பிடுங்கப் பார்த்தார். அவர் நோக்கம் பலித்துவிட்டது.

ராமு கம்பீரமாக ஆரம்பித்தான். 'ஆமாம்! தடையென்ன? வெள்ளைக்காரர்களைத் தெய்வங்க ளாகக் கொண்டாடினாலும், அது பொருத்தமாகத் தான் இருக்கும். என்ன முயற்சி! என்ன உழைப்பு! எவ்வளவு சேர்ந்து வாழும் ஆவல் அவர்களிடம் இருக் கிறது! எவ்வளவு பிடிவாதம்!' என்று அடுக்கிக் கொண்டே போனான்.

பாட்டனார் சிரித்தார். 'சிரிக்கிற வித்தை எல்லோ ருக்கும் முடியும். செய்கிற வித்தைதான் எல்லோருக் கும் கஷ்டம். தாத்தா! சிரிக்கிறீர்களே! பாருங்கள். இமயமலையின் நங்க பர்வதச் சிகரத்தின் முடியை

எப்படியாவது தொட்டுவிடுகிறது என்று கங்கணம் கட்டிக்கொண்டு, ஜர்மானியர்கள் வந்திருக்கிறார்களே!' என்று படபடத்து, பத்திரிகையை, சாட்சிக்காகப் படிக்கத் துவக்கினான்.

'சாட்சி வேண்டாம்; நீ சொல்வதே போதும்' என்றார் பெரியவர்.

'இதை யெல்லாம் கேட்டால், உங்களுக்கு உடம்பை உறுத்துகிறாப் போலிருக்கிறதோ?' என்று ராமு கள்ளங் கபடின்றிப் பதறினான்.

பாட்டனார் என்னைத் திரும்பிப் பார்த்தார். 'ஏன் அப்பா, நிற்கிறாய்? உட்காரு' என்றார். நான் நின்றுகொண்டிருந்ததுகூட அவர் கவனத்தில் படவே யில்லை.

'அப்பா! குழந்தை! இந்தத் தேசம்...' என்று பெரியவர் ஆரம்பிக்கும் பொழுதே, ராமு, 'தாத்தா! என்னைக் குழந்தை என்று அழைத்துவிட்டால், உங்கள் கேஸ் ஜயித்துவிட்டது போலாகிவிடுமோ? இந்தத் தேசம்...பொல்லாத, உயர்ந்த தேசம்' என்று குரலில் ராகம் போட்டு வேலை செய்தான்.

தாத்தாவோ ஸ்தூபியிலே அமைந்திருக்கும் பதுமையைப் போல, சாந்த மயமாக விளங்கினார்.

'என்ன தாத்தா! ஒரே மௌனம் சாதிக்க ஆரம்பித்துவிட்டீர்களே!' என்று ராமு, வெற்றிக் குரலோடு கேட்டான்.

குழந்தை ராமு வெறும் குழந்தை யல்ல. அவன் பி. ஏ. படிக்கிற குழந்தை. ஐரோப்பிய நாகரிகத்தை அப்படியே அடிபணியும் குழந்தை! தாத்தாவைப் பத்தாம் பசலிப் பேர்வழி என்று மதிக்கும் இறுமாப்புக் குழந்தை. அந்தக் குழந்தை பேசுவதை மழலை

யாகக் கொண்டு, தாத்தா ஆனந்தப்படுகிருர். நானே, 'மட்டு மரியாதை தெரியாத, பிஞ்சிலே பழுத்து வெம்பிப் போகும் குழந்தை' என்று ஆத்திரப்பட்டேன்.

தாத்தா மெதுவாக ஆரம்பித்தார். 'இனிமேல் ராமுவைக் குழந்தை என்ருல் கோபம் வரும். இருந்தாலும் நான் என்ன செய்கிறது? என் குழந்தை வயிற்றில் உதித்த பெரியவாள் என்று வேண்டுமானுல் சொல்லுகிறேன்' என்ருர்.

ராமுவின் முகம் கோவைப் பழமாகச் சிவந்து போய்விட்டது. தாத்தாவோ விடவில்லை. 'ராமு! உன் வெள்ளைக்கார அர்ச்சனை முடிந்துவிட்டதா? பாக்கி யிருக்கா? பாக்கி யிருந்தால், அர்ச்சனையை முடி. நான் வேறுவிதமாக அர்ச்சனை செய்யவேண்டும்' என்று சிரிப்பால் உடம்பு குலுங்கிக்கொண்டே பாட்டனுர் பேசினுர்.

'உங்கள் அர்ச்சனையை ஆரம்பிக்கலாம்' என்று ராமு உத்தரவு கொடுத்தான்.

தாத்தா சொல்லுகிருர்: 'இரண்டு பேரும் கேளுங்கள். இந்தத் தேசம் ரொம்பவும் விசித்திரமான தேசம். உலகத்திலேயே சிரேஷ்டமான தேசம். இந்தத் தேசத்திலே கற்பனை செய்து பார்க்க முடியாத படிக்கு அபூர்வமான சம்பவங்கள் நேர்ந்திருக்கின்றன. உலகத்திலே எங்கும் "ஈடு ஜோடி" காண முடியாத பெரியார்கள் இந்தத் தேசத்திலேதான் தோன்றியிருக்கிருர்கள். அவர்கள் செய்திருப்பதைப் பார்த்தால், அறிவாளிகள் நடுங்கிப் போவார்கள்; பாமரர்கள் பிரமித்துப் போவார்கள்.'

'ஒரே ராகம்; ஒரே தாளம்; ஒரேவித காலட்சேபக் கதை. அப்பா! எத்தனை நாள் கேட்டுக்

கொண்டிருக்கிறது ?' என்று ராமு, அலுத்துக் கொண்டு சொன்னான். அவனுடைய பதட்டத்தில் எனக்குக் கோபம். ஆனால், பாட்டனாரோ, சுவரில் எழுதிய சித்திரத்தைப் போல, அப்படியே, அமைதி யுடன் வீற்றிருக்கிறார்.

பாட்டனார் மறுபடியும் சொல்லுகிறார் : ' இந்தத் தேசம் ஆண்டவன் வெறி பிடித்த தேசம். ஆண்ட வனைத் " தேடிக் கண்டுகொண்டேன் " என்று களிப் புடன் கூத்தாடின பெரியார்களை இந்தத் தேசத்திலே தான் காணமுடியும். தெய்வம் உண்டானால், நேரே பார்த்துத்தான் ஆகவேண்டும் என்று பிடிவாதம் பிடித்து வெற்றி பெற்ற உத்தமர்கள் இந்த நாட்டின் தனிப் பொக்கிஷங்களாவார்கள். வேறு எந்த நாட்டி லும் காண முடியாது.'

' மனப் பிராந்தி ' என்று ராமு முணுமுணுத் தான். எனக்கு ஆத்திரம் தாங்க முடியவில்லை. பாட்ட னாரோ இதை லட்சியமே செய்யவில்லை. அவர் சொல்லுகிறார் : 'ஒவ்வொரு குணமும் சமுத்திரத்தைப் போல. சமுத்திரத்தின் கரையைக் காண முடியுமா? ஆனால், குணங்களின் கரையைப் பார்த்திருக்கிறார்கள் இந்த நாட்டில். புராணங்களை எடுத்துக்கொள். மெய்மறந்தும் பொய் புகலாத அரிச்சந்திரனைப்போல, வேறு நாடுகளில் கண்டதுண்டா? சகோதர வாஞ் சைக்கும் நியாயத்துக்கும் கரையைக் கண்ட பரதனை நாம் வேறு எங்கே காண முடியும்? நாயகனுடைய அழுகிப்போன உடலைக் கூடையில் தூக்கிச் சென்று பாலனம் செய்த நளாயினியை, இந்தத் தேசத்தில் தவிர, வேறு எங்கேயாவது கேள்விப்பட்டதுண்டா? நாஸ்திகம் பேசின தகப்பனையும் மதிக்காத பிரஹ்லா

தனைப் போன்ற ஆஸ்திக பக்தனைப் பற்றி என்ன சொல்லுகிறது ?

'ஐந்து வயதிலே ஆண்டவன் வெறி பிடித்து ஓடின துருவனைப் பற்றி நினைத்தாலே மயிர்க்கூச் செறிகிறது. காலனையே மார்க்கண்டன் வென்றான் என்றால் அது மாயமோ என்று எண்ணவேண்டியிருக்கிறது.'

'அப்புறம்?' என்று ராமு, தனது குரலைக் கொஞ்சம் தளர்த்திக்கொண்டு கேட்டான். எனக்குச் சிறிது சமாதானம் உண்டாயிற்று.

பெரியவர் ஆரம்பித்தார்: 'சரித்திரத்தைச் சொல்லுகிறேன், கேள். புத்தபிரானுடைய துறவைப் போல மாண்புடைத் துறவை, உலகில் எங்கேனும் கண்டதுண்டா, கேட்டதுண்டா ? போர்க்களத்தில் எதிரியை முறியடித்தும், அவனுக்குத் தேவையான பொருளையும் உணவையும் கொடுத்து, உயிரையும் காப்பாற்றி ஊருக்கு அனுப்பின பிருதிவிராஜனுடைய, கட்டுக்கடங்காத பெருந்தன்மையைப் போல, வேறு எங்கேயும் கேள்விப்பட்டிருக்கிறாயா ? ஈசுவரன் நெற்றிக் கண்ணைத் திறந்தாலும் (பாட்டில்) குற்றம் குற்றம்தான் என்று தைரியத்தின் எல்லையைக் கண்ட நக்கீரரைப் போல, உலகில் பார்க்க முடியுமா ? அவமானப்படுத்தியவன் அரசனாயிருந்தால் என்ன என்று, அலட்சியத்துடன், "உன்னை நான் என் அடைப்பக்காரனாகச் செய்கிறேன் !" என்று விருது கூறி, விரதத்தைப் பூர்த்தி செய்த கம்ப நாட்டாரை, வேறு எந்த தேசத்தில் நீ கண்டிருக்கிறாய் ?'

நான் பரவசமடைந்தேன். ஆனால் பெரியவர் நிற்கவில்லை.

சொல்லுகிறார்: 'தன் நாயகனுக்குக் கண் இல்லையே என்று தன் கண்களையும் இறுகக் கட்டிக் கொண்டு, வாழ்க்கை முழுதும் குருடாக இருந்த காந்தாரியை — அப்பா, என்ன சொல்லுகிறது? அனாயாசமாய் சந்திரகுப்தனுக்கு ராஜ்யத்தைச் சம்பாதித்துக் கொடுத்த ராஜதந்திர சிகாமணி சாணக்கியனைப் போல் நீ வெள்ளைக்காரர்களில் கேள்விப்பட்டதுண்டா? ஆம்! உனக்கு ஈசுவரனை நேரில் காண்பிப்பேன் என்று லேசாகச் சொன்ன ராமகிருஷ்ண பரமஹம்சரை எந்த நாடு படைத்திருக்கிறது? காதலுக்காக அழியாச் சின்னமாக விளங்கும் தாஜ் மஹாலைப் போய்ப் பார்.'

ராமு பெருமூச்சு விட்டான். தாத்தாவையே பார்த்துக்கொண்டிருந்தான்.

தாத்தா குரலைத் தணித்துக்கொண்டு பேசுகிறார்: 'ஆயுத மில்லாத போர், ஹிம்சையில்லாத சண்டை என்று நீ வெள்ளைக்கார தேசத்துச் சரித்திரங்களில் படித்ததுண்டா? நெருப்பில்லாமல் சமையல் என்ற விசித்திரத்தைப் போல அது இருக்கிறதல்லவா? இந்த விசித்திரத்தைக் காந்தி செய்திருக்கிறார். அடிமைகளை ஆண்மகன்களாகவும், அகம்பாவிகளை அடக்கமுள்ளவர்களாகவும், பணப் பித்தர்களை மத பக்தர்களாகவும், பகைவர்களை அன்பர்களாகவும், சோம்பேறிகளை உழைப்பாளிகளாகவும், "பேதைகளை" பெண்களாகவும், காமிகளை ஜிதேந்திரியர்களாகவும் இருபது வருஷங்களுக்குள் காந்தி செய்திருக்கும் விசித்திரத்தை, நீ வேறு எந்த நாட்டில் காண முடியும்? இந்தத் தேசம், அப்பா, அற்பர்கள் வாழ்ந்த தேசமல்ல. அசடர்கள் வாழ்ந்த தேசமல்ல. வஞ்

சகர்கள் வாழ்ந்த தேசமல்ல. பஞ்சையர்கள் வாழ்ந்த தேசமல்ல. இந்தத் தேசம்...........'

ராமுவின் கண்களில் நீர் சுரந்து நின்றது. தாத்தாவின் கண்களிலும் அவ்வாறே. பாட்டனும் பேரனும் ஒத்துப்போன காட்சியைக் கண்டு, நான் ஆனந்தக் கண்ணீர் சொரிந்து நின்றேன்.



## 41. மல்லிக் கிணறு கிளப்

எப்பொழுதுமே ஒருவன் வேலை செய்துகொண்டிருக்க முடியுமா? ஒருவன் இடைவிடாமல் கும்பகர்ணன் வேலையும் செய்ய முடியாது. அல்நாஸ்கர் பகல் கனவு கண்டு, அரசன் மகளைக் கலியாணம் செய்து, ஏதோ அவள் செய்த பிழையைப் பொறுக்க முடியாமல், அவளைக் காலால் உதைத்தான். தன் கடையின் கண்ணாடிச் சாமான்களெல்லாம் உடைந்து, அலங்கோலமாக அங்கு மிங்கும் சிதறிக் கிடப்பதைக் கண்டான். இந்த மாதிரி பகல் கனவு காண்பதும் ஆபத்து.

வம்பு அளக்கிற வேலை அநாதி காலம் தொட்டு, ஓர் அருமையான பொழுது போக்காக விளங்கிவருகிறது. ஆனால், ஆரிய-திராவிட, ஹிந்து-முஸ்லிம், பிராமணர் - அல்லாதார், முதலாளி - தொழிலாளி என்று அழுத்தமாகப் பேசப்படும் இந்த நாளிலே, வம்பு பேசிக் கேலி செய்வதும் அசாத்தியம். முதுகுத் தோலைப் பிய்க்கும் நாகரிக விளையாட்டு தோன்றியிருக்கிறது. சின்ன மனிதர்கள், பெரியவர்கள் என்ற மரியாதை இல்லாமல், 'கவண் கல்' பிரயோகம் செய்கிறார்கள்.

வம்பைக்கூட வேடிக்கையாகப் பேசும் வாடிக்கையும் போய்விட்டது. வம்பு பேசுவதிலும், எவ்வளவு சிறிய சம்பவமும் பிரம்மாண்டமாகப் போய்விடுகிறது! மண்ணுளிப் பாம்பு, மலைப் பாம்பாக வம்பில் பெரிதாகுமானால், அந்த வம்பிலும் இனிப்பு இருக்

காது. வம்பு என்ருல் எந்தப் பொய்யையும் கூசாமல் சொல்லலாம் என்ற அசட்டுத் தைரியமுள்ளவர்களிடம், எந்த தர்ம சாஸ்திரத்தைப் பிரயோகம் செய்து பார்த்தாலும், அது கடலில் கரைத்த காயமாக முடியும்.

இப்படியெல்லாம், எல்லாவற்றையும் ஒவ்வொன்ருக ஒதுக்கிக்கொண்டே போனுல், பொழுது போக வேண்டாமா? மனித சாவகாசமே வேண்டாம் என்ற துக்கிரிக் குணம்தான் நம்மைப் பாய்ந்து பிடித்துக் கொள்ளும். ஊசி முனையில் தவம் செய்யும் யோகியானுலும், தான் நின்றதன் பயனுக, ஊசியின் முனை தேய்ந்து போய்விட்டதே என்பதைக் கண்டு சிரிக்க முடியாமல் போனுல், அவனுடைய தவம் தற்கொலையாகவும் சூதாகவும் முடியும்.

இவ்வாறு யோசித்துப் பார்த்தேன். பொழுதோ போகணும். பொல்லாங்கு எதுவும் நேரப்படாது. அதற்கு வழி என்ன என்று அலசி அலசிப் பார்த்தேன். ஏதாவது ஒரு கிளப்பில் மெம்பராகச் சேர்ந்தால் நல்லது என்று பளிச்சென்று தோன்றிற்று.

எங்கே போகிறது? எங்கே போனுலும், பொழுது கூடவேதான் வந்துகொண்டிருக்கும். கடல்கரைக்குப் போவோமென்ருல், மழையில்லாத கால விபரீதத்தால், காற்று வாடை வியாதியாக மாறிவிடுமோ என்று எனக்குச் சந்தேகம். ஆகவே, நல்ல காரியத்தை உடனே செய்துவிடவேண்டும் என்று பெரியவர்கள் சொல்லுகிற உபதேசத்தின்படிக்கு, நேரே, ஒரேயடியாய்ச் சென்று, ஒரு கிளப்பில் மெம்பராகச் சேர்ந்துவிடவேண்டும் என்று தீர்மானம் கொண்டேன்.

'சாகும் வரையில் உண்ணுவிரதம்' என்று சொல்லிக்கொண்டு, பழ ரசத்தை 'பாட்டில் பாட்டிலாகக்' குடிக்கிற தீர்மானத்தைச் சேர்ந்ததா என் தீர்மானம்? 'சுயராஜ்யம் வராவிட்டால், சபர்மதி ஆச்ரமத்தில் இருக்கமாட்டேன்; அதைக் கலைத்து விடுவேன்,' என்று உலகம் நடுங்கும்படி அறிவித்த காந்தியின் தீர்மானத்தைப் போலவா என் தீர்மானம்? 'சக்கரம் சுற்றுகிறது; கபாலம் ஏந்துகிறது,' என்று சொல்லிக்கொண்டு, வேடிக்கையாகக் காலம் தள்ளும் விளையாட்டுக் கிளப்பில் நான் அசல் மெம்பர். ஆகவே, என் தீர்மானத்தை நிறைவேற்றுவதற்கு என்ன இடைஞ்சல் இருக்கிறது?

கிளப் என்றால், என் மனதில் ஒன்றே ஒன்று தான் தோன்றிற்று. என் நண்பர், சாசுவத முகவிலாஸனியான குப்பய்யா சேர்ந்திருக்கும் மல்லிக் கிணறு கிளப்தான் என் நினைவுக்கு வந்தது. அங்கே நேரே போனேன். நண்பர் குப்பய்யா இருந்தார். 'மல்லிக் கிணறு கிளப்பில் நான் மெம்பராகச் சேரப்போகிறேன்,' என்று கம்பீரமான குரலில் அறிவித்துக் கொண்டேன். 'ஜே' போடுவார்கள் என்று நினைத்தேன். கிணற்றில் கல் போட்டது மாதிரிதான் இருந்தது. அவரவர்கள் தங்கள் பேச்சைத்தான் பேசிக் கொண்டிருந்தார்கள்.

'ஏய்! அப்பவே சொன்னேன், கேட்கமாட்டேன் என்றுவிட்டாய். "பச்சை மோகினி," ஒண்ணுந்தர அரபிக் குதிரை. அதன் பேரிலே கட்டு என்றேன். கேட்டியா? ஏழை பேச்சு அம்பலம் ஏறுமா? பக்கத்திலே இதைக் கேட்டுக்கொண்டிருந்த சோப்பளாங்கிப் பேர்வழி, "பச்சை மோகினி"யின் பேரில்

கட்டினுன். இரண்டாயிரம் தட்டினுன்' என்ருர் மெம்பர் பாரங்கன்.

'"பச்சை மோகினி" படா குதிரை! "கில் மி" (என்னைக் கொல் என்பதற்கு ஆங்கிலம்) என்ற குதிரையின் 'பெடிக்ரீ' (பிறந்த வரலாறு) உனக்கு என்ன தெரியும்? அது அசல் இங்கிலீஷ் வம்சம். கல்கத்தாவிலே போன வருஷம் அது ஓடின பொழுது பலே போடு! அதன் பேரிலே கட்டினவன் எல்லாரும் புதையல் எடுத்தது மாதிரி எடுத்தான். "கில் மி" யைப்போல குதிரை வருமா!' என்று நண்பர் 'பிர்' பேசினுர். 'பிர்' என்பது அவரது உண்மைப் பெயரல்ல. அது கிளப்பில், மெம்பர்கள் அரங்கேற்றிய பெயர்.

'எல்லாம் தெரிந்தது மாதிரி பேசிவிட வேண்டாம். "மொட்டை வால்" எப்பேர்ப்பட்ட குதிரை! காற்ருடி மாதிரி பறக்கும். அதற்கு வால் கனம்கூட இல்லை. அதைச் சவாரி பண்ற ஜாக்கி கம்பர்ஸிங் சாமர்த்தியம் யாருக்குத் தெரியும்? அவன் உடம்பு நெட்டி மாதிரி. இங்கிலீஷ் ஜாக்கி கெட்டான்கள், போ! கம்பர்ஸிங் காலிலே அவர்களைக் கட்டி அடிக்கணும்!' என்று மெம்பர் டங்கர அய்யர், ஆவேசத்தோடு, தேசபக்தி கலந்து உபதேசம் செய்தார்.

இதுவரையிலும் மௌனம் சாதித்துக்கொண்டிருந்த 'பானுஸார்' சொல்லுகிருர்: 'நீங்கள் எல்லாரும் குழந்தைகள். உங்களுக்கு என்ன தெரியும்? "அமில் முல்க்" அபாரமான குதிரை. அது பிறந்தவுடனேயே, பால் குடிக்க ஆரம்பித்துவிட்டது! கொள் என்ருல் வாயைத் திறப்பதும், கடிவாளம் என்ருல் வாயை மூடிக்கொள்வதும், அதற்கு இயற்கை

யாகவே வந்திருக்கும் சாமர்த்தியம். "அமில் முல்க்" மட்டும் ஓடுகிறது என்று மனம் வைத்தால், "ரேஸ் கோர்ஸ்" கொள்ளுமா? சண்டி வெறித்தால், காடு போதாதே? ஒரு நாள், பாருங்கோ, "அமில் முல்க்", அபாரமாய் வேலை செய்யப்போறது! அப்போ தெரியும் உங்களுக்கு!'

இந்தப் பேச்செல்லாம் பெரியவர் கரைசாமி அய்யங்காருக்குப் பிடிக்கவில்லை. 'நம்மடவன்கள் எல்லாம் மடையன்கள். ஒரு காரியத்தையும் சரியாய்ச் செய்ய முடியாது. செய்யவும் தெரியாது,' என்று தாம் தாசில் வேலை பார்த்த பொழுது நடந்த ஒரு துக்கடாவை வெளியே எடுத்துவிட்டார்.

நண்பர் குப்பய்யாவுக்கோ, சீட்டாட்டத்தில் பிரமை. எல்லா ஆட்டங்களிலும் அவர்தான் வெற்றி பெறவேண்டும் என்பது அவரது ஆவல். ஆனால், நல்ல தன்மை படைத்தவர். பிறருக்கு உபகாரம் செய்வதிலேயே எப்பொழுதும் திருஷ்டி அவருக்கு. காலத்திலும் சகுனத்திலும் அவருக்குப் பிடிவாதமான நம்பிக்கை!

இவைகளையெல்லாம் நுழை நரியைப் போலப் பார்த்துக்கொண்டிருக்கும் சாதக ராவின் கண்களை நீங்கள் பார்க்கவேண்டுமே! அப்படியே ஜொலித்துக் கொண்டிருக்கும். எல்லா ஆட்டங்களிலும் வெற்றி பெற்று, லட்சக் கணக்கில் ஏன் சம்பாதிக்கக் கூடாது என்று நாக்கை நொட்டை விட்டுக்கொண்டு, சாதாரண பிடியாட்டச் சீட்டு ஆடி, ஐந்து ரூபாயை முதல் அரை மணிக்குள் இழந்துவிட்டு, அவர் போய்விடுவார்.

இப்பேர்ப்பட்ட கிளப்பில், நான் மெம்பராக வேண்டுமா என்று எண்ணினேன். எண்ணி, லாபம்

என்ன? இக்கரைக்கு அக்கரை பச்சைமாதிரிதான் இருக்கும். ஆனல், இக்கரையும் அக்கரையும் ஒன்றுதான்.

குதிரைப் பந்தயத்தில் ஈடுபட்டிருக்கும் இந்த நண்பர்கள், 'ரேஸ்' முடிந்து கிளப்புக்கு வரும் காட்சிதான் விநோதமாயிருக்கும். கிண்டிக்குப் போகிற போது, இவர்கள் நாலைந்து பேர்களாகச் சேர்ந்து, மோட்டார் காரில் போவார்கள். வருகிற பொழுது ஜட்கா வண்டியில் வருவார்கள். கிளப்புக்குள் நுழையும் பொழுது, திருடனுக்குத் தேள் கொட்டினது மாதிரி, ஒருவர் மற்றவரோடு பேசாமல், தனித் தனியாக வருவார்கள். முகத்தில் ஈயாடாது. வீட்டுக்குச் சாப்பிடப் போகமாட்டார்கள்.

'என்ன, பிர்! என்ன ஜயிப்பு?' என்று கேட்டால், 'ஜயித்தவர்கள் பதில் சொல்லவேண்டிய கேள்வி அல்லவா இது! ஆகவே, இந்தக் கேள்விக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்?' என்று நாசூக்காகப் பதில் சொல்லிவிடுவார்.

மெம்பர்கள் எல்லோருமே, நல்ல 'பிராணிகள்'. குதிரைப் பந்தயத்தைத் தவிர, அவர்களிடம் வேறு எந்தத் துர்ப்பழக்கமும் கிடையாது. ஒவ்வோர் சமயம் ஒரு சனதனிப் பேர்வழி காந்தியையும் காங்கிரஸையும் திட்டுவார். அந்தச் சமயத்தில், மற்ற எல்லோரும் அவரை, மேலே விழுந்து மொலுங்குகளாகப் பிடுங்கி எடுத்துவிடுவார்கள். வெறும் வார்த்தையால்தான்!

## 42. கடல் வெளிக் கதை

எந்த மணலா யிருந்தாலும் சரி, மணலைக் கண்டால், எனக்குப் பிரம்மானந்தம். அதுவும், கடல் வெளி மணல் என்றால், அது ஒரு தெவிட்டாத காட்சி.

'மனம் கலங்கினால் மரணம். மலை கலங்கிப் போனால் மணல்.' வணங்கா முடி மன்னனைப் போல, ஆகாயத்தைத் துளைத்துக்கொண்டு வளர்ந்த மலை, மாயமாக, மணலாக மாறிப் போய்விடுகிறது. மலையிலே ஏற முடியாத பலவீனர்கள் எல்லாரும், பழி வாங்குவதைப் போல, மணலை மிதித்து மிதித்து நடந்து, ஆத்ம திருப்தி அடையப் பார்க்கிறார்கள்.

மனிதன் மணலைப் பழிவாங்க எண்ணினாலும், அது பலிப்பதில்லை. மனிதன் அதை மிதிக்க மிதிக்க, மணல் விலகிக்கொள்ளுகிறது. எவ்வளவுக் கெவ்வளவு, சத்தியாக்கிரஹியைப் போல, மணல் சகித்து விலகிக்கொள்ளுகிறதோ, அவ்வளவுக் கவ்வளவு, மிதித்து நடப்பவன் கால்களுக்கு உபத்திரவம்தான்.

மணலை அதன் இனத்தை விட்டுப் பிரிக்க எண்ணங்கொண்டாலும் முடியாது. சிறு மணல், பெரு மணல், சலங்கை மணல், என்னென்ன வகைகள் மணலில் இருக்குமோ அவைகள் எல்லாம் ஒட்டிக்கொண்டு வாழ்கின்றன. தெரியாத்தனமாக, யாராவது மணலைப் பிரித்து, உடம்பில் ஏற்றிக்கொண்டுவிட்டால், 'ஏன் என்னை என் சகோதர சகோதரிகளை விட்டுப் பிரித்தாய்?' என்று கோபித்துக்கொள்ளுவதைப் போல, அது உடம்பை 'நம நம' வென்று பிடுங்கி எடுத்துவிடுகின்றது.

எத்தனை ஆயிரம் பேர்கள் மணலை மிதித்தால் என்ன? அது விலகிக் கொடுத்துக்கொண்டேதான் இருக்கிறது. ம ண லி ன் இளக்கமும் அடக்கமும் எனக்கு வரப்படாதா என்று நான் ஏங்குவதுண்டு. 'மிதித்தது தவறுதான்' என்று சொல்லுவதைப் போல, மனிதர்கள் நமஸ்காரம் செய்து படுத்துக் கொண்டால், அவர்கள் மிதித்ததை யெல்லாம் மறந்து, மணல் அவர்களுக்கு மிருதுவான படுக்கையாக மாறி விடுகிறது. மணலின் பெரும் புத்தியும் அன்பும் ஏன் எனக்கு வரப்படாது என்றும் நான் வருந்துவதுண்டு.

மலையை வெல்லுவதற்கு உலகில் மனிதர்கள் உண்டு. மணலை வெல்லுவதற்கு யாராலும் முடியாது. மலைக்கு சர்வாதிகாரியின் செருக்கு இருக்கிறுப் போலத் தோன்றுகிறது. மணலோ, தொண்டர் அடிப் பொடி. அடியார்க்கும் அடியார்களாக இயங்கும் பொருள்களின் பேரில் யாரும் ஆதிக்கம் செலுத்த முடியாது. முயன்ருல், கால் வலிக்கும்; உடல் பத றும்; மனம் சலித்துப்போகும்.

என்றைக்காவது ஒரு நாள், நான் மணலைப் போல ஆகமாட்டேனு என்று எண்ணிக்கொண்டே, கடல் வெளி மணலில் நடப்பேன். ஆனுல், மனிதக் கூட் டங்கள் மணலைப் படுத்துகிற பாட்டைக் கண்டால், எனக்குக் கண்ணில் நீர் பெருகும்.

'வாடா இங்கே, நல்ல மணலா யிருக்கிறது! உன் கைவரிசையைப் பார்த்துவிடுகிறேன்!' என்று ஒரு வன் மற்றவனைச் சண்டைக்கு இழுக்கும்போது, என் உடம்பு நடுங்கும். கைவரிசையைக் காண்பிப்பதற்கு, நல்ல மணல் வேண்டுமாமே! மனிதர்களும் புத்திசாலி கள்தான்! கைவரிசையைக் கட்டாந்தரையில் காண்

பித்து, உடம்பிலே காயங்களை உண்டாக்கிக்கொள்ளக் கூடாதாம்!

சீட்டுக் கச்சேரிப் பெரியார்கள், தங்கள் ஆத்திரத்தையும் சூரத்தனத்தையும் காண்பிக்கையில், சீட்டை வளைத்துத் தரையில் நொறுக்குகிறார்கள். தரை மணலாக இல்லாமல் போனால், அவர்களுடைய கை என்ன ஆகும்?

சென்னை கடல்வெளி மணலிலே சில இடங்கள் உண்டு. அவைகளின் பேரில் எனக்கு ரொம்பவும் பரிதாபம். அங்கேதான், பிரசங்கங்களுக்குக் கூட்டம் கூடுகிறார்கள். மஹாத்மாவின் பேச்சும் அங்கேதான்; துராத்மாவின் பேச்சும் அங்கேயே. தேசபக்தனும் அங்கே பேசுகிறான். வாழ்க்கையை விலைக்குப் பேரம் செய்பவர்களும் அங்கேதான் உளறுகிறார்கள். இவ்வளவையும் கேட்டும், மணலுக்குப் பொறுமை ஏற்பட்டிருக்கிறது. எனக்கு வரவில்லையே!

நல்ல இடத்தில் நல்ல காரியத்தைத்தான் செய்ய வேண்டும் என்ற மரியாதை உண்டு. அபத்தம் முதல் ஆபாசமான காரியங்களையெல்லாம், அழகுபடப் படர்ந்து கிடக்கும் மணல் வெளியில் செய்யத் துணியும் மனிதர்களை என்ன செய்கிறது?

இவ்வாறு எண்ணங்கள் தோன்றும் பொழுதெல்லாம், என் மனதுக்கு நிம்மதி ஏற்படுவதற்காக, 'வெள் அலைக் கைகளைக் கொட்டி முழங்கும்' கடலையே பார்த்துக்கொண்டிருப்பேன். அங்கே, இந்த ஆபாசங்களெல்லாம் நேர முடியாதல்லவா?

பார்த்தவுடனே, பளிச்சென்று ஓர் ஆனந்தம் உண்டாகும். இயற்கையின் மாண்பு உள்ளத்திலே சரேலென்று ஓடும். சலிக்கச் சலிக்கப் பார்த்தாலும்,

ஓரே வெள்ளம்! நீரெல்லாம், பாய் விரித்துப் படுத்துக்கொண்டு உறங்குவதைப் போன்ற காட்சி. கண்ணுக்கு எவ்வளவு இனிமை!

ஜல மேல் நடக்கலாம் என்றார் தாயுமானவர். நீரின் பேரில் சவாரி செய்கிற வித்தையை மனிதன் கற்றுக்கொண்டுவிட்டானே! கடல், தரையைப் போல ஆகிவிட்டதே! கட்டமரம் என்று நான் எண்ணுவதில்லை. அதில் செல்லுபவர்களை செம்படவர்கள் என்றும் கருதுவதில்லை. கட்டமரம் என்ற குதிரையின் பேரில், கடலில் திக்விஜயம் செய்து, கப்பம் வசூலிக்கும் அரசிளங் குமரர்கள் என்று நான் அவர்களைப் பற்றி மனோராஜ்யம் செய்வேன்.

இந்த மாதிரி எண்ணத்தோடு, கடலை நோக்கிக் கொண்டு, கவலை யெல்லாம் போனது மாதிரி, ஒருநாள் மாலை உட்கார்ந்துகொண்டிருக்கையில், புதிதாக திடீரென்று ஒரு கவலை உண்டாயிற்று. 'உடம்பு தள்ளல்லே' என்று சொல்லிக்கொண்டே காந்தி, நாடு முழுதும் ஏன் இப்பொழுது சுற்றிக்கொண்டிருக்கிறார் என்ற கவலை தோன்றிற்று.

'ஏ, சத்தியமே! ஏ, அஹிம்சையே! நீங்கள் இரண்டு பேரும் ஒன்றாகச் சேர்ந்து, உன்னதமாக விளங்கும் ஒரு இடமாவது, ஒரு கூட்டமாவது இந்தியாவில் இருக்கிறதா?' என்று தேடிக்கொண்டே காந்தி விடாமல் சுற்றுப் பிரயாணம் செய்கிறாரா?

இந்த மாதிரி நினைத்ததுதான் தாமதம். சுமார் பதினைந்து வருஷமாகச் சந்திக்காத நண்பர், 'நீங்களா அங்கே போர்க்கள வியூகம் செய்வதைப் போல, யோசனையோடு உட்கார்ந்துகொண்டிருக்கிறது?' என்று சொல்லிக்கொண்டே, என் இரண்டு கைகளை

யும் பிடித்து, பலங்கொண்ட வரையிலும் குலுக்கி விட்டார்.

'உங்கள் அஹிம்சை கோஷ்டியைச் சேர்ந்தவனு யிருந்தால், என் கைகளில் வலு இருக்காது' என்று சிரித்தார்.

'நீங்கள் எவ்வளவு குலுக்கினுலும், என் கைகள் உங்கள் கைகளோடு வந்துவிடவில்லையே!' என்றேன்.

'அஹிம்சைக்காரர்களுக்கு இந்த வாய்தான் மிச்சம்' என்ருர்.

இந்தப் பேச்சுக்கு, பதில் சொல்லிக்கொண்டே போனுல், சாரமிருக்காதல்லவா?

'ஏன் ஸார், உங்கள் காந்தியின் அஹிம்சை, ஒரு நாளும் நிலைக்கப் போவதில்லை' என்று நண்பர் ஆசீர் வாதம் செய்தார். எனக்கு வருத்தம். அஹிம்சை நிலைக்கப்போவதில்லை என்று ஆசீர்வாதம் செய்ததில், அல்ல. யோசனை செய்யாமல், நண்பரும் அவரைப் போன்ற மற்றவர்களும், இவ்வாறு சளசளவென்று பேசுகிருர்களே என்று வருத்தம்.

'அஹிம்சைதான் காந்தி கண்டெடுத்த பொக் கிஷமா யிருக்கட்டும். உண்மை பேசுதல் என்பது அவர் கண்டுபிடித்ததல்லவே? அது உலகத்தில் இப் பொழுது நிலைத்திருக்கிறதா? தைரியம் என்பது அவர் கண்டதா? அது எத்தனை பேர்களிடம் இருக்கிறது? கருணை, பொறுமை போன்ற உத்தம குணங்களை முன்னேர்கள் கண்டுபிடித்தார்களே, அவைகள் எவ்வளவு தூரம் நிலைத்து இருக்கின்றன?' என்றேன்.

'என்ன விதண்டாவாதம்?' என்ருர்.

'விதண்டாவாதமில்லை. அஹிம்சை என்ற தன்மைக்குத் தேவையும் பக்குவமும் ஏற்பட்டால், தானே நிலைத்துப்போகிறது. தேவை என்று தோன்றச் செய்வதுதான் உத்தமர்களின் வேலை. அதற்கு மேல், அவர்களால் ஒன்றும் செய்ய முடியாது. உண்மை பேசவேண்டும் என்றதின் தேவையைப் பெரியோர்கள் உலகத்துக்கு உணர்த்தலாம். உண்மை பேசும்படியாக, எல்லாரையும் அவர்கள் செய்ய முடியாது. நல்ல தன்மைகளை, தேவையான குணங்களைக் காப்பாற்றிப் பரிபாலித்து நல்ல பயன்களை அடைந்து, அவைகளை அனுபவிக்கவேண்டியது சமாஜத்தின் கடமையாகும்' என்று நீண்ட பிரசங்கம் செய்துவிட்டேன்.

'இவ்வளவு பிரசங்கம் பண்ணுகிற உங்கள் குரலிலும் ஆத்திரம் குடிகொண் டிருக்கிறதே!' என்று சொல்லி நண்பர் சிரித்தார்.

'நீங்கள் ஆத்திரம் என்று குறிப்பிடுவதை, நான் வருத்தம் என்று சொல்லுகிறேன். உரக்கச் சொன்ஞல், அது ஆத்திரமாகாது. மெதுவாகச் சொன்ஞலும், அது சாந்தமாகாது. ஆவல் என்பதை ஆத்திரமாகப் பலர் கொண்டுவிடுகிருர்கள். சீக்கிரம் பலன் கிடைக்கவேண்டும் என்பது ஆவல். அதை ஆத்திரம் என்றும் சொல்லலாம். பெரியார்கள் சொல்லுவது மாதிரி, இந்த மண்ணுலகம் மனித உலகமாக மாற வேண்டும் என்பது என் ஆத்திரம்' என்றேன்.

'துப்பாக்கி லோகம் என்ரு சொன்னீர்கள்?' என்று சிரித்துக்கொண்டே நண்பர் கேட்டார்.

'உங்களுக்கு எல்லோருக்குமே ஒருவித மயக்கம். இயற்கையானவைகளை விட்டுவிட்டு, கட்டுக்கு

அடங்காமல் கற்பனை செய்தால், மனிதன் உருப்பட மாட்டான். சதா காலமும் அவன் இருட்டிலே தடவிக்கொண்டே வெளிச்சத்தைப் பார்க்காமல் இருக்கவேண்டியதுதான்' என்றார் அவர்.

'கட்டுக் கடங்காத கற்பனைக்கார காந்தியை உலகம் ஏன் கும்பிடவேண்டும்?' என்று கேட்டேன்.

'கும்பிடுவது உலகத்தின் வழக்கம். அந்த வழக்கம் கெடாம லிருப்பதற்காக காந்தியைப் பிடித்துக் கொண்டு அது தொங்குகிறது' என்று அனாயாசமாய் நண்பர் பதில் சொன்னார்.

'மனிதர்களிடம் உங்களுக்கு இவ்வளவு மதிப்பா?' என்று நான் சொல்லி முடிப்பதற்குள், நண்பர் உத்தரவு வாங்கிக்கொண்டார்.



## 43. சுதந்திரமும் நிர்வாகமும்

மனிதன் ஒரு விநோதமான பிராணி. கற்பனை செய்து பார்க்க முடியாத உயர்ந்த தன்மைகள் அவனிடம் இருக்கின்றன. இதைப்போலவே கட்டுக்கடங்காத துர்க்குணங்களும் அவனிடம் காணப்படுகின்றன. மனிதனுடைய நல்ல தன்மைகளைப் பார்த்தால், அரசாங்கமே தேவையில்லை போலத் தோன்றுகின்றது. கெட்ட குணங்களைக் கவனித்தாலோ, ஒன்றுக்கு மேல் ஒன்ருக, அடுக்கு அடுக்காகப் பத்து அரசாங்கங்கள் கண்கொட்டாமல் வேலை செய்தாலும் போதாதோ என்று நினைக்கும்படியாக இருக்கிறது.

பொருமை, காமம், பழிவாங்கும் தன்மை, அற்பத்தனம், பொய், பலாத்கார ஆசை— இவைகள் எல்லாம் ஒருவனிடம் அளவுக்கு மிஞ்சி இருக்குமாயின், எந்த மதத்தின் மூலமாக, எந்த அறவழி மூலமாக, எந்த கலை நாகரிகக் கவர்ச்சியின் மூலமாக, அவனைச் சீர்படுத்த முடியும்? அவனை மனிதனுக்கும் வேலை மிகவும் கடினம். அவனை அடக்கியாளத்தான் முடியும். சுயமரியாதை உணர்ச்சியைக் கொண்டு, படிப்படியாக அவனை உயர்த்தலாம் என்பதற்கும் வழி இல்லை. அதற்குள் எவ்வளவு சேதம் உண்டாகிவிடுமோ?

இவ்வளவு வரையில்தான் சுதந்திரத்தைக் கொடுக்கலாம் என்று யார் நிர்ணயம் செய்கிறது? பெரியார்கள் சேர்ந்து ஆட்சிபுரியும் அரசாங்கம் என்று சொல்லலாம். பெரியார்கள் என்ற வார்த்தையை உபயோகப்படுத்தும் பொழுது, பல விபரீதங்கள் தோன்றக்கூடும். பொதுஜன வாக்குகளைக் கொண்டு

தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள், அரசியலில் பெரியார்கள் என்பது ஜனநாயக தத்துவத்தின் தாத்பரியமாகும். ஆனால், இத்தகைய தேர்தலில், பல ஆபத்துகள் இருக்கின்றன. அவைகளில், நமது கவனம் தற்போது செல்லவேண்டியதில்லை.

ஜனநாயக தத்துவத்தை ஒப்புக்கொண்டவர்கள் தர்ம சங்கட நிலைமையில் அகப்பட்டுக்கொள்ளுகிறார்கள். ஒவ்வொரு மனிதனுடைய பூரண சுதந்திரத்தையும் காப்பாற்றிக் கொடுப்பது ஜனநாயகத்தின் நோக்கமாகும். ஆனால், அந்த நோக்கத்தை, அரசாங்கம் என்ற சாதனத்தின் மூலமாக, பூர்த்தி செய்ய முடியுமா? அனுபவத்திலே கண்டதென்ன?

எல்லா மனிதர்களும் அவயவங்களில் ஒன்று போலத்தான் இருக்கிறார்கள். ஆனால் குணங்களில், வல்லமைகளில், ஒன்றுபோல இல்லவே இல்லை. ஆகவே, குணங்களில் உயர்ந்த ஒருவனுக்குக் கொடுக்கக்கூடிய அளவில், குணங்களில் மட்டமானவனுக்கும் சுதந்திரத்தைக் கொடுக்க முடியுமா? முடியாது. ஆகவே என்ன நேருகிறது? சமூகத்தில் வளையவரும் போக்கிரிக்கு எவ்வளவு சுதந்திரம் கொடுக்க முடியுமோ, அவ்வளவு சுதந்திரத்தைத்தான் உத்தமனுக்கும் கொடுக்க முடிகிறது. இதற்குத்தான் சட்டத்தின் மூலமாக சுதந்திரம் என்று பெயர். சட்டம் என்று சொன்னவுடனே, அரசியல் நிர்வாகம் நமக்கு நினைவு வருகிறதல்லவா? தனி நபரின் பூரண சுதந்திரத்தையும் அரசியல் நிர்வாகத்தையும் இணைத்து ஒன்றுபடுத்துவது மிகவும் கடினமான வேலையாகும்.

மேலே சொன்னது எவ்வளவு கஷ்டமான வேலை என்பதைப் பெரும்பான்மையோர் உணர்வதே

யில்லை. சுதந்திரத்தை, பிறருக்கு இம்சை செய்யும் சுதந்திரம் வரையிலும் நீட்டிக்கொண்டு போய், பலர் வீண் கூப்பாடு போடுகிறார்கள்; மனித புத்தியையும், மனித சகாயத்தையும், பக்குவம் பெறாத கரடுமுரடா யிருக்கிற சாதனங்களையும், அமைப்புகளையும் கொண்டு அரசியல் நிர்வாகம் நடத்துபவர்கள் நீடித்த காலத்துக்கு நல்ல பெயர் எடுப்பதே யில்லை. எடுக்க வும் முடியாது.

ஜனங்களுக்குள்ளே பல ரகங்கள் இருக்கிறார்க ளல்லவா? சுதந்திரப் பிரியர்கள் இருக்கிறார்கள். எப்பொழுதும் அவர்களுக்கு உயர்ந்த வாழ்வைப் பற்றித்தான் கவலை. சாப்பாட்டு ராமன்கள் இருக்கி றார்கள். ராமன் ஆண்டாலும் ராவணன் ஆண்டா லும் அவர்களுக்குச் சாப்பாடுதான் பிரதானம். காதல் மயம் உலகம் என்று சதா ஜபம் செய்துகொண்டிருக் கும் யுவர்களும் யுவதிகளும் இருக்கின்றனர். இவர் களுக்குத் தர்ம சாஸ்திரமும் சட்ட வரையறுப்பும் தங் கள் இன்பமயமான வாழ்க்கைக்குத் தடைகளாகத் தோன்றினால், அதில் ஆச்சரியமே இல்லை. கிழவர் களுக்கும் சோம்பேறிகளுக்கும் எதுவும் அது இருந்த இடத்தைவிட்டு நகராமலிருந்தால் போதும். துன் மார்க்கர்களுக்கு எவ்வித மரியாதை எல்லைகளும் இனிப்பதில்லை. தங்கள் ஆசைகளையும் பொதுஜன வாழ்க்கையையும் அவர்கள் பொருத்திப் பார்ப்பதே யில்லை.

இன்னும் பலர் இருக்கின்றனர். எந்த நல்ல காரியம் செய்தாலும், அதற்குத் தடையா யிருக்க வேண்டும் என்பதுதான் அவர்களுடைய வாழ்க்கைச் சபதமாகக் காணப்படுகிறது. இத்தனை வகை ஜனங்க

ளுக்குள் பொதுவான லட்சியத்தையும் பொதுவான செயல் முறையையும் பொதுவான மனச்சாட்சியை யும் வளர்ப்பது எளிதான காரியமல்ல. அகம்பாவத்தை மனச்சாட்சி என்று கொண்டு மயங்குவதும், அற்பத் தனத்தைச் சிக்கனம் என்று கொள்ளுவதும், அவ தூறு பேசுவதை விஷயம் என்று மதிப்பதும் சாதா ரண நிகழ்ச்சிகளாக இருக்கும் பொழுது, தனி மனி தன் பூரண சுதந்திரத்தை, அரசியல் என்ற சாதனத் தின் மூலமாக அடையவே முடியாது.

ஜன சமூகத்தின் நலனுக்காக அரசாங்கம் இருக் கிறது என்பது ஜனநாயகக் கொள்கை. அரசியலுக் காகத் தனி நபர்கள் தங்கள் சுதந்திரத்தை ஓரளவு விட்டுக்கொடுக்க வேண்டும் என்று அபேதவாதம் சொல்லுகிறது. இந்த இரண்டு சந்தர்ப்பங்களிலும் அரசியல் நிர்வாகிகள் எவ்வாறு நடந்துகொள்ளுவது? அவர்களுடைய நிலைமை மிகவும் சங்கடமான நிலைமை. பாலைப் பார்ப்பதா? பானையைப் பார்ப் பதா? இரண்டையும்தான் கவனித்துப் பார்த்துக் கொள்ளவேண்டும் என்று யாரும், எளிதிலே, வாய் கூசாமல் சொல்லிவிடலாம். அதிகமாகச் சூடு ஏற்றி னால், பானை பட்டென்று விட்டுப்போகும். சூடு ஏற்ரு விட்டால், பால் காயாது.

அதனாலேதான் சுதந்திரத்தையும் அரசியல் நிர் வாகத்தையும் இணைத்து அழகான வகையில் வைப் பது மிகவும் அசாத்தியமான காரியம். பொதுஜனங் கள் தங்கள் லட்சியத்திலும் நடத்தையிலும் மிகுதி யும் உயரவேண்டும். பொதுஜனத் தொண்டு செய் யக்கூடிய சந்தர்ப்பங்களை அதிகப்படுத்த வேண்டும். படிப்பு முறையின் மூலமாக, தனி மனிதனுக்குப்

பொறுப்பையும் உற்சாகத்தையும் உண்டாக்க வேண்டும். அவனுடைய அடக்கத்தையும் சிரமப்பட்டு வளர்க்க வேண்டும். கூடுமான வரையிலும் துர்க் குணங்களை ஜன சமூகத்தினின்று வெருட்ட வேண்டும். அப்படிச் செய்தால்தான் உண்மையான சுதந்திரத்தை ஒவ்வொருவனும் அனுபவிக்க முடியும். அந்த நிலைமை ஏற்படும் வரையில் அரசியல் நிர்வாகம் தான் பெரிதாகக் கண்ணில் படும். ஏனென்றால், நிர்வாகத்தின் மூலமாக, (பலாத்காரம் உபயோகித்தாலும்) குழப்பத்தையும், அராஜகத்தையும், பொறுப்பில்லாத் தன்மையையும் வளரவொட்டாமல் தடுக்கலா மல்லவா?

சுதந்திரப் பிரியர்கள் என்று தாங்க முடியாமல் கூச்சல் போடுபவர்கள் தங்கள் நல்ல நடத்தையின் மூலமாகவும் அன்பின் மூலமாகவும் துர்ஜனர்களைக் கெட்ட வழியிலிருந்து திருப்ப முயன்றாலொழிய, அரசியல் நிர்வாகம் கொடுமை கொண்டதாகவும் சுதந்திரப் பறிமுதலாகவும்தான் கண்ணில் பட முடியும். எப்பொழுது போலீஸ்காரன் அவசியம் என்று ஏற்பட்டுவிடுகிறதோ, அந்த நிலைமையில், சுதந்திரத்தைப் பற்றிப் பேசுவது படுகுழி மோசமாகும். அந்த நிலைமை ஏற்படாமல் இருந்தால்தான், அரசியலில் பலாத்காரம் குறையும். உண்மையான சுதந்திரத்தையும் கண்ணால் காண முடியும்.

அந்த நிலைமையை ஏற்படுத்திக் கொடுக்க முடியாதவர்கள் காங்கிரஸ் ஆட்சியையும் பொதுவாக அரசியல் நிர்வாகத்தின் கொடுமையையும் பற்றிப் பேசுவது வெறும் விஷமத்தனமாகும்.

## 44. மனித வர்க்கத்தின் தவப் பயன்

**மண்ணில் இன்பங்களை விரும்பிச் சுதந்திரத்தின்
மாண்பினை இழப்பாரோ?**

இவ்வாறு நமது பாரதியார் பாடினர். சுதந்திரத்தின் மாண்பு, மண்ணில் இன்பங்களைக் காட்டிலும் பெரிது. சந்தேகமே யில்லை. ஆனாலும், சோர்வினலோ, தோல்வியினலோ அல்லது வேறு காரணங்களினலோ, மனிதர்கள் அடிக்கடி இந்த உண்மையை மறந்துவிடுகிறார்கள். மறந்துவிட்டு, மண்ணில் இன்பங்களை வேண்டுகிறார்கள். இன்பங்களை நாடிக் கொண்டே போய், கடைசியாக, ஊண், உறக்கம், (பிரஜா) உற்பத்தி என்ற மூன்று தொழில்களுக்குள் வாழ்க்கையைச் சுருக்கிக்கொண்டு, மனிதன், மிருகத்தைப் போல ஆகிவிடுகிறான்.

இந்தச் சமயங்களில், மனிதன் பேசுவது மனித பாஷையாக இருக்கலாம். ஆனல் அவனுடைய மனப்பான்மையும் இலட்சியமும் மனிதத் தன்மையைக் கொண்டதா யிருப்பதில்லை. சிந்தையில் கள் விரும்பி, சிவ சிவ என்று ஜபம் பண்ணினல், எப்படி யிருக்கும்? இதைப் போலத்தா னிருக்கும் வீழ்ச்சியடைந்த மனிதனுடைய வாழ்வு. இத்தகைய மனிதனுக்கு மானம் என்பதே அர்த்தமாவதில்லை. தியாகம் என்பது விளங்குவதில்லை. தைரியம் என்றால் பயப்படுகிறான். மனச்சாட்சி என்றால், நாக்கை நீட்டிக் கேலி செய்கிறான். சிரிக்கிறான். எதற்கும் குதர்க்கம் செய்கிறான்.

உயர்ந்தது, தாழ்ந்தது என்ற பாகுபாடு இல்லாமல் கேவலமான வாழ்க்கையைக் கைக்கொள்கிருன்.

இந்த நிலைமையைக் கண்டு, மனம் பொங்கினவராக, பாரதியார் சுதந்திரத்தின் மாண்பை எடுத்துரைக்கிருர். இதையே, காந்தி வேறு வகையில் சொல்லுகிருர். மண்ணில் ஏழு நாள் வாழ்க்கைக்காக மானத்தை (ஆத்மாவை)ப் பறிகொடுத்துவிடலாமா என்று, காந்தி, மனவேதனையோடு, கேட்கிருர். பாரதியாரா யிருந்தால் என்ன, காந்தியாக இருந்தால் என்ன, டால்ஸ்டாயாக இருந்தால் என்ன? உத்தம மனிதர்கள் யாவரும் ஒரே பாஷையில்தான் பேசுகிருர்கள். அவர்களின் வாழ்க்கையும் அநேகமாக ஒன்றுபோலத்தா னிருக்கிறது.

தேவாசுர யுத்தம் என்பது வெறும் புராணக் கற்பனை அல்ல. அந்த யுத்தம் நமது உள்ளங்களில், ஓய்வில்லாமல், நடைபெற்று வருகின்றது. நல்லதுக்கும் கெட்டதுக்கும், உயர்வுக்கும் தாழ்வுக்கும், சுதந்திரத்தின் மாண்புக்கும் இன்ப சுகத்துக்கும், சதா போராட்டம்தான். இந்தப் போராட்டத்திலே, சில சமயங்களில் ஒரு கட்சிக்கும், மற்றும் சில சமயங்களில் வேறு கட்சிக்கும் வெற்றி உண்டாகும். ஆனுல், இது வரையில் மனித வர்க்கத்துக்குள் நிகழ்ந்த போராட்டத்தை அலசிப் பார்த்து, முடிவைச் சொல்லுவோமானுல், உயர்ந்த தன்மைகள்தான் வெற்றி பெற்று வருகின்றன என்று சொல்லவேண்டும்.

எப்படி என்று பார்ப்போம். மனிதன் எவ்வளவு மோசமான வாழ்க்கை வாழ்ந்து, பொய் முதலிய சூதுகளை உபயோகப்படுத்திக்கொண்டு, கேவலமாகப் போய்விட்டாலும், 'மானமில்லையா? மனச்சாட்சி

இல்லையா? மனிதனைப் போல நீ ஏன் நடக்கக் கூடாது?' என்று கேட்டால், அவன் ரோஷப்படுகிறான். நல்ல வாழ்க்கை வாழ்ந்து, ஜனங்களின் மரியாதையையும் அன்பையும் ஏன் பெறக்கூடாது என்று ஒரு நிமிஷமாகிலும், அவனுக்கு எண்ணம் உண்டாகிறது. இந்த அஸ்திவார உணர்ச்சி, வெற்றிக்குப் போதாதா? இந்த உணர்ச்சி யாரிடம் இல்லையோ, அந்த மனிதனைப் பற்றி அதிகமாகக் கவலைப்பட்டுப் பயனில்லை. ஆனால், இந்த மாதிரி உணர்ச்சியில்லாத பேர்வழி ரொம்பவும் அபூர்வம்.

மண்ணில் இன்பங்களை விரும்பும் தன்மை, மனிதனைக் கவ்விக்கொள்ளும் காலையில், அவன் எல்லா வகைகளிலும் தடுமாற்றம் அடைகின்றான். அவன் பேச்சு ஆஷாடபூதிப் பேச்சு; அவன் நடை, போலி நடை; அவனுக்குத் தெய்வம் கிடையாது; தத்துவம் கிடையாது. அவனுடைய குறி உடல் இன்பம்: அந்த இன்பத்துக்கு எல்லை கிடையாது. அந்த இன்பம் நாகரிகத்துக்கும் நகைச் சுவைக்கும் கட்டுப்பட்டதல்ல. அந்த இன்பத்தை இப்படித்தான் அடையவேண்டும் என்ற வரன்முறை அவனுக்குக் கிடையாது. எந்தச் சாதனத்தைக் கொண்டும் இன்பத்தை அடையலாம் என்பது அவனது எண்ணம். எனவே, அவன் ஒரு சமயம் கோழையாக இருக்கிறான்; இன்னொரு சமயம், குரூர சுபாவத்தைப் பெற்று, அசுரனைப் போலக் காரியத்தைச் செய்கிறான். உயர்ந்த இலட்சியம் இல்லாமல் போகவே, அவனுக்குத் தர்ம சாஸ்திரத்தில் நம்பிக்கை இல்லாமல் போய்விடுகிறது.

இந்தியன், மண்ணில் இன்பங்களை விரும்பி, சுதந்திரத்தை மறந்து, மானத்தைப் பறிகொடுத்து

விட்டு, தர்ம சாஸ்திரத்தை இகழ்ந்து, கோழையாக வாழ்ந்து வந்தான். இதே 'மண்ணில் இன்பங்களை' வேறு வகைகளில் நாடிய இங்கிலீஷ்காரன் கோழை இந்தியனை அடக்கியாண்டு, பொறுக்க முடியாத குரூரத்தன்மையைக் காண்பிக்கத் துவக்கினன். இதற்கு சேனுபதி டயர் அத்தாட்சி. இந்தியன் கோழையாக இருந்தான் என்பதற்கு அவனுடைய அடிமைத்தனம் அத்தாட்சியாகும். மனிதன் என்ருல் கோழையா? மனிதன் என்ருல் குரூர சுபாவம் படைத்த அசுரனு? மனிதன் கோழையுமல்ல, அசுரனுமல்ல என்பதைத்தான் காந்தி, தமது வாழ்க்கையின் மூலமாகவும், உபதேசத்தின் மூலமாக வும் உலகத்துக்குத் தெளிவுபடுத்தி வருகிருர்.

உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால் வரையில், ஆயுத அலங்காரபாணியாக நிற்கும் இங்கிலீஷ்கார னேடு போர் தொடுத்து வெற்றி பெற முடியாது என்றும், ஆகவே கோழையாக இருந்தால்தான், உயிர் தப்பிப் பிழைக்கலாம் என்றும் தீர்மானம் செய்து கொண்டிருந்தான் இந்தியன். அடிமையினிடம் குரூர மாகத்தான் நடந்துகொள்ள வேண்டும் என்று இங்கி லீஷ்காரன் தீர்மானம் செய்துகொண்டான். ஆனல், நிறம் எப்படி இருந்தால் என்ன? இரண்டு பேர்களும் மனிதர்கள்தானே? இரண்டு பேர்களும் இயற்கை யின் குழந்தைகள்தானே?

இயற்கையிலே, அடிமையும் கிடையாது, அசுர னும் கிடையாது என்பது இயற்கைத் தாயின் நீண்ட காலத் தீர்ப்பு. அதையே, நிரந்தர உண்மை என்றும் சொல்லலாம். இந்த உண்மையை, இயற்கைத் தாய், மனித வர்க்கத்துக்கு, எப்படி எடுத்துக் காண்பிப்பது?

இதற்காக, அவள் ஒரு செல்லக் குழந்தையை அனுப்பினுள். அந்தக் குழந்தைதான் காந்தி. அவர் மனித வர்க்கத்தின் தவப் பயன்.

காந்தியை, பழைய வழக்கப்படி, அவதாரம் என்று அழைக்க எனக்கு இஷ்டம் இல்லே. பண்டைக் காலத்தில், அவதாரங்களுக்கும் பலாத்காரத்துக்கும் ஒருவகைத் தொடர்பு இருந்திருக்கிறது. புராணங்களின் மூலமாக, அவதார புருஷர்களின் பேரில், வண்டி வண்டியாக அற்புதங்களே ஏற்றியிருக்கிருர்கள். அற்புதச் செயல் செய்யாதவன் அவதாரம் ஆகமாட்டான் என்ற அசட்டு நம்பிக்கை, நம்மவர்களிடம் தோய்ந்து கிடக்கிறது. காந்தி, கற்பனேக் கடங்காத அற்புதங்களேச் செய்து காண்பித்திருக்கிருர் என்ருல் வைதிக மனப்பான்மை கொண்டவர்கள் சிரிப்பார்கள்; வெள்ளேக்கார நாகரிகத்தில் மோகம் கொண்டவர்கள் நம்பமாட்டார்கள். நம் நாட்டு அரசியல்வாதிகள் தலேயை அசைப்பார்கள்.

மனிதன் அடிமையாகவோ, அரக்கனுகவோ இருக்கத் தேவையில்லே என்ற அழியாத உண்மையை, சத்திய சோதனேயின் மூலமாக உலகத்துக்கு விளக்கிக் காண்பிப்பதற்காக, இயற்கைத் தாயால் அனுப்பப்பட்ட **அசல் மனிதன்**, காந்தி என்று சொல்லுவதில் தான், எனக்கு விருப்பம். மனித உருவம் படைத்தவன் மனிதத் தன்மையோடு இருந்து, வாழ்ந்தால் போதுமானது என்பது என் கட்சி. மனிதன் ஆகாயத்தில் பறந்து செல்லத்தேவையில்லே. மனிதன், பாதாளத்தில் புகுந்து உழலவும் தேவையில்லே. மனிதன் மனிதனுக பூமியில் வாழ்ந்தால் போதுமானது. இதைத் தான் காந்தி தெளிவாகக் காண்பித்து வருகிருர்.

'மனிதன் மனிதனுக வாழ்ந்தால் போதுமானது என்கிறீர்களே? அதற்கு என்ன அர்த்தம்? மனிதன் என்றுல் என்ன? இவன்தான் மனிதன், இப்படி வாழ்ந்தால்தான் மனித வாழ்வு என்று, யார், எவ்வாறு நிர்ணயம் செய்கிறது? இவைகளைத் திருத்தமாகவும் தெளிவாகவும் சொல்லாமல், மனிதன் மனிதனுக வாழ்ந்தால் போதுமானது என்று பொதுப்படையாகப் பேசி, தப்பித்துக்கொள்ளப் பார்க்கிறீர்களே!' என்று நீங்கள் நியாயமாய் என்னைக் கேட்கலாம்.

மனிதன் யார்? எப்படி உருவத்தில் இருப்பான் என்பதில் யாருக்கும் சந்தேகம் இருக்காது. ஆனுல், 'மனித உருவம்' கொண்ட மனிதன், மனிதனுக வாழ்கின்றுனு என்பதுதான் கேள்வி. மனிதன் மனிதனுக வாழ முயன்று வருகிறுன் என்றுதான் பதில் சொல்ல முடியும். மனிதனுக எப்படி வாழ்வது என்பதை தீர்க்கதரிசிகளும், கவிகளும், கலைவல்லார்களும், ஸயன்ஸ் மேதாவிகளும் மற்றும் பெரியார்களும் தங்கள் முயற்சி ஆராய்ச்சியாலும் மேதையின் மூலமாகவும் எல்லை கோலி, உலகத்துக்கு எடுத்துக் காண்பிக்கின்றுர்கள். மிருகப் பிராயமாக இருக்கும் மனிதன், மனிதனுக மாறி, அதற்குத் தகுந்தாற்போல வாழக் கற்றுக்கொள்ளுவதற்கு நீண்ட காலம் பிடிக்கும்; பெருமுயற்சி வேண்டும்; சலிப்பில்லாத ஊக்கம் தேவை; சரியான முறை மிகவும் அவசியமாகும்.

மனிதன் **மனிதனுக** வாழ்வதற்குச் சரியான முறையை காந்தி கண்டுபிடித்துவிட்டார் என்பது என் எண்ணம். அந்த முறைக்குத்தான் சத்தியாக்

கிரகம் என்று பெயர். மனிதனுக்கும் மிருகத்துக்கும் என்ன வித்தியாசம் என்ருல், மனிதனுக்குப் பகுத்தறிவு உண்டு, மிருகத்துக்குப் பகுத்தறிவு இல்லை என்று எல்லோரும் தாராளமாகச் சொல்லுகிருர்கள். ஆனல், அந்தப் பகுத்தறிவுக்குப் பெருமை கொடுத்து, அதைப் பெரிதும் பயன்படுத்திக்கொண்டு, மனிதன் அழகாகவும் ஆனந்தத்துடனும் வாழக்கூடிய முறையை, அவ்வளவு தெளிவாகவும் உருவாகவும், காந்திக்கு முன், யாரும் எடுத்துக் காண்பிக்க வில்லை.

மிருகத்துக்குத் தன்னடக்கம் கிடையாது. மனிதன் தன்னடக்கத்தின் இருப்பிடமாக இருக்கவேண்டும். மனிதனுக்கு யோசனைத் திறன் இருக்கவேண்டும். பலாத்காரத்தைக் காண்பித்துப் பாய்வது, மிருகத்தின் இயல்பு; பதுங்கியும் பலாத்காரத்துக்கு அடங்கியும் வாழ்வது விலங்கின் இயல்பு. இந்த இரண்டு தன்மைகளும் மனிதனிடம் இருக்கப்படாது. இருந்தால், அவன் மிருகப் பிராயமான மனிதன். அவன் மனிதத் தன்மை கொண்ட மனிதன் அல்லன். மனிதத் தன்மை இன்னதென்று, உங்களால் கற்பனை செய்துகொள்ள, இப்பொழுது முடிகிறதல்லவா? மனிதத் தன்மை இன்னதென்றும், அதை அடையப் பெறும் சாதனமும் வழியும் இவை யென்றும் காண்பித்த மகான் காந்தி. இவைகளை, காந்தி தமது வாழ்க்கையின் மூலமாகவும் உபதேசத்தின் மூலமாகவும் உலகத்துக்குத் தெளிவுபடுத்தி வருகின்ருர்.

பதுங்கியும் பலாத்காரத்துக்கு அடங்கியும், உயிரைப் பெரிதாக மதித்து, மானத்தைச் சிறிதாகக் கொண்டு வாழ்பவன் அடிமை. பலாத்காரத்தைக்

கொண்டு, பாய்பவன் அரக்கன். இந்த இரண்டு தன்மைகளும் இல்லாதவன்தான் மனிதன். சத்தியாக்கிரக முறைதான் மனித வழி. இதுதான் காந்தியின் உபதேசத்தின் சாரமாகும். அன்போடு இசைந்த உண்மை என்பது சத்தியாக்கிரகத்தின் அர்த்தம். உலகத்தை இதுவரையிலும் பாழ்படுத்தி வருபவை பலாத்காரமும் பொய்யும். இவை யிரண்டையும் அன்பாகவும் உண்மையாகவும் மாற்றிவிட்டால், மனிதன் மனிதத் தன்மை அடைந்துவிடுகிருன் என்பது காந்தியின் தீர்மானம்.

கோபம், பலாத்காரம், ஆசை, பொய் முதலியவைகள் மனிதனிடத்தில் சுபாவமாகவே இருப்பதாகத் தோன்றும்பொழுது, அவைகளை மீறி, மனிதன் எவ்வாறு காரியம் செய்ய முடியும் என்று கேட்கலாம். சோம்பல் மனித இயல்பு போலத் தோன்றவில்லையா? சோம்பலை ஒழித்துச் சுறுசுறுப்பைக் கைக்கொண்டிருக்கும் மனிதன், கோபம் முதலியவைகளைக் கொன்றுவிட முடியும். அதற்குப் பயிற்சி வேண்டும். அவ்வளவுதான். அந்தப் பயிற்சி முறைக்கு சத்தியாக்கிரகம் என்று பெயர்.

இந்த முறையை ஏற்று வாழ்பவர்கள்தான் உண்மையான மனித சுதந்திரத்தை அடைய முடியும். நம்முடைய ஹிந்து தத்துவத்தில் எதை எடுத்துக் கொண்டாலும் பொதுவாக ஒன்றைக் காணலாம். உஷ்ணம் சீதளம், வெறுப்பு விருப்பு முதலிய இரட்டைகளுக்குக் கட்டுப்படாதவன்தான் ஆனந்தத்தை அடைய முடியும் என்கிருர்கள். இதையே, காந்தி சத்தியாக்கிரகம் என்கிருர். இதையே, பண்டைப் பெரியார்கள் முக்தி நிலை என்ருர்கள்.

'இது பரமார்த்திக தத்துவத்தைப் போலிருக்கிறதே; இதுதான் நமது நாட்டைக் கெடுத்தது' என்று மளமளவென்று பேசி முடித்துவிடாதீர்கள். இந்த உலகத்தில், சத்தியாக்கிரக முறையால்தான், மனிதன் பெருமையுடனும், சுதந்திரத்துடனும், ஆனந்தத்துடனும் வாழ முடியும். பெருமையும், சுதந்திரமும், ஆனந்தமும் எப்படி உண்டாகின்றன என்று பார்ப்போம்.

சத்தியாக்கிரகத்தினுல் மனிதனுக்குப் பொறுமை உண்டாகிறது. பொறுப்பு ஏற்படுகிறது. சோம்பல் தொலைகிறது. சுறுசுறுப்பு அவனைத் தூண்டும். எதையும் தாங்கலாம், தாங்கவேண்டும் என்ற சக்தியும் ஆவலும் ஏற்படுகின்றன. ஒவ்வொரு இடையூறைத் தாங்குவதாலும் தாண்டுவதாலும் மனிதனுக்கு வெற்றி ஆனந்தம், வெள்ளப் பெருக்கு எடுக்கின்றது. உடல், பொருள், ஆவி, எந்த வகையிலும் பிறனுக்குத் தீமை செய்யவில்லை என்ற சமாதானத்தால், மனிதன் இயல்பாகப் பெருமை கொள்ள முடியும். எவனையும் அடக்கப் பார்க்கவில்லை, எவனுக்கும் அடங்கவும் இல்லை என்ற உணர்ச்சியும் அனுபவமும் ஏற்பட்டுவிடுமாயின், அதைக் காட்டிலும் உயர்ந்த பொக்கிஷம் மனிதனுக்கு வேண்டுமா?

சத்தியாக்கிரகி தன் கையால் யாருக்கும் கூழைக் கும்பிடு போட மாட்டான்; யாரையும் குத்திக் கொல்லவும் மாட்டான். சத்தியாக்கிரகியின் பார்வையில் துராங்காரம், ஆசை, அச்சம் முதலியவை இருக்கமாட்டா. சத்தியாக்கிரகியின் கண்ணில் தெளிவும், கருணையும், ஆனந்தமும் தாண்டவமாடும். சத்தியாக்கிரகியின் நாக்கில் பொய் வராது; அநாக

ரிகம் தலைகாட்டாது. அபத்தம் இருக்காது. சத்தி யாக்கிரகியின் உள்ளத்தில் அச்சம் இருக்காது; அன்பு தான் இருக்கும். அவன் உள்ளத்தில் சத்தியம் குடி கொண்டு இருக்குமாதலால், சஞ்சலமே இருக்காது. சத்தியாக்கிரகி ஒரு நாளும் தொடை நடுங்க மாட் டான். சத்தியாக்கிரகி தெய்வத்தை நம்பினவன் ; எனவே, அவன் ஒரு நாளும் திக்கற்றவனல்லன் ; தோல்வி என்பதும் அவனை அணுகாது.

சத்தியாக்கிரகிக்குச் சேனை பலம் தேவையில்லை. அவனே சேனை ; அவன் மனச் சாட்சியே அவனுக்குத் துணை. சத்தியாக்கிரகியின் மனச் சாட்சியில் ஆசை யின்மை, அச்சமின்மை, துன்புறுத்தாமை, முதலி யவை அரசு செலுத்துவதால், அவன் யாருக்கும் தீமை செய்ய முடியாது. சத்தியாக்கிரகியின் மனச் சாட்சிக்குத்தான் மனச்சாட்சி என்று உண்மையாக, பெயர் கொடுத்து அழைக்கலாம். சத்தியாக்கிரகியை யாரும் அடிமைப்படுத்த முடியாது. அடிமைப் படுத்தினாலும், அவ்வாறு செய்தவனுக்குச் சத்தியாக் கிரகியினால், லாபம் ஏற்படாது. ஆகவே, சத்தி யாக்கிரகியை அடிமைப்படுத்த நினைப்பது பயனற்ற வீண் வேலையாகும்.

அரசியல் போராட்டத்தில், சத்தியாக்கிரகத் துக்குச் சட்ட மறுப்பு என்று பெயர். கல்வி முறை யில், அதற்கு வர்தா திட்டம் என்று பெயர். வயிற் றுப் பிழைப்பு வாழ்க்கையில், சத்தியாக்கிரகத்துக்குக் குடிசைத் தொழில் என்று பெயர். சமூகப் பிரச்னை யில் சத்தியாக்கிரகம் பெண் விடுதலையை நாடுகிறது ; தீண்டாமையை ஒழிக்க, கங்கணம் கட்டிக்கொண் டிருக்கிறது. ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமைக்கு அஸ்தி

வாரமாக விளங்குகின்றது. உலகப் போர் நேராமல் தடுத்து, மனித வர்க்கத்தைக் காப்பாற்றி, அழியாமல் அதைப் பார்த்துக்கொள்ளுவதற்கு, சத்தியாக்கிரகம் ஒப்பற்ற சாதனம்.

சத்தியாக்கிரகி அற்பனுமல்ல, அகம்பாவியுமல்ல. சத்தியாக்கிரகி கோழையுமல்ல, கொலைஞனுமல்ல. சத்தியாக்கிரகி அசடுமல்ல, அயோக்கியனுமல்ல. சத்தியாக்கிரகி அடிமையுமல்ல, அரக்கனுமல்ல. **சத்தியாக்கிரகி அசல் மனிதன்.** அந்த அசல் மனிதன், காந்தி. அவரை நேரில் கண்டு, சித்தம் தெளியும் பாக்கியம் பெற்ற நம்மவர்கள் பெரிய புண்ணியசாலிகளே!

